# الصراع بين الإيمان والمادية

## – تأملات فى سورة الكهف –

## لفضيل الشيخ ابى الحسن علي الندوى رحمه الله

ترجمه الى اللغة التاملية

## علي ابو خالد العمري

---

# இஸ்லாம் VS உலகாயதம்

**சூரத்துல் கஹ்ஃப் - ஓர் ஆய்வு**

## மௌலானா அபுல் ஹஸன் அலீ நத்வி (ரஹ்)

**தமிழில்**

**K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி (அபூ காலித்)**

---

بسم الله الرحمن الرحيم

# மத்திய கிழக்கில் ஏற்பட்டுவரும் மாற்றங்கள்

**மௌலானா நத்வி (ரஹ்) அவர்களின்**

**முன்னுரை**

அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் எல்லாம் வல்ல அல்லாஹ் ஒருவனுக்கே எல்லாப் புகழும். ஸலாத்தும் ஸலாமும் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் - அனைவர் மீதும் பொழிவதாகுக!

சூரத்துல் கஹ்ஃபு - ஓர் ஆய்வு எனும் தலைப்பில் நான் எழுதிய கட்டுரைத் தொடர்களை ‘அல் முஸ்லிமூன்’ அரபிப் பத்திரிக்கை ஹிஜ்ரி 1377 - 78 ஆம் ஆண்டில் தொடர்ந்து வெளியிட்டது. நான்கு இதழ்களில் அந்தக் கட்டுரைத் தொடர் வெளிவந்தது.

அந்தக் கட்டுரைகள் மார்க்கக் கல்வி வட்டாரங்களில் நல்ல மதிப்பையும் வரவேற்பையும் பெற்றன. சிறப்பான இந்தக் குகை அத்தியாயத்தைப் படிப்பதற்கும் அதனைப் புதிய கோணத்தில் சிந்திப்பதற்கும் பெரும்பாலான வாசகர்களை அந்தக் கட்டுரைத் தொடர் தூண்டியிருக்க வேண்டும். இன்றைய நவீன காலத்தின் குழப்பங்களை எதிர்ப்பதற்கான உறுதியையும் ஆற்றலையும் அந்த அத்தியாயம் வழங்கும் பாங்கினை அனைவரும் அறிந்து மனநிறைவு அடைந்தார்கள்!

அன்று வெளிவந்த அந்தக் கட்டுரைத் தொடர்கள் வெகுகாலமாக **அல்முஸ்லிமூன்** பத்திரிக்கையின் பழைய இதழ்களில் புதைந்த புதையலாகவே கிடந்தன! அவற்றை மறுஆய்வு செய்து மேலும் பல புதிய கருத்துகளைச் சேர்த்து நூல்வடிவம் கொடுப்பதற்குப் போதிய கால அவகாசம் எனக்குக் கிடைக்காமல் இருந்தது.

இறுதியில் இஸ்லாமிய அரபு உலகில் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. மேலும் மனிதனின் இதயமும் அறிவும் உலகாயதக் கொள்கையினால் குழப்பம் அடைந்து வருவதையும் நான் கண்டேன். மக்கள் அந்தக் கொள்கையின் மாயையில் ஏமாறுவதையும் குழப்பம் நிறைந்த -பகட்டான அதன் பிரச்சாரத்தினால் உலகாயதச் சிந்தனை மேலும் தீவிரமாகப் பரவி வருவதையும் பார்த்தேன். இறைநம்பிக்கைக்கும் உலகாயதக் கொள்கைக்கும் நடக்கும் போராட்டம் - பொதுவாக உலக அரங்கில், குறிப்பாக கிழக்கத்திய அரபு உலகில் புதிய முறையில் காட்சியளிக்கத் தொடங்கியிருப்பதும் எனக்குப் புலப்பட்டது!

அந்தக் கட்டுரைத் தொடர்களை நூலாக வெளியிட வேண்டும் எனும் எனது எண்ணத்திற்கு இத்தகைய புதிய சூழ்நிலைகள் ஊக்கமும் உறுதியும் அளித்தன.

மேலும் இந்த இடைக்காலத்தில் வேறுபல ஆய்வுகளும் சிந்தனைகளும் எனது மனத்தில் உதித்தன. இந்த அத்தியாயத்தைப் புதிய பல கோணங்களில் மீளாய்வு செய்யும் பாதைகளும் எனக்குப் பிறந்தன.

அவ்வாறே இந்தக் கட்டுரைத் தொடர்களைப் புதுப்பித்து எழுதி, புதிய பல கருத்துகளையும் அவற்றோடு இணைத்திட நான் உறுதி கொண்டேன். ஆராய்ச்சி மதிப்பை அதிகப்படுத்தும் வகையில் குகைத் தோழர்கள், மாமன்னர் துல்கர்னைன் ஆகியோரின் வரலாறு தொடர்பான ஒப்பீட்டாய்வுகளையும் சேர்த்தேன்.

இந்த ஆராய்ச்சிகள் அனைத்தும் - பிற ஆய்வாளர்களை இந்த அத்தியாயத்தை மேலும் தொடர்ந்து ஆராய் வதற்கு நிச்சயம் தூண்டக் கூடியவையாகும். திருக்குர்ஆனின் பேரற்புதத்தையும் அது எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் மனித குலத்திற்கு வழிகாட்ட வல்லது என்பதையும் நன்கு உறுதிப்படுத்தக் கூடியவை யாகும்.

அல்லாஹ்வையே முழுதும் சார்ந்தவர்களாய், ஈமான் எனும் இறைநம்பிக்கையின் தணல் அணைந்திடவில்லை எனும் நம்பிக்கை உடையவர்களாய், பயனளிக்கக்கூடிய பணியை - அறிவுப்பூர்வமான- நேர்மையான சேவையை ஏற்றுக்கொள்கிற தகுதியை மனித இதயம் இன்னும் இழந்துவிடவில்லை எனும் எண்ணம் உடையவர்களாய் இந்தச் சமுதாயத்தினரின் இதயங்களையும் குர்ஆனையும் இணைத்துக் கொண்டிருக்கும் கயிறு அறுந்திட வில்லை எனும் உறுதியுடையவர்களாய் இப்போது இந்நூலை நாங்கள் வெளியிடுகிறோம்.

“ ஆயினும் (நபியே) அறிவுரை கூறிக்கொண்டிருப்பீராக. ஏனெனில் அறிவுரை இறைநம்பிக்கையாளர்களுக்கு பயனளிக்கக் கூடியதாகும் (குர்ஆன் 51 : 55)

25 ஷவ்வால் 1390 ஹிஜ்ரி **அபுல் ஹஸன் அலீ நத்வி**
லக்னோ

# இந்தப் போராட்டத்தில் உங்கள் பங்களிப்பு என்ன?

## - பதிப்புரை -

மனித சமுதாயத்தில் பற்பல மதங்களும் கட்சிகளும் இஸங்களும் உலாவருகின்றன. அவை ஒவ்வொன்றும் தனிச்சிறப்பு பெற்றிருப்பதாக, தனியொரு கொள்கை வைத்திருப்பதாக வாதிடுகின்றன. அமைப்பு ரீதியிலும் அணுகு முறையிலும் பரஸ்பரம் அவை மோதிக்கொள்வதையும் காணலாம். ஆனால் அந்த மதங்கள், இஸங் கள், கட்சிகள் அனைத்தும் ஒரே ஒரு கொள்கையிடம் ஏமாந்து அதன் சூழ்ச்சிவலையில் வீழ்ந்து விட்டது என்பதே உண்மை. அதுதான் **உலகாயதம்** அல்லது **பொருள்முதல் வாதம்** எனும் கொள்கை!

உலகத்திலுள்ள எல்லா மதங்களும் கட்சிகளும் இந்தப் பொருள்முதல் வாதக் கொள்கையின் மாயையில் மயங்கி ஏமாந்து விட்ட நிலையில் அதனை எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கும் ஒரே மதம் -ஒரே மார்க்கம் இஸ்லாம் மட்டுமே! மக்களின் சிந்தனையைச் சீராக்கி இறைநம்பிக்கையை வலுப்பெறச் செய்யும் வல்லமை இறுதி வேதம் திருக்குர்ஆனிடம் மட்டுமே உள்ளது.

இதனை இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு உலகாயதக்கொள்கை என்ன என்பதை அறிவது அவசியம். உலகாயதம் என்பது ஒரே வார்த்தையில் சொல்வதானால் நாத்திகவாதம் ஆகும். ஆனால் ஏதோ ஓர் உயர் சிந்தனைபோல - புதிய தத்துவம் போல அது உலா வருகிறது.

போலிப்பகட்டுடன் பவனிவரும் இந்த நச்சக்கொள்கை இதுதான்: “மனிதன் தோன்றுவதற்கு முன்பே இந்த உலகம் இருக்கிறது., இந்தப் பேரண்டம் இருந்தது. அதிலுள்ள சடப்பொருட்களும் இருந்தன. மனிதன் தோன்றியது அதன் பிறகுதான். எனவே பொருள் எனும் **METERIAL** தான் முந்தியது. மனிதனின் மூளையிலிருந்து பிறந்த கருத்து பிந்தியதே! மனிதன் எந்தக்கருத்தை - கொள்கையை மேற்கொண்டாலும் அதனை உருவாக் கக்கூடிய அசல் காரணி பொருள்தான். மனிதனின் சிந்தனையும் அவனது வாழ்க்கை அமைப்பு முழுவதும் பொருளை அடிப்படையாகக்கொண்டே அமைகிறது!

- இவ்வாறு தனது நாத்திகக் கொள்கைக்கு ஒரு போலியான பீடிகை அமைத்துக்கொண்டு இவ்வாறு தனது விஷத்தைக் கக்குகிறது உலகாயதம்:

இந்தப் பேரண்டத்திற்கும் இதிலுள்ள சடப்பொருட்களுக்கும் முன்பே இறைவன் இருக்கிறான் என்பதும் **SPIRTUAL** -ஆன்மாவின் நலனை மனிதன் பேணி வாழ்ந்தால்தான் அந்த இறைவனின் அருளைப் பெற முடியும் என்பதும் வெறும் கற்பனையே!

மனிதன் மேற்கொள்ளும் கருத்தை அடிப்படையாக்கொண்டே அவனது வாழ்க்கை அமைகிறது. பொருளை உருவாக்குவதும் அது இயங்கும் முறைகளை நிர்ணயிப்பதும் மனித நம்பிக்கைதான் அல்லது மனிதக் கருத்து தான் என்று ஆன்மீகவாதிகள் கூறுவது தவறாகும்"

-இதுதான் உலகாயதத்தின் உயிரற்ற-சாபக்கேடான கொள்கை. போலிக்கவர்ச்சி காட்டி மனம் கவரும் நாச காரச் சிந்தனை!

நாத்திகக் கொள்கைக்கு இப்படியொரு பகட்டான பீடிகை அமைத்துக் கொடுத்த உலகாயதவாதிகளின் தீய நோக்கம் என்ன தெரியுமா? மனிதனின் உள்ளத்திலிருந்து இறைநம்பிக்கை முற்றாக எடுபட்டுப்போக வேண்டும் என்பதே! மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு முற்றிலும் துண்டிக்கப்பட்டு மக்கள் அனைவரையும் நாத்திகர்களாய் மாற்றிட வேண்டும் என்பதே! அதற்காக அவர்கள் கையில் எடுத்துக்கொண்ட ஆயுதம்தான் இந்தப் **பொருள்முதல் வாதக் கொள்கை!**

மனித வாழ்க்கையைப் அழிவிலும் நாசத்திலும் ஆழ்த்தும் வகையில் கொடிய நஞ்சினை இந்தக் கொள்கை யினுள் மறைத்து வைத்துள்ளனர் இந்த உலகாயத வாதிகள். அது இதுதான்:

"உலகில் பிறந்தோம்., வாழ்கிறோம். இந்த வாழ்க்கைக்குப் பிறகு பிறிதொரு வாழ்க்கை என்பதில்லை! எனவே உலகில் வாழும் வரையில் இன்பமாக வாழ்ந்துவிட்டு செல்வோம். மனம் விரும்பிதை உண்போம்., மனம் விரும்பியதைச் செய்வோம்., இறைவனாவது, அவன் தண்டிப்பான் என்பதாவது, அதுவெல்லாம் வெறும் கட்டுக்கதை. யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை - இதுதான் உலகாயதம் விரித்து வைக்கும் சூழ்ச்சிவலை.

இந்த உலகாயதக் கொள்கை பிறந்தது- கி.பி. 7 ஆம் நூற் றாண்டில் ஐரோப்பாவின் வழிதவறிய கிறிஸ்தவ சமூகச் சூழ்நிலையில்தான்! அன்றைய உலகில் கிறிஸ்வத மதத்தை வழிநடத்திச் சென்ற தலைவர்களின் தவ றான சிந்தனையும் கண்மூடித்தனமான செயல்முறையும்தான் உலகாயதக் கொள்கை தோன்றிடக் காரணமாகி விட்டது - இவ்வுண்மையை இந்நூல் தெளிவாக - வரலாற்று ஆதாரத்துடன் எடுத்துரைக்கிறது.

மதத்தைத் தவறாகப் பயன்படுத்தும் மதவாதிகள் யார்? இறைநெறியின் தூயவடிவம் எது? அதன் தேவை என்ன என்றெல்லாம் வேறுபடுத்திப் பார்த்து இறைநெறியின் யதார்த்த நிலையையும் அதன் இன்றியமையாத் தன்மையையும் அறிந்திட அவர்கள் முன்வரவில்லை. அதற்கான நேரிய சிந்தனையும் பொறுமையாக ஆய்வு செய்யும் நிதானப் போக்கும் அவர்களிடத்தில் இல்லை. இருந்திருந்தால் உண்மையான இறைநெறியை - இஸ்லாம் எனும் உன்னத மார்க்கத்தை ஏனைய போலி மதங்களைப்போல் பாவித்துத் எதிர்த்துப் பேசத் துணிந்திருக்க மாட்டார்கள். இவ்வளவு மூர்க்கத்தனமாகவும் முழுவெறியுடனும் நாத்திகக் கொள்கையைப் பரப்பிட முனைந்திருக்க மாட்டார்கள்.

உலகாயதக் கொள்கை தோன்றிய பின்னர் - அதன் அடிப்படையிலான தீய கலாச்சாரம் தலையெடுத்த பின்னர் நீண்ட காலம் வரை ஏக இறைவனையும் இறைநம்பிக்கையின் எதார்த்த நிலையையும் இந்த உல காயத வாதிகள் மறுக்கவில்லை என்பதே இதற்குச் சான்றாகும்!

ஆண்டாண்டு காலமாகப் பேணிப் பாதுகாக்கப்பட்டு வந்த இறைநம்பிக்கையில் - இதய ஆழத்தில் வேர் பிடித்திருந்த இறையச்சத்தில் சில தடுமாற்றத்தை ஏற்படுத்தியது, இந்தத் தீய கொள்கைதான்! இதுவே இன்றைய உலகத்தில் காணப்படும் பெரும் குழப்பத்திற்கும் நாசத்திற்கும் வித்திட்டு விட்டது!

இந்த உலகாயதச் சிந்தனையும் அதன் தீய அம்சங்களும் ஏற்படுத்தி வரும் அழிவையும் நாசத்தையும் கானும்பொழுது - இறுதி நாளின் **குழப்பம்** என்று நபிமொழிகளில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள **தஜ்ஜாலியக் கலாச்சாரத்தின்** ஆரம்பம் இதுவாக இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது!

அத்தகைய தஜ்ஜாலியக் கலாச்சாரத்தைச் சரியாக இனங்காட்டி, அதை எதிர்க்கும் போராட்டக் குணத் திற்கு, இந்தக் **குகை அத்தியாயம்** வலுவூட்டுகிறது.

இந்த அத்தியாயத்தை ஆய்வு செய்து, சிந்தனைக்கு விருந்தாக அமையும் பல உயர் தத்துவங்களையும் வாதப் பிரதிவாதங்களையும் அடுக்கடுக்கான ஆதாரங்களையும் அள்ளித்தரும் இந்நூல் **வித்தியாசமான ஓர் ஆய்வு நூலாகும்!**

இறைவனை நம்பிட இறைவனே மனிதனுக்கு அளித்த சான்றுகள் பல. அவற்றுள் எண்ணற்ற நபிமார்களும் அவர்கள் வழங்கிய வேதங்களும் மிக முக்கியமான சான்றுகளாகத் திகழ்கின்றன. அதிலும் இறுதித்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாய்மையான வாழ்க்கையும் சீரான வழிகாட்டுதலும் குறிப்பாக இவ்வுலகத் திற்கு அவர்கள் வழங்கிவிட்டுச் சென்ற இறுதி வேதம் அல்குர்ஆனின் அற்புதத் தன்மையும் இறைநம்பிக்கைக்கு

மிக வலுவான ஆதாரங்களாக நீடித்து வருகின்றன. இந்த உண்மைகளை மிகத்தெளிவாக எடுத்துரைக்கிறது இந்நூல். இந்நூலின் மூலம் -

இஸ்லாத்தின் அடிப்படைப் போதனைகள் மட்டும்தான் மனித குல சீர்திருத்த வரலாற்றில் நீடித்து நின்று வெற்றி காணும் ஆற்றல்மிக்கவை என்பதை எல்லோரும் அறிந்திட வேண்டும். அத்துடன் இஸ்லாத்திற்கும் உலகாயதத்திற்கும் நடக்கும் இத்தொடர் போராட்டத்தில் நாம் அனைவரும் இஸ்லாத்திற்காகக் குரல் கொடுத்து அதன் சீர்மிகு வழிகாட்டல் இத்தரணியில் மேலோங்கிடப் பாடுபட வேண்டும்., அதற்கு இந்நூல் வழிகாட்ட வேண்டும் என்பதே எமது பேரவா.

## என்னை எழுத்துப் பணிக்குக் கொண்டுவந்த நூல்

இதுதான் நான் மொழியாக்கம் செய்த முதல்நூல். கடையநல்லூர் ஃபைஜு ல் அன்வார் அரபிக்கல்லூரியில் ஆசிரியராக நான் பணியாற்றிபோது தப்ஸீர் ஜலாலைன் இரண்டாம் பாகத்திற்கு விரிவுரை வழங்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அதற்காக சூரத்துல் கஹ்ஃபின் விரிவான விளக்கத்தைத் தேடினேன். நூலகத்தில் **மௌலானா அபுல் ஹஸன் அலீ நத்வி அவர்களின் புகழ்பெற்ற அஸ் ஸிறாவு பைனல் ஈமானி வல் மாத்திய்யா** எனும் அரபி நூல் கிடைத்தது.

எழுதத் தொடங்கிய பிறகு இந்நூலின் உருது மொழியாக்கத்தை அனுப்புமாறு மௌலானா அவர்களுக்கு - லக்னோ தாருல் உலூம் நத்வதுல் உலமா அரபிக் கல்லூரி முகவரிக்குத் தபால் எழுதினேன். உடனே அதை அஞ்சலில் அனுப்பி வைத்தார்கள். அதற்கு **மஅ்ரிகயே ஈமான் வ மாத்திய்யா** என்று பெயரிடப்பட்டிருந்தது.

மொழிபெயர்த்த பகுதிகளைப் **பிறை** மாத இதழுக்கு அனுப்பி வைத்தேன். சில மாதங்கள் தொடராக அவை வெளிவந்தன. பிறை ஆசிரியர், அந்தக் கட்டுரைத் தொடர்களைப் பாராட்டிச் சிறிது தொகையும் அன்பளிப்புச் செய்தார்கள். ஆனால் பல சூழ்நிலைகளால் மொழிபெயர்ப்புப் பணியை என்னால் தொடர முடியாதிருந்தது.

பின்னர் இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (ஐ.எஃப்.டி.)யில் திருக் குர்ஆன் மொழிபெயர்ப்புப் பணியில் சேர்ந்த பிறகு தொடர்ந்து எழுதி முடித்து மொழிநடையை ஓரளவுக்கு எளிமைப்படுத்தி 1986 ஜூலை மாதம் இந்நூலை வெளியிட்டேன்.

மௌலானா நத்வி (ரஹ்) அவர்களுக்கும் சில பிரதிகளை அனுப்பி வைத்திருந்தேன். பிறகு சில முக்கிய நிகழ்ச்சிகளுக்காகத் தமிழ்நாடு வந்த மௌலானா நத்வி, சென்னை புளூடைமன் ஹோட்டலில் தங்கி யிருந் தார்கள். அங்கு அவர்களைச் சந்தித்து அறிமுகமானதும் என்னை முதுகில் தட்டிக் கொடுத்துப் பாராட்டி எனது கல்வி வளர்ச்சிக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

இப்பொழுது மொழிநடையை மேலும் எளிமைப்படுத்தி கணினியின் துணையுடன் குர்ஆன் வசனங்கள், நபி மொழிகளை அரபியில் கொடுத்துப் பதுப்பொலிவுடன் இந்நூல் உங்கள் கைகளில் தவழுகிறது! எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே!

அல்லாஹ், நம் அனைவரின் பணிகளையும் உவந்தேற்றுப் பிழைகள் பொறுத்தருளி மறுவுலக வாழ்வில் சுவனப் பேறுகளை வழங்குவானாக!

**27 - 4 - 1426** | **K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி**
**உனைஸா** | **(அபூகாலித்)**

### முதல் பதிப்பின்

# வாழ்த்துரை

### மௌலானா V.U.A. யூசுப் அன்ஸாரி ஹஜ்ரத் அவர்கள்
### (முதல்வர், ஃபைஜு ல் அன்வார் அரபிக் கல்லூரி)

இஸ்லாம் Vs உலகாயதம் - சூரத்துல் கஹ்ஃபு ஓர் ஆய்வு எனும் இந்நூல், அறிவார்ந்த கொள்கைகளை எடுத்தியம்பும் ஆய்வு நூலாக அமைந்துள்ளது. இறைநம்பிக்கையின் அடிப்படையில்தான் இத்தரணி வாழ்க்கை அமைய வேண்டும்.,அதை விடுத்து இத்தரணி வாழ்வையே அடிப்படையாகக்கொண்டு வாழும் வாழ்க்கை, மனித குலத்திற்கு அமைதியையும் நிறைவையும் நல்கிடாது., அது வெறும் குழப்பத்தையும் கொந்தளிப்பையுமே உரு வாக்கும் எனும் கருத்தை மார்க்க, அறிவியல், வரலாற்றுச் சான்றுகளுடன் இந்நூல் அழுத்தமாக எடுத்து உரைக்கிறது.

இன்பம், துன்பம், வறுமை, பெருமை போன்ற வாழ்க்கையின் எந்த நிலையிலும் இறைநம்பிக்கையை அடிப் படையாகக் கொண்டு இயங்கும் வாழ்க்கைதான் உலகில் அமைதியை உண்டாக்கும் என்று சொல்லும்பொழுது

அங்கே உலகாயதத்திற்கும் இறைநம்பிக்கைக்கும் இடையே நெடிய போராட்டமே துவங்கிவிடுகிறது. அப்போராட்டத்தின் இறுதி வெற்றி இறைநம்பிக்கைக்குத்தான் எனும் உண்மையை இந்நூல் பெருமிதத்துடன் விளக்குகிறது.

இந்நூலாசிரியர் மௌலானா செய்யித் அபுல் ஹஸன் அலீ நத்வி அவர்கள் வாழும் அறிஞர்களில் மிகச் சிறந்த இஸ்லாமியச் சிந்தனையாளர்களில் ஒருவர்., இவர் லக்னோ நத்வத்துல் உலமா அரபிக் கல்லூரி யின் தலைவர். இவருடைய இணையற்ற ஆய்வுப் பணிகளுக்காக சவூதி அரசு 1980 இல் ஃபைஸல் விருதை வழங்கி இவரை கௌரவித்தது. காஷ்மீர் பல்கலைக்கழகம் இவருக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கியதன் மூலம் தனக்குச் சிறப்பு சேர்த்துக் கொண்டது. இன்னும் உலகளாவிய பல இஸ்லாமியக் கல்விக் கேந்திரங்களின் உறுப்பினராகவும் விளங்கி வருகிறார்.

அது மட்டுமல்ல, அகில இந்திய முஸ்லிம் தனியார் சட்ட வாரியத்தின் தலைவராகவும் இருந்து அரும் பெரும் சேவைகள் செய்து வருகிறார். இவர் வாழும் காலத்தில் நாமும் வாழ்கிறோம் என்பதே நமக்குப் பெருமைதான்!

அரபியும் உருதும் மௌலானாவின் கட்டளைக்காக கைகட்டி காத்திருக்கும்...! ஆம்! அந்த அளவுக்கு இந்த இரண்டு மொழிகளிலும் அவர் ஆழிய ஞானம் பெற்றுள்ளார். அரபி மொழியில் இவர் எழுதிய நூல்களைப் பார்த்து அரபுலகமே வியந்து போற்றுகிறது. அத்தகைய வியத்தகு வித்தக நூல்களில் ஒன்றுதான் **அஸ் ஸிறாவு பைனல் ஈமானி வல் மாத்திய்யா** எனும் நூல்! அந்த நூலின் மொழிபெயர்ப்புதான் உங்கள் கைகளில் தவழ்ந்து கொண்டிருக்கும் இந்நூல்!

இந்நூலை மொழிபெயர்த்த மௌலவி அப்ஸலுல் உலமா **K. J.** மஸ்தான் அலீ பாகவி, உமரி (அபூ காலித்) அவர்கள் துடிப்புள்ள இளம் ஆலிம்., அறிவுத்தாகம் நிரம்பியவர்., தேனீயைப்போல அறிவு நூல்களைத் தேடிப் பிடித்து கற்கும் ஆர்வம் கொண்டவர். அரபி மொழியில் நன்கு தேர்ச்சி பெற்றவர். எம்முடைய பைஜு ல் அன்வார் அரபிக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியவர். இப்பொழுது சென்னை இஸ்லாமிய நிறுவனத்தில் திருக் குர்ஆன் மொழியாக்கத் துறையில் பணியாற்றுபவர்.

மௌலானாவின் அரபி நூலை மௌலவி **K.J.** மஸ்தான் அலீ பாகவி அவர்கள் எளிய தமிழில் - ஏற்றமிகு நடையில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். இது போன்ற இன்னும் பல அரிய நூல்களை தமிழக மக்களுக்குத் தர வேண்டும் என்று பேரார்வம் கொண்டுள்ளார். எனவே அதிகம் அதிகம் இந்நூலை வாங்கிப் படியுங்கள்., அவரது ஆர்வத்தைத் தூண்டுங்கள்! இதுவே என் வேண்டுகோள்!

22 - 7 -1986 **தங்களன்புள்ள,**
**கடையநல்லூர்** **V.U.A. யூசுப் அன்ஸாரி**

**முதல் பதிப்பின்**

# அணிந்துரை

**மௌலவி காஞ்சி R. அப்துர் ரவூப் பாகவி**

மனிதன் உலகாயதப் போக்கின்பால் ஈர்க்கப்பட்டு அதனை மேற்கொண்டு வாழ்வது மனித வரலாற்றில் புதியதொரு நிகழ்ச்சியல்ல., என்றாலும் உலகாயதச் சிந்தனைக்குக் கொள்கை வடிவம் தந்து அதனை வலிமை மிக்க ஓர் இயக்கமாக மாற்றி அதன் அடிப்படையில் ஒரு பொருள்முதல் வாத வாழ்க்கை அமைப்பையே உலகெங்கும் நிறுவி வைத்திருப்பது நவீன மேற்கத்திய நாகரிகமேயாகும்.

இதற்கு முன்னரும் மனிதன் பல நேரங்களில் இறைவனையும் மறுமையையும் இறைமறைகளையும் இறைத் தூதர்கள் வாயிலாக வழங்கப்பட்ட வழிகாட்டுதலையும் மறுத்து வந்திருக்கிறான். எனினும் இந்த இறைமறுப்புக்கு - நாத்திகச் சிந்தனைக்கு சித்தாந்த, அறிவியல் ரீதியான அடிப்படைகளை அளித்து அதனை ஒரு வாழ்க்கை முறையாக, சிந்தனை செயல்பாட்டு அமைப்பாக- தன் கல்விமுறை, மக்கள் தொடர்புச் சாதனங்கள் மற்றும் தனது அரசியல் செல்வாக்கின் வாயிலாக - உலகெங்கும் பரப்பிவிட்டிருப்பது, பரப்பி வருவது மேலைக் கலாச்சாரமேயாகும்.

மேலை அறிஞர்களின் தவறான சிந்தனைப் போக்கும் மனிதனின் பிறப்பு மற்றும் வாழ்க்கைக் குறிக்கோள் தொடர்பான அவர்களின் தவறான கருத்தோட்டங்களும் மட்டுமே இத்தகைய நிலைக்குக் காரணம் என்று சொல்லிவிடமுடியாது.

மதவாதிகளின் தவறான போக்குகளும் செயல்பாடற்ற மந்தநிலையும், நவீன யுகத்தின் பிரச்னைகளை உணர்ந்து அவற்றுக்கான தீர்வுகளை இறைவழிகாட்டலின் வெளிச்சத்தில் எடுத்துரைக்க அவர்கள் தவறி விட்டதும்கூட இத்தகைய தீவிர இறைமறுப்புத் தத்துவங்கள் உருவாகி, வலுப்பெற்றிட வித்திட்டன.

இந்தத் தத்துவங்களில் சில அறியாமையின் காரணத்தாலும் உருவாயின., இவற்றுள் சில, தவறான மத நம்பிக்கைகளைக் கண்டு மருண்டுபொய் ஒட்டுமொத்தமாக இறைவழிகாட்டுதலையே நிராகரித்த காரணத் தாலும் உருவாயின! இவற்றுள் சில உண்மை யான இறை வழிகாட்டுதலை ஏற்பதிலிருந்து - ஏன் ஏறெடுத்துப் பார்ப்பதில் இருந்தும்கூட மனிதனைத் தடுப்பதற்காகத் திட்டமிட்டே உருவாக்கப்பட்டன!

மொத்தத்தில் நவீன மேற்கத்தியச் சிந்தனை, உலகாயதத்திற்கு இறைநம்பிக்கைக்கும் இடையே பெரிய தொரு போராட்டத்தை - நெடியதொரு மோதலை உருவாக்கி விட்டிருக்கிறது!

மதச்சார்பின்மை, தேசியவாதம், கம்யூனிஸம், முதலாளித்துவம் உட்பட அனைத்துக் கொள்கைகளுக்கும் - வெளிப்படையாகப் பார்க்கும்பொழுது எதிரெதிராகத் தோற்றமளிக்கும் அத்தனை நவீன சித்தாந்தங்களுக்கும் அடிப்படை, இந்தப் பொருள்முதல் வாதமும் இறைமறுப்புமே ஆகும்.

இந்தப் போலிப் பகுத்தறிவு வாதத்தையும் அஞ்ஞான இயக்கத்தையும் சித்தாந்த ரீதியாக எதிர்த்துப் போராடி, அறிவியல் பூர்வமாகவும் விருப்பு வெறுப்பற்ற விமர்சனக் கண்ணோட்டத்துடனும் தர்க்க ரீதியான அனுகு முறையுடனும் அதன் தீமைகளை உலகுக்கு விளக்கி அறிவுலகில் அதன் ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டு வதில் ஈடுபட்டுள்ள பேரறிஞர்களில் இஸ்லமியக் கல்வி நிறுவனமான நத்வதுல் உலமாவின் தலைவர் மௌலானா சையித் அபுல் ஹஸன் அலீ நத்வி அவர்களும் ஒருவராவார்கள்.

திருக் குர்ஆனின் குகைஅத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகள், கருத்துகள் குறித்து அன்னார் எழுதியிருக்கும் இந்த ஆய்வு நூல், உலகாயதத்திற்கும் இறைநம்பிக்கையின் அடிப்படையிலான நாகரிகத்திற்கும் இடையேயுள்ள அடிப்படைவேறுபாடுகளை நமக்குத் தெளிவாக எடுத்துரைக்கிறது. இவ்விரு வேறுபட்ட நாகரிகங் களுக்கும் கொள்கைகளுக்கும் நடைபெற்றுக்கொண்டிருக்கும் அசல் போராட்டத்தை நமக்கு விரிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

மனித குலத்தை நாசத்திலாழ்த்தும் போலிக்கொள்கைகள் எப்படிப் பளபளப்பான பொன்முலாம் பூசிக் கொண்டு மக்களை ஏமாற்றி வருகின்றன என்பதையும் இறைநெறியை விட்டு மக்களைத் தடுத்து அவர்களை ஏய்த்துப் பிழைக்க விரும்பும் எத்தர்கள்தான் இத்தகைய தகிடுதத்தங்களைப் புரிகின்றார்கள் என்பதையும்,

அவர்கள்தாம் உண்மையைப் போலியாகவும் போலியை உண்மை யாகவும் மக்களுக்கு உருமாற்றிக் காட்டும் கண்கட்டு வித்தைக் காரர்கள் - தஜ்ஜால்கள் - என்பதையும்,

இறைசக்தியின் மீது நம்பிக்கை வைப்பதிலிருந்து மக்களைத் தடுத்து வெளித்தோற்றத்தின் மீதும் கண் களுக்குப் புலப்படும் காரண காரியங்களின் மீதும் மட்டுமே நம்பிக்கை கொள்ளச் செய்யும் இத்தகைய மோச டிப் பேர்வழிகளின்- அவர்களால் உருவாக்கித் தரப்பட்ட போலிச் சித்தாந்தங்களின் மாய்மாலங்கள், பித்தலாட் டங்களில் இருந்து குகைஅத்தியாயம் எப்படி மனித குலத்தைக் காப்பாற்றவல்லதாய்த் திகழ்கிறது என்பதையும் தமக்கே உரித்தான நடையில் மௌலானா நத்வி அவர்கள் விளக்குகிறார்கள்.

மேலை நாகரிகம் தன் உச்ச நிலையில் இருந்தபொழுது எழுதப்பட்ட இந்நூல், இன்று மேலை நாகரிகத் தின் தவறுகளை, தகுதியின்மையை உணரத்தலைப்பட்டு விட்ட உலகில் - மாற்றுக் கொள்கை ஒன்றை, புதியதொரு வாழ்க்கைத் தத்துவத்தை தேடிக்கொண்டிருக்கும் நவீன உலகில் நேர்வழியின் ஓர் ஒளிக்கீற்றாகப் பரிணமிக்கிறது!

செல்லரித்துவிட்ட நவீன நாகரிகத்தின் தீமைகளை உணராமல் விட்டில் பூச்சிகளாய் அதில் வீழ்ந்து தன்னையே மாய்த்துக்கொண்டு வரும் இந்தியச் சமூகத்தில் - குறிப்பாக தமிழ்ச் சமுதாயத்தில் இந்நூல் புதிய தொரு சிந்தனை எழுச்சியை உண்டாக்கி தன் உலகாயதப் போக்கை மறுபரிசீலனை செய்யும்படி அதனைத் தூண்டிடும் என்று நாம் நம்புகிறேன். அத்தகைய நிலை உருவாகிட இறைவனை இறைஞ்சுகிறேன்.

ஒரு கொள்கைப் போராட்டத்தை விவிரிக்கும் இந்நூலை முடிந்த வரை எளிமைப்படுத்தி இனிய தமிழில் நமக்கு வழங்கியுள்ள என் அருமை நண்பர் மௌலவி **K.J.** மஸ்தான் அலீ பாகவி, உமரி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவிப்பதோடு இந்தக் கடினமான பணியினைச் சீர்திருத்த நோக்குடன் ஆற்றிடத் துணிந்தமைக்காக தமிழ் கூறும் நல்லுலகின் சார்பில் நன்றியையும் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

இந்நூலை ஆழ்ந்து படித்து, சிந்தித்திடவும் செயலாற்றிடவும் முன்வரும்படி சாதி மத வேறுபாடின்றி பொது மக்களையும் குறிப்பாக அறிஞர் பெருமக்களையும் உலகியல் படிப்பாளர்களையும் இளைய சமுதாயத்தினரையும் கேட்டுக்கொள்கிறேன்.

22 - 7 - 1986<br>
சென்னை -12

தங்களன்புள்ள,<br>
காஞ்சி **R.** அப்துர் ரவூப்

بسم الله الرحمن الرحيم

# சூரத்துல் கஹ்ஃபும் நானும்

எனக்கு விவரம் தெரிந்த காலத்திலிருந்து ஜு ம்ஆ நாளில் நான் ஓதிப்பழக்கப்பட்டு வந்த குர்ஆன் அத்தியாயங்களுள் சூரத்துல் கஹ்ஃபும் ஒன்று. [1] ஏனைய மக்களைப்போன்று (அல்லாஹ் - ரஸூலுக்கு) அடிபணிந்தும் நன்மைக்காகவும் இந்த சூராவை நான் ஓதி வருவேன். நபிமொழிகளை படித்தபொழுது இந்த அத்தியாயத்தை ஓதும்படி - மனப்பாடம் செய்யும்படி நபி(ஸல்) அவர்கள் ஆர்வமூட்டியுள்ளதையும் அது தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கும் என்பதையும் கண்டேன். [2]

நான் எனக்குள் வினா எழுப்பினேன்: இந்தக் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கக்கூடிய கருத்துகளும் தத்துவங்களும் எச்சரிக்கைகளும் கண்டனங்களும் இந்த அத்தியாயத்தில் உண்டா? இது எப்படிப்பட்ட குழப்பம் எனில், இதிலிருந்து பாதுகாக்கும்படி நபி(ஸல்) அவர்களே பல நேரங்களில் பிரார்த்தனை செய்துள்ளார்கள். அப்படிப் பாதுகாப்புத் தேடுமாறு தம் சமுதாய மக்களுக்கும் அதிக அளவில் ஆர்வமூட்டியுள்ளார்கள். அது மட்டுமல்ல இறுதிக் காலத்தில் ஏற்படவிருக்கும் மாபெரும் குழப்பம் இதுவே. இது குறித்தே மற்றொரு ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள், "ஆதம் நபி படைக்கப்பட்டதிலிருந்து மறுமைநாள் வரை தஜ்ஜாலினால் ஏற்படும் குழப்பத்தை விடப் பெரியதொரு குழப்பம் வேறொன்றும் இருக்காது" என்று எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

மேலும் திருக்குர்ஆனை பற்றியும், அதன் ரகசியங்கள், அதன் அறிவுஞானங்கள் பற்றியும் மக்கள் அனைவரினும் அதிகம் அறிந்தவர்களான நபி(ஸல்) அவர்களே குர்ஆனின் ஏனைய சூராக்களுக்கு மத்தியில் இந்தக்

---

[1] **இந்தப் பழக்கம் என் தாயார் திருமதி கைருன் நிஸா அளித்த கல்வி - நல்லொழுக்கப் பயிற்சியின் நற்பயனாகும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் சூரத்துல் கஹ்ஃபை ஓத வேண்டும் என்று எனக்கு அடிக்கடி அவர் அறிவுரை கூறுவார். அதன்படி நான் ஓதுகிறேனா என்று கண்காணிக்கவும் செய்வார். இவ்வாறு இந்த அத்தியாயத்தை ஓதி ஓதி அது எனக்கு மனப்பாடம் ஆகி விட்டது.**

**என் கண்ணியத்திற்குரிய தாயாரும்கூட திருக்குர்ஆனை மனனம் செய்தவர்தாம். இஸ்லாமிய நூல்களைப் படிப்பதிலும் இஸ்லாமியப் பண்பாட்டைக் கடைப்பிடிப்பதிலும் தலைசிறந்த பெண்மணியாக விளங்கினார். கவிதை எழுதுவதிலும் நல்ல -தூய்மையான ஈடுபாட்டை அவருக்கு அல்லாஹ் வழங்கியிருந்தான். அவர் தொகுத்த முனாஜாத்கள், பிரார்த்தனைகள். ஸலவாத் மகிமைகள் எனப் பற்பல வெளியீடுகள் உள்ளன. அவையாவும் அவர்களின் இறை நம்பிக்கையின் உறுதிப்பாட்டையும் கொள்கைப் பிடிப்பையும் மனவலிமையையும் பறைசாற்றக் கூடியவை ஆகும். அவற்றில் கவியழகும் இல்லாமலில்லை. ஹிஜ்ரி 1388 ஆம் ஆண்டு ஜமாதில் ஆகிர் பிறை 6 இல் என் தாயார் மரணம் அடைந்தார்கள்.**

[2] **அபூ ஸயீதுல் குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:**

عن ابى سعيد الخدرى ﷺ قال: من قرأ سورة الكهف كما أنزلت ثم خرج الدجال لم يسلط عليه ولم يكن عليه سبيل – رواه الحاكم فى المستدرك

**"குகைஅத்தியாத்தை அருளப்பட்ட முறைப்படி ஒருவர் ஓதிவந்தால் பிறகு தஜ்ஜால் என்பவன் தோன்றி வழிகெடுக்கும்பொழுது அவனால் அவர் மீது எந்த அதிகாரமும் செலுத்த முடியாது. அதற்கு எந்த வழியும் இருக்காது" (நூல்: ஹாகிம்)**

**அலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:**

عن علي ﷺ : قال قال رسول الله ﷺ: من قرأ الكهف يوم الجمعة فهو معصوم الى ثمانية أيام من كل فتنة تكون ، فان خرج الدجال عصم منه – أخرج ابـــن مردويه و الضياء فى المختارة

**"ஒருவர் ஜு ம்ஆ நாளில் குகைஅத்தியாயத்தை ஓதினால் எவ்விதக் குழப் பங்கள் ஏற்படினும் எட்டு நாட்கள் வரையில் அவர் அவற்றில் இருந்து பாது காக்கப் படுவார். தஜ்ஜால் தோன்றினால் அவனது குழப்பத்திலிருந்தும் பாது காக்கப்படுவார்" (இப்னு முாதவைஹ், முக்தாராஹ்வில் இமாம் ஜியா)**

**அபுத் தர்தா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "நபி (ஸல்) அவர்கள் நவின் றார்கள்: குகை அத்தியாயத்தில் முதல் பத்து (மற்றோர் அறிவிப்பில் கடைசி பத்து) வசனங்களை ஒருவர் மனனம் செய்தால் அவர் தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கப்படுவார்" (முஸ்லிம், அபூ தாவூத், திர்மிதி)**

**திர்மிதியின் மற்றோர் அறிவிப்பில் - குகைஅத்தியாயத்தின் ஏதோனும் மூன்று வசனங்களை ஓதினால் என உள்ளது.**

**முஸ்னத் அஹ்மதில் உள்ளது: "குகைஅத்தியாயத்திலிருந்து பத்து வசனங்களை ஒருவர் ஓதினால் அவர், தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கப்படு வார்" (பாகம் 6 பக்கம் 446)**

**நஸாஈ அறிவிப்பில் - குகை அத்தியாயத்தின் கடைசி பத்து வசனங்களை ஒரு வர் ஓதினால் அது, தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து அவருக்குப் பாதுகாப்பு அளிக் கும் என உள்ளது. --- இவை போன்று இன்னும் பல அறிவிப்புகள் வந்துள்ளன.**

குகை அத்தியாயத்தை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதேன் என்றெல்லாம் நான் சிந்திக்கத் தொடங்கி னேன்!

## கடைசிக் காலக் குழப்பமும் குகைஅத்தியாயமும்

இவ்வாறு இந்த அத்தியாயத்தைக் குறித்து சிறப்பித்துச் சொல்லி இருப்பதன் இரகசியத்தை அறிந்திட என் மனம் ஆவல்கொண்டது. மேலும் நபி(ஸல்)அவர்கள் அறிவித்த பாதுகாப்புக்கும் இந்த சூராவுக்கும் அப்படி என்ன தத்துவார்த்தமான தொடர்பு உள்ளது என்பதை அறிந்திடவும் பெரிதும் விரும்பினேன்.

குர்ஆனில் (கிஸாருல் முஃபஸ்ஸல், (த்)திவாலுல் முஃபஸ்ஸல்) طوال المفصل ، قصار المفصل என சிறிய - பெரிய அத்தியாயங்கள் பல இருக்க இந்த அத்தியாயத்திற்கு மட்டும் இத்தகைய மகத்தான சிறப்பை நபியவர்கள் அளித்திருப்பது ஏன்? [3]

தொடக்கத்தில் பொதுவான இந்த விளக்கத்தை முன்வைத்து நான் ஆராய்ந்திட முற்பட்டேன். அதாவது, சூரத்துல் கஹ்பு திருக்குர்ஆனின் தனிப்பெரும் அத்தியாயம்., கடைசிக் காலக் குழப்பங்களிலிருந்து - எந்தக் குழப்பங்களின் பெருந்தலைவனாக தஜ்ஜால் வருவானோ அந்தக் குழப்பங்களில் - இருந்து பாதுகாக்கக்கூடிய அத்தியாயம். அதற்கேற்ப சீரான சிந்தனைகளையும் ஆழிய கருத்துகளையும் இது தன்னுள் கொண்டுள்ளது.

மேலும் தஜ்ஜாலின் விஷமத்தனமான கருத்துகளை மக்களிடையே பரவாமல் தடுக்கக்கூடிய அருமருந்தும் இந்த அத்தியாயத்தில் அதிக அளவில் அமைந்துள்ளது.

எவர் இந்த அத்தியாயத்தை நன்கு புரிந்து எல்லா நேரங்களிலும் ஓதி மனப்பாடம் செய்தாரோ மேலும் இதன் ஆழிய கருத்துகளைச் சிந்தை குளிர அருந்துகிறாரோ அவர், இந்த உலகத்தையே கதிகலங்கச் செய்யக்கூடிய - நீடித்து நிற்கக்கூடிய தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கப்படுவார். அதன் வலையில் வீழ்ந்திடாமல் தப்பித்துக்கொள்வார்.

- இதேபோன்று இந்த அத்தியாயத்தில் - எல்லாக் காலங்களிலும் நாடுகளிலும் தோன்றக்கூடிய குழப்பவாதி களையும் இனங்காட்டி அவர்களுடைய பிதற்றல்களின் பின்னணியையும் தெளிவுபடுத்தும் வகையில் அறிவார்ந்த பல உவமைகளும் வழிகாட்டல்களும் ஆங்காங்கே பரவலாக அமைந்துள்ளன.

மேலும் இந்த அத்தியாயம், தஜ்ஜாலின் குழப்பத்தை எதிர்த்துப் போராடுவதற்காக நம் நெஞ்சங்களையும் சிந்தனைகளையும் தயார் படுத்தவும் செய்கிறது. அந்தக் குழப்பங்களை வழிநடத்திச் செல்லும் தலைவர் களின் சிந்தனைப் போக்கையும் வாழ்க்கையின் நோக்கையும் தெளிவாகவும் உறுதியுடனும் எதிர்க்கக்கூடிய ஓர் உயிரோட்டம் இந்த அத்தியாயத்தில் ஊடுருவி நிற்கிறது.

## அத்தியாயம் முழுவதும் ஒரே தலைப்பின் கீழ்...

இத்தகைய பொதுவானதொரு கருத்தில் மன நிறைவு கொண்டு சிறப்புமிக்க இந்த அத்தியாயத்தை நான் தொடர்ந்து ஆராய்ந்திட முற்பட்டபொழுது அது முற்றிலும் புதிதாகவே எனக்குத் தோன்றியது.

இந்த அத்தியாயம் தொடர்பாக எனது மனத்தில் பதிந்த தொடக்க நிலைகருத்துகளைக் கைவிளக்காகப் பிடித்துக்கொண்டு அதன் அர்த்தங்களிலும் கருத்துகளிலும் நுழைந்தேன். அந்நாள் வரையிலும் நான் அறிந்தி ராத உயர் தத்துவங்களும் விளக்கங்களும் நிறைந்த புதியதோர் உலகிற்கு வந்ததுபோன்ற உணர்வே எனக்கு ஏற்பட்டது!

---

[3] ஆய்வுத் திறன்மிக்க அறிஞர்கள், பெரிய முஹத்திஸ்கள், குர்ஆன் விரிவுரை யாளர்கள் பலர் இத்தகைய சிந்தனைப் போக்கை மேற்கொண்டு இந்த அத்தி யாயம் குறித்து ஆராய்ந்திருக்கிறார்கள். இந்த அத்தியாயத்திற்கும் தஜ்ஜாலின் குழப்பத்திற்கும் மானசீகமான தொடர்பு ஒன்று இருப்பதைக் கண்டறிந்திருக்கி றார்கள்.

பாட்னாவைச் சேர்ந்த அல்லாமா முஹம்மத் தாஹிர் என்பார் (இறப்பு ஹிஜ்ரி 984) தமது மஜ்மவு பிஹாரில் அன்வார் எனும் நூலில் முன்னோர்கள் சிலரின் கருத்தை எழுதியுள்ளார்கள்: கடைசிக் காலத்தில் தோன்றக் கூடிய தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாக்கும் ஒருசக்தி இந்தக் குகை அத்தியாயத்தில் இருப்பதாக நபி மொழிகளில் சொல்லப்பட்டுள்ளது. முன்பு ஒரு காலத்தில் ஓர் அநியாயக்கார அரசனின் கொடுமையிலிருந்து குகைத் தோழர்கள் பாதுகாக்கப் பட்டது போன்று இந்த அத்தியாயத்தை ஓதுகிறவர்களும் தஜ்ஜாலிடம் இருந்து பாதுகாக்கப்படுவார்கள். அல்லது மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்தக்கூடிய பொய்யர்கள் எனும் தஜ்ஜால்களிடம் இருந்து பாதுகாக்கப்படுவார்கள். இந்த வகையில் பேரற்புதங்களும் இறைவனின் பேராற்றலை நிரூபிக்கும் அத்தாட்சி களும் இந்த அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றையெல்லாம் சிந்திப்பவர்கள் எளிதில் குழப்பம் அடைய மாட்டார்கள். தொடர்ந்து அல்லாமா அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: ஆனால் எனது கருத்து என்னவெனில்.நபி(ஸல்)அவர்கள் இந்த அத்தியாயத்தில் சில சிறப்பு அம்சங்களைக் கண்டதால்தான் இதனைப் பற்றி இவ்வாறு குறிப் பிட்டிருக்கிறார்கள். (நூல்: மஜ்மஉ பிஹாரில் அன்வார்)

அத்தியாயம் முழுவதும் ஒரே தலைப்பின் கீழ் அமைந்திருப்பது எனக்குப் புலப்பட்டது. அதற்கு- ஈமானுக்கும் பொருள்முதல் வாதத்திற்கும் போராட்டம் அல்லது இவ்வுலகை ஆளுவது இறையாற்றலா? இயற்கை ஆற்றலா? என்று பெயரிடலாம்.

இந்த அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ள அறிவுரைகள், உவமைகள், வரலாற்று நிகழ்ச்சிகள் மற்றும் சமிக்ஞைகள் அனைத்தும் நேரடியாகவோ மறைமுகமாகவோ இந்தத் தலைப்பின் கீழ்தான் பேசுகின்றன எனலாம்!

இத்தகைய விளக்கம் எனது உள்ளத்தில் உதித்தது பற்றி நான் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தேன். அல் குர்ஆனும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நபித்துவமும் எத்துணை பேரற்புதமானவை என்பது பற்றி மேலும் ஒருபுதிய விளக்கமாகவே எனக்கு அது புலனாகியது!

ஆம்! அன்று வரை இந்தக் கருத்தை நான் அறிந்திருக்கவில்லை. அதாவது கி.பி. ஆறாம் நூற்றாண்டில் இறங்கிய (இன்றிலிருந்து சரியாக 13 (14) நூற்றாண்டுகட்கு முன்னால் இறங்கிய) இந்த இறைவேதம் அல் குர்ஆன் -

கி.பி. 17ஆம் நூற்றாண்டில் பிறந்து வளர்ந்து 20 ஆம் நூற்றாண்டில் தன்னை முழுமையாக வெளிப்படுத்திக் கொண்ட குழப்பமிக்க இந்த தஜ்ஜாலிய கலாச்சாரத்தை மிகத் தெளிவாக விவரிக்கும் சித்திரம் ஒன்றை உலகத்திற்கு வழங்குகிறது! மேலும் அந்தக் கலாச்சாரம் எட்டிப்பிடிக்க இருக்கும் உச்ச நிலையையும் தஜ்ஜால் என்று நபித்துவ மொழிவழக்கில் மிகத்தெளிவாகக் கூறப்படுகிற அதன் பெரிய தலைவனையும் மிகவும் சரியாக இனம் காட்டுகிறது!

ஏறக்குறைய 25 ஆண்டுகளுக்கு முன்னால் தாருல்உலூம் நத்வத் துல் உலமா அரபிக் கல்லூரி- லக்னோ-வில் த∴ப்ஸீர் துறைப் பேராசிரியராக நான் இருந்தபொழுது இந்தக் குகைஅத்தியாயத்தைப் பற்றிய இத்தகைய அடிப்படைக் கருத்துகளையும் விளக்கங்களையும் ஒரு கட்டுரையாக எழுதினேன். அன்றைய தினம் பேராசிரியர் **மௌலானா ஸையித் அபுல் அ∴லா மௌதூதி** அவர்களை ஆசிரியராகக்கொண்டு ஹைதராபாத்தில் இருந்து வெளி வந்துகொண்டிருந்த **தர்ஜுமானுல் குர்ஆன்** என்ற இதழில் அதனை வெளியிடச் செய்தேன்.

இதே காலத்தில் மௌலானா செய்யித் மனாஜிர் அஹ்ஸன் கீலானி * அவர்களிடம் விருந்தினராகத் தங்கும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இது நடந்தது ஹிஜ்ரி 1366 - கி.பி. 1946 ஆம் ஆண்டில்! அப்பொழுது மௌலானா கீலானி அவர்கள் ஹைதராபாத் உஸ்மானியா பல்கலை கழகத்தில் தீனிய்யாத் - கொள்கை இயல்துறையின் தலைமைப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு இரவும் மௌலானா அவர்களுடன் பற்பல விஷயங்கள் குறித்து நான் விவாதித்துக் கொண்டிருப்பேன். அப்பொழுது குகை அத்தியாயம் தொடர்பாக நான் எழுதிய சிறிய கட்டுரையைத்தாம் படித்ததாகவும் மிகவும் மகிழ்ச்சி அடைந்ததாகவும் மௌலானா கூறினார்கள். இதே தலைப்பில் தாமும் விரிவாக ஒரு கட்டுரைத் தொடரை எழுதிக் கொண்டிருப்பதாகவும் அதனை **அல் ∴புர்கான்** இதழுக்கு அனுப்புவதாகவும் தெரிவித்தார்கள்.

மௌலானா அவர்கள் மரணம் அடைந்த பின்பு அவர்களின் நினைவாக அல் ∴புர்கான் இதழ் **சிறப்பு மலர்** ஒன்றை வெளியிட்டது. அதில் குகைஅத்தியாயம் தொடர்பாக மௌலானா எழுதிய கட்டுரைத் தொடர் முழுவதும் வெளியிடப்பட்டிருந்தது.

மௌலானா அவர்களின் அந்தக் கட்டுரை, மகத்துவமிக்க இந்தக் குகைஅத்தியாயம் பற்றி மேலும் மேலும் ஆராய்ந்திடவும் எழுதிடவும் எனக்கு நல்லார்வம் கொடுத்தது. கடைசிக் காலத்துக் குழப்பம், அதன் கூப்பாடு, அதன் தீய கருத்துகள் ஆகியவற்றிற்கும் இந்த அத்தியாத்திற்கும் உள்ள தொடர்பு என்ன? குறிப்பாக தஜ்ஜாலின் குழப்பத்துடன் என்ன தொடர்பு? மேலும் இந்த அத்தியாயத் தின் படிப்பினைகள் யாவை? அது வழங்கும் சான்றுகள் யாவை என்பதையெல்லாம் உலகத்திற்குத் தெளிவாக எடுத்துரைக்க வேண்டும் எனும் எண்ணம்

---

*** தற்காலத்தில் நான் அறிந்துள்ள அறிஞர்களில் இவர்கள், நிறைந்த பண்பாடும் ஆழமான கல்வியும் உடையவர். திகைப்பூட்டும் அறிவுக்கூர்மை, நுண்ணாராய்ச்சித் திறன், கருத்து வளம், எழுத்தாற்றல், மார்க்கக் கல்விகளிலும் வரலாற்றிலும் தத்துவத்திலும் ஆழமான விஷயஞானம் ஆகியவற்றின் மூலம் தனிச்சிறப்பு பெற்றுத் திகழ்கிறார்கள். ஹிஜ்ரி 1309 (கி.பி. 1893) ஆம் ஆண்டு பிறந்த மௌலானா கீலானி அவர்கள். தூனிக் மற்றும் தேவ்பந்த் போன்ற அரபிக் கல்லூரிகளில் கல்வி பயின்றார்கள். ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக் கழகத்தில் தீனிய்யாத் பரிவுத் தலைவராகப் பொறுப்பு வகித்தார்கள். மேலும் பேராசிரியர், மார்க்கச் சொற்பொழிவாளர், பன்னூலாசிரியர் எனத் திழந்த பன்முகத் திறமையாளர்! அவர்கள் எழுதிய அருமையான நூலகளில் - இறுதி நபி, அபூ தர்ரு ∴கிபாரி, நபிமொழி தொகுக்கப்பட்ட வரலாறு, இமாம் அபூ ஹனீபா அவர்களின் அரசியல் வாழ்வு, இஸ்லாமியப் பொருளாதாரம் போன்றவை குறிப்பிடத்தக்கவை. இன்னும் ஏராளமான சிறந்த கட்டுரைகளையும் எழுதியுள்ளார்கள். ஹிஜ்ரி 1377 (கி.பி. 1956) ஆம் ஆண்டு மரணம் அடைந்தார்கள்.**

என்னுள் பிறந்தது. இந்த அத்தியாயம் பற்றி அல்லாஹ் எனது இதயத்தில் உதிக்கச் செய்த உயர்வான கருத்துகளையெல்லாம் எழுதத் தொடங்கினேன்.

மௌலானா கைலானி(அவர்களிடம் மாணவராகச் சேர்ந்து கல்வி பயிலும் பேறு எனக்குக் கிடைக்கவில்லை என்றாலும் என் ஆசிரியர்களுள் ஒருவராகவே அவர்களை கருதி வந்தேன். அவர்களும் என்னைத் தம் சகோதரர்களுள் * ஒருவனாகவே கருதி வந்தார்கள்) அவர்களின் கட்டுரையில் அமைந்திருந்த உன்னதமான விளக்கங்கள், திருக்குர்ஆன் பற்றிய நுட்பமான தத்துவங்கள் ஆகியவற்றையும் துணைக்குப் பயன்படுத்தினேன்.

இந்த அத்தியாயம் பற்றி நான் எழுதுவது ஏனைய விரிவுரையாளர்கள் எழுதுவதுபோன்ற த.ஃப்ஸீர் - விரிவுரை அல்ல. இந்த அத்தியாயம் பற்றிய அடிப்படையான கருத்துகளை - பொதுவான அம்சங்களையே நான் எழுதுகிறேன்.

## தஜ்ஜாலின்
## தனித் தன்மையின் திறவுகோல்!

தஜ்ஜாலின் தனித் தன்மையின் திறவுகோல்-அதன் எல்லாப் பூட்டுகளையும் திறக்கக்கூடிய, அதன் ஆழம் எவ்வளவு எனத் தெளிவுபடுத்தக்கூடிய சாவி என்னவெனில் -

தீமை, குழப்பம், இறைநிராகரிப்பு, நாத்திகம் ஆகியவற்றின் அழைப்பாளர்கள் அனைவரில் இருந்தும் தஜ்ஜாலை வேறுபடுத்தக் கூடிய திறவுகோல் என்னவெனில், **தஜ்ஜால்** [4] எனும் அவனது பிரத்தியேகப்பட்டப் பெயரே ஆகும். தஜ்ஜால் (பெரிய குழப்பவாதி) என்கிற தன்மைதான் அவனை அறிமுகப்படுத்தக் கூடிய அடையாளமானது.

குழப்புதல், கருத்தை மயக்குதல் (தஜ்ல்,தத்ஜீல்) எனும் இரு குணங்களும் தஜ்ஜாலுடைய தனித் தன்மையின் இரு துருவங்களாகும். இவற்றை மையமாகக்கொண்டுதான் - தஜ்ஜாலின் தனித்தன்மை, தீய அழைப்புகள், அவனது உழைப்புகள் - செயல்பாடுகள் அனைத்தும் சுழன்று கொண்டிருக்கும்.

---

*** மௌலானா கைலானி அவர்கள், ஒருமுறை தமக்கு ஏற்பட்ட நோயிலிருந்து குணம் அடைந்த பின்னர் எனக்கு இப்படி ஒரு தபால் எழுதினார்கள்: எனக்கு நோவு அதிகமாகி உயிர் வாழ்வதன்மீது ஆதரவு இழந்திடும் ஒவ்வொரு நேரமும் கண்ணியத்திற்குரிய என் சகோதரராகிய நீங்கள் இருக்கிறீர்கள் என்கிற எண்ணம் தான் எனக்கு வரும். இந்தக் கவிதை வரியையும் நினைத்துப்பார்ப்பேன்:**

أَهِيْمُ بِلَيْلِى مَا حُيِيْتُ فَإِنْ أَمُتْ     أُوَكِّلُ بِلَيْلِى مَنْ يَهِيْمُ بِهَا بَعْدِى

**ஊயிர் வாழும் வரை**
**ஒவ்வோர் இரவும் (சிந்தனை வீதியில்)**
**அலைந்து திரிகிறேன்!**
**என்னை மரணம் அழைத்துக் கொண்டால்**
**எனக்குப் பின் - அலைந்து திரிபரிடம்**
**ஒப்படைத்து விடுவேன் - என்**
**இரவை!**

**[4] லிஸானுல் அரப் எனும் நூலில் இப்னு மன்சூர் கூறுகிறார்கள்: அத் தாஜில் (الداجل) எனும் சொல்லுக்கு - பொய் உரைப்பவன், பொய் முலாம் பூசக்கூடியவன் என்று பொருள். இதில் இருந்துதான் தஜ்ஜால் எனும் சொல் எடுக்கப்பட்டுள்ளது. தஜ்ஜால் என்பவன் பொய் உரைக்கக் கூடியவனும் மக்களுக்குத் துன்பம் கொடுக்கக்கூடிவனும் ஆவான். சூனியமும் பொய் உரைப்பதுமே அவனது குழப்ப மாகும்.**

**இப்னு காலவைஹ் என்பார் கூறுகிறார்: தஜ்ஜால் என்பதற்கு இமாம் அபூ உமரை விட அழகாக யாரும் விளக்கம் அளித்திட வில்லை. அவர் கூறுவது இதுதான்: தஜ்ஜால் என்றால் பொய் முலாம் பூசுபவன் என்று பொருள். தஜ்ஜல்த் துஸ் ஸை.:ப் - دَجَّلْتُ السَّيْفَ எனும் அரபி வார்த்தைக்கு வாளுக்கு முலாம் பூசினேன். தங்கத் தண்ணீர் கொண்டு அதற்கு மெருகேற்றினேன் என்று பொருள்.**

**இமாம் அஜ்ஹரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: “பொய் பேசிக் குழப்பம் விளைவிக்கும் ஒவ்வொருவரும் தஜ்ஜால்களே. தஜ்ல் என்பது தங்க முலாம் பூசி மெருகேற்றுதல் ஆகும். இவ்வகையில் தங்கம் கலந்த தண்ணீருக்கும் தஜ்ஜால் எனப்படுகிறது. தஜ்ஜால் என்பனும் - இதேபோன்று உள்ளே ஒன்றை மறைத்துக் கொண்டு வேறொன்றை வெளிக்காட்டுவான் என்பதால் தஜ்ஜால் என்ற அழைக்கப்பட்டான்”**

**அபூ அப்பாஸ் கூறுகிறார்: “தஜ்ஜால் என்று சொல்வதன் காரணம் அவன் மக்களை ஏமாற்றுவான். பொய்யை அலங்கரித்து உண்மை போல் காட்டுவான் என்பதே”**

இன்றைய பிற்காலத்து லோகாயதக் கலாச்சாரத்தின் மிகப் பெரிய ஆயுதம், விஷயங்களைக் குழப்புவதும் மக்களை ஏமாற்றுவதும்தான்.[5] மேலும் அதன் எடுப்பான அடையாளங்கள் இவைதான்: எல்லா விவகாரங் களிலும் இத்தகைய குழப்ப நிலையை ஏற்படுத்துதல், பொருட்களுக்கு முரண்பட்ட பெயர்களைச் சூட்டுதல், உண்மை நிலவரங்களைப் பூசிமழுப்புதல், கவர்ச்சியான -மதி மயக்கம் ஏற்படுத்தக்கூடிய பெயர்களை பொருத்த மின்றி சூட்டுதல், மேலும் வெளிரங்கத்திற்கும் அந்தரங்கத்திற்கும், தொடக்கத்திற்கும் முடிவுக்கும் அதிக முரண்பாடு, கல்வி ரீதியான சிந்தனைகளுக்கும் செயல் ரீதியான அனுபவங்களுக்கும் சம நிலையின்மை ஆகியவைதான்!

இன்று சில கோஷங்கள் -சுலோகங்கள் மற்றும் நவீன தத்துவங்களின் நிலையும் இப்படித்தான் உள்ளது! ஆனால் அவற்றிற்கோ மதங்களின் அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது. இந்தக் கோஷங்களும் தத்துவங்களும் மக்களின் அறிவைச் சூனியமாக்கி வைத்துள்ளன[6] இவற்றைப் போதித்த தலைவர்களின் சொற்களும் பேச்சு களும் புனிதமாகவும் உயர்வாகவும் மதிக்கப்படுகின்றன. அவர்களின் மீதான அன்பும் கண்ணியமும் இதய ஆழத்தில் இடம் பிடித்திருக்கின்றன. அத்தகைய சிந்தனைகளின் - கொள்கைகளின் புனித நிலையில் ஐயம் கொள்வதும் அவற்றின் கண்ணியம் குறித்து விவாதிப்பதும் பிற்போக்கின் அடையாளமெனக் கருதப்படுகிறது. வெளிப்படையான ஒன்றை மறுப்பதாக - கண்ணெதிரே காணப்படும் யதார்த்தத்தை - எல்லோருக்கும் தெரிந்த உண்மையை மறுப்பதாக எண்ணப்படுகிறது.

பெரிய அறிவாளிகளும் கல்வித் திறன்மிக்க அறிஞர்களும்கூட இந்த விஷயத்தில் குழம்பிப்போய் உள்ளனர். இந்த நவீன தத்து வங்களையும் கோஷங்களையும் ஆகோ ஓகோ எனப் புகழத்தலைப்பட்டு விட்டனர். இவற்றை உருவாக்கியவர்களிடம் தூய எண்ணமும் வாய்மையும் உண்டா என்று ஆராய்ந்திடாமல் நம்பிக்கை யுடனும் உத்வேகத்துடனும் இவற்றின் பக்கம் மக்களை அழைக்கிறார்கள்! இவற்றை நடைமுறைப்படுத்தினால் - செயலில் கொண்டுவந்தால் எவ்வளவுதூரம் வெற்றி கிட்டும் அல்லது தோல்வி ஏற்படும் என்று வரையறுத்துக் காட்டும் துணிவு அவர்களுக்கு இல்லை. இந்த நவீன சிந்தனைகளின் மேலாதிக்கத்தினால் மனித இனமும் பலவீனப்பட்ட சமுதாயங்களும் பெற்றவை எவ்வளவு? உண்மையான பாக்கியங்களையும் மனித உரிமைகளை யும் இழந்தது எவ்வளவு என்று பாரபட்சமில்லாத - சரியான ஒப்பீட்டாய்வை யாரும் மேற்கொள்வதில்லை.

இவையெல்லாம் பகட்டு, பொய்யலங்காரம், குழப்பம் விளைவித்தல் ஆகியவற்றின் தாக்கமும் சூனியமுமே ஆகும். இந்த விஷயங்களில்தான் - ஏனைய சிறிய தஜ்ஜால்கள், ஏமாற்றுக்காரர்கள், பகட்டுக்காரர்கள் அனை வரையும் விட அந்தப் பெரிய தஜ்ஜால் மிகைத்து நிற்பான்., மனித வரலாற்றில் எத்தகைய காலகட்டத்தில் அவர்கள் வாழ்ந்திருந்தாலும் சரியே!

பகட்டிலும் குழப்பத்திலும் ஆழ்த்துதல் எனும் இத்தகைய தீமை இந்த லோகாயதக் கலாச்சாரம் முழு வதிலும் ஊடுருவி நிற்கிறது. ஏனெனில் நபித்துவக் கோட்பாட்டுக்கு நேர் எதிர்கோட்டில்தான் இந்தக் கலாச் சாரம் செல்கிறது. அதாவது, மறு உலகத்தை நம்புவது, ஃகைப் எனும் மறைவான ஞானங்களை நம்புதல், இவ்வுலகைப் படைத்த இறைவனையும் அவனது இணையில்லா ஆற்றலையும் நம்புவது, அவன் வகுத்தளித்த ஷரீஅத்திற்கும் போதனை களுக்கும் கண்ணியம் அளிப்பது ஆகிய கொள்கைகளுக்கு நேர் எதிர்கோட்டிலேயே இந்த லோகாயதக் கலாச்சாரம் செல்கிறது.

---

**[5] ஹு தைஃபா பின் யமான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

اِنَّ الدَّجَّالَ يَخْرُجُ، وَاِنَّ مَعَهُ مَاءً وَ نَارًا فَاَمَّا الَّذِى يَرَاهُ النَّاسُ مَاءً فَنَارٌ تُحْرِقُ وَاَمَّا الَّذِى يَرَاهُ النَّاسُ نَارًا فَمَاءٌ بَارِدٌ عَذْبٌ (اخرجه مسلم فى صحيحه ،كتاب الفتن وأشراط الساعة ) وفى رواية أبي هريرة: أَنَّهُ يَجِيْءُ مَعَهُ مِثْلُ الجَنَّةِ وَالنَّارِ. فَالَّتِى يَقُوْلُ أَنَّهَا الجَنَّةُ هِيَ النَّارُ

**“தஜ்ஜால் வருவான்., அவனிடம் தண்ணீரும் நெருப்பும் இருக்கும். மக்கள் எதனைத் தண்ணீர் என்று கருதுவார்களோ அது சுட்டுக்கரிக்கும் நெருப்பாக இருக்கும். மக்கள் எதனை நெருப்பாகக் கருதுவார்களோ அது இதமான தண்ணீராக இருக்கும்” (நூல்: முஸ்லிம்)**

**அபூ ஹு ரைராவின் மற்றோர் அறிவிப்பில் உள்ளது: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தஜ்ஜாலிடம் சுவனம் - நரகம் போன்று சில பொருட்கள் இருக்கும். எதனை அவன் சுவனம் என்று காண்பிப்பார்களோ அது உண்மையில் நரகமாக இருக்கும்.**

**[6] எடுத்துக்காட்டாக, சுதந்திரம், சோஷலிசம், ஜனநாயகம், வாழ்க்கைத் தர உயர்வு, உல்லாச வாழ்வு, மனித உரிமைகள், நாகரிகம், அழகுக் கலைகள், வாழ்க்கைத் திட்டம் போன்ற வெறும் கோஷமாகப் பயன்படுத்தப்படும் சொற்கள்!**

மேலும் இந்தக் கலாச்சாரம், வெளிப்படையானவை மீதே புலன்களுக்கு உட்பட்டவை மீதே அதிகப்படியான நம்பிக்கை வைக்கிறது. மனிதனுக்குக் கிடைக்கக்கூடிய - உடலின்பம், உடனடி இலாபங்கள், வெளிப்படையான வெற்றிகள் போன்றவற்றில்தான் அதிக அளவு பற்றுதல் வைத்துள்ளது.

- இத்தகைய இலக்கை மையமாகக் கொண்டுதான் இந்த சூரத்துல் கஹ்ஃபும் இதிலுள்ள நிகழ்ச்சிகளும் படிப்பினைகளும் சுழன்று வருகின்றன!

## யூத, கிறிஸ்தவ மதங்களின் ஒரே மாதிரியான பங்களிப்பு

மிகுந்த மன வேதனையுடன் ஓர் உண்மையை நாம் வெளியிட வேண்டியுள்ளது: அதாவது, நபிமார்களின் போதனைகளை விட்டும் ஆன்மீக உணர்வை விட்டும் காலியாகிப்போன - பேதமைமிக்க இந்த உலகாயதக் கொள்கையின் பக்கம் மனித நாகரிகத்தைத் திசை திருப்புவதிலும் மனித குலத்தின் எதிர்காலத்தில் தீய பாதிப்பை ஏற்படுத்துவதிலும் இந்த இரண்டு மதங்களும் ஒரே மாதிரியான பங்களிப்பை அளித்துள்ளன! ஒன்று உருக்குலைக்கப்பட்ட கிறிஸ்தவ மதம். - இதுதான் மத்திய நூற்றாண்டுகளுக்குப் பின்னால் நாகரிக உலகத்தில் ஐரோப்பிய கலாச்சாரத்திற்குத் தலைமை வகித்த மதம். மற்றொன்று பழிவாங்கும் போக்கும் வரட்டுத் தனமும் கொண்ட யூத மதம்! - இந்நிலையில் இவ்விரு மதங்களுக்கும் கொள்கை ரீதியில் ஆழமான 'கருத்து மோதல்' வேறு உள்ளதாம்!

சர்ச்களின் கட்டுப்பாட்டிலிருந்தும் போப்களுக்கு கொத்தடிமை புரிவதிலிருந்தும் விடுதலை பெற்ற கிறிஸ்தவர் களும்கூட கடுமையான உலகாயதப் போக்கை மேற்கொண்டார்கள். தூய ஏகத்துவக் கொள்கையின் மீது நிறுவப்பட்ட தெள்ளிய கிறிஸ்தவத்துடனான தொடர்பு பலவீனப்பட்டுப்போன (முற்றிலும் அறுந்துவிட்டது நாம் என்று சொல்லவில்லை) கிறிஸ்தவர்களிடமும் உலகாயதப் போக்கு கடுமையாகத் தலைதூக்கியது.

இத்தகைய நிலை, அகிலம் முழுவதையும் அச்சுறுத்தத் தொடங்கிவிட்டது. நவீன விஞ்ஞானக் கண்டுபிடிப்பு கள், உலகை அடியோடு நாசமாக்கும் புதுப்புதுக் கருவிகள் ஆகியவற்றால் இன்று மனித குலத்தின் எதிர் காலம் பெரும் அபாயத்தில் சிக்கிவிட்டது. கல்விக்கும் உள்ளன்புக்கும் அறிவுக்கும் மனச்சாட்சிக்கும் தொழில் நுட்பத்திற்கும் தூய நடத்தைக்கும் இடையே சமநிலை என்பது அடியோடு மாய்ந்துவிட்டது!

பிற்காலத்தில், யூதர்கள் (அறிவியலில் முன்னேற்றம் பல கண்டார்கள்) அவர்களின் ரத்தத்தில் உறைந்த பாரம்பரிய ஆற்றல்களின் காரணத்தால் அல்லது கல்வி - பயிற்சித் திறமையினால், அல்லது அரசியல் குறிக் கோளின் அடிப்படையில் அல்லது இன நலத் திட்டங்களின் அடிப்படையில் - கல்விகள், கலைகள், புதுப்புதுக் கண்டு பிடிப்புகள், ஆராய்ச்சிகள் ஆகியவற்றில் மிகப்பெரும் பங்கினை ஆற்றினார்கள். மேலும் இந்த லோகாய தக் கலாச்சாரத்தின் மீது ஆதிக்கம் செலுத்தி அதன் கடிவாளத்தைக் கைப்பற்றிக்கொண்டு தங்கள் நலன் களுக்கு உகந்த வகையில் அதனைத் திருப்பினார்கள், இலக்கியம், தத்துவம், கல்விப்பயிற்சித் துறை, அறிவியல், வாணிபம், இதழியல், தகவல் தொடர்பு சாதனங்கள் ஆகிய எல்லாவற்றிலும் தங்களது பாதிப்பையும் ஆதிக்கத்தையும் ஏற்படுத்தினார்கள்.

இறுதியில் இதன் விளைவு என்ன ஆனது? கிறிஸ்தவச் சமூகச் சூழலில் தோன்றிய இந்த மேற்கத்தியக் கலாச்சாரத்திற்கு - ஈஸா நபி மீது நம்பிக்கை கொண்டிருந்த, இவ்வளவு நீண்ட காலமாக அவர்களின் பெய ருக்குப் புகழும் கீர்த்தியும் தேடிவந்த கிறிஸ்துவ மக்களின் பாலர் பள்ளிக்கூடத்தில் வளர்ந்து வந்த இம் மேற்கத்தியக் கலாச்சாரத்திற்குத் தலைமை ஏற்று வழிநடத்தும் முக்கியமான காரணியாகப் பரிணமித்தார்கள் யூதர்கள்!

இறுதியாக நிகழ்ந்த சிலநிகழ்ச்சிகளை ஆழமாகச் சிந்திப்பவர்களுக்கும் உலகளாவிய யூத ஆதிக்கம் இந்த மேற்கத்திய சமுதாயத்தில் எவ்வளவு தூரம் ஊடுருவியுள்ளது என்பதை அறிந்தவர்களுக்கும் ஒரு விஷயம் புலப்படும்:

அதாவது, இந்த லோகாயதக் கலாசச்சாரமும் அதன் கல்வியும் பண்பாடுகளும் தமது எதிர்மறையான இறுதி விளைவை விரைவில் எட்டிப்பிடித்து விடும். அழித்தல், தகர்த்தல், அராஜகம் விளைவித்தல், குழப்புதல், ஏமாற்றத்தில் ஆழ்த்துதல் ஆகியவற்றிற்கான செயலாற்றலின் சிகரத்தை எட்டிப்பிடிக்கும்! இவை அனைத்தும் யூதர் களின் கரங்களிலேயே நிறைவேற உள்ளன.

மேற்கத்திய கிறிஸ்தவ சமுதாயம்தான் யூதர்களுக்கு சகல அதிகாரமும் அளித்து விட்டது. எல்லா வாய்ப்பு களையும் அவர்களுக்குத் தாரைவார்த்து விட்டது. அந்த அளவுக்கு அலட்சியமும் அறியாமையும் கிறிஸ்தவர் களுக்கு! யூதர்களின் தூர நோக்கிலான தீய எண்ணங்களும் பழிவாங்கும் குரோத புத்தியும் கிறிஸ்வர்களுக் குத் தெரியாமல் போய்விட்டது. அதனால்தான் உலகின் மீது முழு ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பை யூதர்

களுக்கு அளித்து விட்டார்கள். யூதர்களோ இத்தகைய சந்தர்ப்பங்கள் தமக்குக் கிடைக்கும் என என்று பல நூற்றாண்டுகளாகக் கனவுகூட கண்டிருக்க மாட்டார்கள்!

இந்நிலை பொதுவாக மனித குலத்திற்கு ஏற்பட்ட பெரும் சோதனையே ஆகும். இன்று யூதர்களின் அக்கிரமங்களைத் தாங்கிக் கொண்டிருக்கும் அரபுகளுக்கு மட்டுமல்ல.,வாழ்வுக்கும் சாவுக்கும் மத்தியிலான இந்தப் போராட்டம் நடந்து கொண்டிருக்கும் குறிப்பிட்ட அந்தப் பகுதிக்கு மட்டுமல்ல., அகிலம் முழுவதற்கும் இது ஓர் பேரபாயமாகும்!

இவ்வாறாக யூத, கிறிஸ்தவ மதங்களோடு ஓர் ஆழமான தொடர்பு இந்த அத்தியாயத்திற்கு இருப்பதை நாம் காணலாம். தொடக்கத்திலேயே கிறிஸ்தவக் கொள்கை பற்றி இந்த அத்தியாயம் பேசுகிறது. அது இவ்வாறு தொடங்குகிறது:

**اَلْحَمْدُ لِلَّهِ الَّذِىْ اَنْزَلَ عَلَى عَبْدِهِ الْكِتَابَ وَلَمْ يَجْعَلْ لَهُ عِوَجًا، قَيِّمًا لِّيُنْذِرَ بَأْسًا شَدِيْدًا مِنْ لَّدُنْهُ وَيُبَشِّرَ الْمُؤْمِنِيْنَ، الَّذِيْنَ يَعْمَلُوْنَ الصَّالِحَاتِ اَنَّ لَهُمْ اَجْرًا حَسَنًا، مَاكِثِيْنَ فِيْهِ أَبَدًا وَ يُنْذِرَ الَّذِيْنَ قَالُوْا اتَّخَذَ اللهُ وَلَدًا مَالَهُمْ بِهِ مِنْ عِلْمٍ وَلاَ لآبَائِهِمْ كَبُرَتْ كَلِمَــةً تَخْرُجُ مِنْ أَفْوَاهِهِمْ اِنْ يَقُوْلُوْنَ اِلاَّ كَذِبًا** (الكهف الآية: ١-٤)

“புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே. அவனே தன் அடியார் மீது இந்த வேதத்தை இறக்கியருளி னான். இதில் எவ்விதக் கோணலையும் அவன் வைக்கவில்லை. இது முற்றிலும் செம்மையானது. (இதை இறக்கியருளியது) எதற்காகவெனில், அல்லாஹ்விடம் இருந்து கடுமையான வேதனை குறித்து எச்சரிக்கை செய்வதற்காகத்தான்! நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் புரிவோருக்குத் திண்ணமாக நற்கூலி உண்டு., அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள் என்று நற்செய்தி அறிவிப்பதற்காகவும்தான்! மேலும் ‘அல்லாஹ் மகனை ஏற்படுத்திக்கொண்டான்’ என்று கூறியவர்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காகவும்தான்! அது பற்றி எவ்வித ஞானமும் அவர்களிடமும் இல்லை., அவர்களின் மூதாதையரிடமும் இல்லை. அவர்களது வாயிலிருந்து வெளிப்படுகிற வார்த்தை எத்துணை கொடியது! அவர்கள் கூறுவது பொய்யே அன்றி வேறில்லை” (18 : 1 - 4)

கிறிஸ்தவர்களின் பாலர் பள்ளியில் உருவாகி, அவர்களின் கண்காணிப்பில் தவழ்ந்து வளர்ந்து வந்துள்ள லோகாயதக் கலாச்சாரத்தின் இரண்டாவது வெளிப்படையான அடையாளம் என்ன வெனில்,

வரையறுக்கப்பட்ட -அழிந்துபோகக்கூடிய இவ்வுலக வாழ்வு மீது அதிக மோகம் கொள்வது, வாழ்க்கையை நீண்டகாலம் அனுபவிக்கவும் அலங்கரிக்கவும் பேராசை கொள்வது, இவ்வுலக வாழ்க்கையை உயர்வாகக் கருதுவதிலும் கண்ணியப்படுத்துவதிலும் வரம்பு மீறிச்செல்வது, உலக வாழ்க்கைக்கு அப்பால் எதுவுமே இல்லையென மறுப்பது - அதாவது, ஒழுக்க மாண்புகள், உன்னத விழுமங்கள், புண்ணியச் செயல்கள், இறை யருட்கள் போன்றவை எதுவுமில்லை என மறுப்பது, வாழ்க்கைச் சாதனங்கள், ஆற்றல்கள், வளங்கள் ஆகிய வற்றைக் கைப்பற்றுவதில் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு முந்துவது ஆகியவையாகும்.

இதுதான் யூத மதம், கிறிஸ்தவ மதத்துடன் கூட்டாகிக் கொள்கிற இலக்கு! இதன் பிறகும் இவ்விரு மதங்களுக்கும் என்ன மோதல் - முரண்பாடு உள்ளதோ தெரியவில்லை!

இதோ! தௌராத் வேதத்தை எடுத்துக்கொள்ளுங்கள்! இந்த அம்சங்கள் அதில் அறவே இல்லாமல் ஆகி விட்டனவே! அதாவது, மறு உலகம் குறித்து - மறுமை வாழ்வு குறித்து பேசுவது, அவ்வுலகில் நற்பாக்கியம் பெறும் நோக்கத்துடன் எல்லா திறமைகளையும் தகுதிகளையும் செலவு செய்ய ஆர்வமூட்டுவது. மறுமைக் காகத் தயார் செய்யும்படி ஆர்வமூட்டுவது, மறுவுலகின் அருட்பேறுகள் மீதும் அங்குள்ள உயர்தர உணவு - பானங்கள் மீதும் ஆவல் கொள்ளவும் ஏக்கம் கொள்ளவும் செய்வது, இவ்வுல வாழ்வின் தற்காலிகத்தையும் நிலையற்ற தன்மையையும் சுட்டிக்காட்டுவது, உலகில் அராஜகம் விளைவிப்பதையும் ஆணவம் கொள்வதையும் இகழ்ந்துரைப்பது, உலகத்தின் அற்ப இன்பங்களிலும் அலங்காரங்களிலும் பற்றில்லாத நிலையை ஏற்படுத்து வது ஆகிய அம்சங்கள் தௌராத் வேதத்தில் அடியோடு இல்லாமலாகிவிட்டன! இந்தக் கருத்துகள் அனைத் தும் அதில் காணாமல்போனது ஆச்சியம்தான் அளிக்கிறது! இறைவனிடம் இருந்து இறக்கியருளப்பட்ட வான் மறைகளின் நிலையும் அவற்றின் உயிரோட்டமும் இயல்பும் ஒருபோதும் இவ்வாறு இருக்க முடியாது.

இதன் விளைவாக, யூதர்களின் வரலாறு தீய குணங்களில் வரலாறாக அதாவது, உலகாயத சக்தியை அடைவதில் ஒருவருக்கு ஒருவர் பெருமை பாராட்டுதல், பணத்தின் மீது மோகம் கொள்ளுதல், இன அடிப் படையிலான தமைமைப் பதவிக்காகப் போராடுதல், இன ரீதியான ஆணவம் ஆகிய குணங்களின் வரலாறாக இருக்குமானால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

யூதர்களின் மத நூல்களிலும் அவர்களின் சிந்தையில் உதித்த கவிதைகள், கதைகள், இனிய காவியங்கள், முன்னறிவிப்புகள், ஜோதிடங்கள் போன்ற இலக்கியப் படைப்புகளிலும் அவர்களின் வீரப்புராணங்ளிலும் போர்களிலும் புரட்சிகளிலும் நவீனத் தயாரிப்புகள் -கண்டுபிடிப்புகள் ஆகியவற்றிலும் அவர்களின் தத்துவங்கள், கருத்துகளிலும் மேலே சொன்ன இந்த இழி குணநிலைகள்தான் எடுப்பாக உள்ளன!

இவை அனைத்தினும் மிகமிக அரிதாககக் காணப்படுபவையும் உண்டு. அவைதான்: இரக்கம், பணிவு, மனக்கட்டுப்பாடு, ஆணவமின்மை, உலக வாழ்வை லேசாகக் கருதுதல், அல்லாஹ்வின் சந்திப்பில் ஆர்வம், மறுமையின் பக்கம் ஆவல், மேலும் மொழி, இனம், தேசம் எனப் பற்பல நிலைகளில் வாழும் மனித குலம் முழுவதின் மீதும் இரக்கப்படுதல் ஆகியவை. இவைதான்(தௌராத் வேதத்தில்) மிகவும் அரிதாக உள்ளன!

இதனால்தான் அடுத்தபடியாக இந்த அத்தியாயத்தில் -

ஷிர்க் எனும் இணைவைப்புக் கொள்கையையும் அல்லாஹ் மறுத்துரைத்தான். எந்தக் குமாரத்துவக் கொள்கையை கிறிஸ்தவ மதம் தத்தெடுத்து அதனைப் பரப்புவதில் பெரும் பங்காற்றியதோ அந்தக் குமாரத்துவக் கொள்கையையும் மறுத்துரைத்தான். அத்துடன் -

உலக வாழ்வை வணங்குவதையும் அதுவே சதமெனக் கருதி அதில் மூழ்குவதையும் அதைத் தவிர உள்ள பிற கருத்துகளை முற்றாகப் புறக்கணிப்பதையும் அல்லாஹ் மறுதலித்துள்ளான். உலக வாழ்வின் தற்காலிகத்தையும் அதன் அடிப்படைப் பலவீனத்தையும் சுட்டிக்காட்டி இப்படிக் கூறுகிறான்:

اِنّا جَعَلْنَا مَا عَلَى الأَرْضِ زِيْنَةً لَّهَا لِنَبْلُوَهُمْ أَيُّهُمْ أَحْسَنُ عَمَلاً ، وَ اِنَّا لَجَاعِلُوْنَ مَا عَلَيْهَا صَعِيْدًا جُرُزًا (سورة الكهف ٧–٨)

“திண்ணமாக நாம் இப்பூமியின் மீதுள்ள அனைத்தையும் புவி (வாழ்வு)க்கு அலங்காரமாக ஆக்கினோம்., இவர்களில் யார் மிகச் சிறந்த செயலைச் செய்பவர் என்று சோதித்துப்பார்ப்பதற்காக! இறுதியில் திண்ணமாக நாம், இவை அனைத்தையும் வெற்றுத் திடலாய் ஆக்கிட இருக்கிறோம்!” (18 : 7 - 8)

இதேபோல உலக வாழ்வை வணங்குபவர்களையும் மறுமை நாளை மறுப்பவர்களையும் அல்லது அது குறித்து அலட்சியமாக இருப்பவர்களையும் மீண்டும் ஒருமுறை மறுதலித்து இந்த அத்தியாயத்தின் இறுதியில் இவ்வாறு கூறுகிறான்:

قُلْ هَلْ نُنَبِّئُكُمْ بِالاَخْسَرِيْنَ أعْمَالاً ، الَّذِيْنَ ضَلَّ سَعْيُهُمْ فِى الْحَيَاةِ الدُّنْيَا وَهُمْ يَحْسَبُوْنَ اَنَّهُمْ يُحْسِنُوْنَ صُنْعًا (سورة الكهف ، الآية: ١٠٣ – ١٠٤)

“(நபியே! இவர்களிடம்) நீர் கூறும்: தம் செயல்களில் பெரும் நஷ்டத்திற்குள்ளானவர்கள் யார் என்பதை நாம் உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா? எவர்களின் முயற்சிகள் அனைத்தும் உலக வாழ்க்கையில் வழிதவறியதோ அவர்கள்தாம். ஆனால் அவர்களோ அனைத்தையும் தாம் சரியாகவே செய்து கொண்டிருப்பதாக கருதிக் கொண்டிருக்கிறார்கள் ” (18 : 103- 104)

இவ்வாறாக இந்த அத்தியாயத்தின் தொடக்கம், இறுதி, மத்திய பகுதிகள் அனைத்திலும் இடம்பெற்றிருப்பது - மறுமைக் கொள்கையை நம்புதல், ஃகைப் எனும் இதர மறைவான ஞானங்களை நம்புதல், இவ்வுலகைப் படைத்த இறைவன் மீது நம்பிக்கை கொள்ளல், அனைத்துப்பொருட்கள் மீதும் ஆதிக்கம் செலுத்தும் அவனது எல்லையற்ற ஆற்றலை நம்புதல் ஆகிய விஷயங்கள்தாம்! இவை அனைத்தும் உளப்பூர்வமான கொள்கைகள்., இயற்கையோடு இயைந்த, அறிவுப்பூர்வமான சித்தாந்தங்கள்!

ஆனால் உலகாயதக் கொள்கையின் நிலை என்னவெனில் - எந்த உலகாயதக்கொள்கை? புலனுக்குட்பட்டவை, கண்ணெதிர்க் காட்சிகள், அனுபவங்கள், உடனடிப் பலாபலன்கள், உடலின்பம், இனவாதத் தலைமைத்துவம் ஆகியவற்றை மட்டுமே நம்புகிற உலகாயதக் கொள்கை இந்த ஈமானியக் கொள்கைகளை மறுக்கிறது! அவற்றை விட்டும் விலகிக்கொள்கிறது. எல்லாச் சக்திகளையும் சாதனங்களையும் ஒன்று திரட்டிக் கொண்டு முழுமூச்சுடன் இவற்றை எதிர்க்கவும் செய்கிறது!

இந்த அத்தியாயம், உலகாயதக்கொள்கையின் மூல வேர்களை - எந்த உலகாயதக் கொள்கைளை வளர்ப்பவர்களாகவும் - அதன் நீண்ட வரலாற்றுத் தொடரில் அதனைப் பாதுகாக்கும் பெரும் பொறுப்பாளர்களாகவும் அதன் பக்கம் அழைப்பவர்களாகவும் கிறிஸ்தவர்கள் அமைந்திட வேண்டுமென விதியில் அல்லாஹ் நிர்ணயித்தானோ - பின்னர் ஏசு கிறிஸ்து எனும் ஈசா நபியை - அவர்களது ஆரம்பநாள் முதலாய் எதிர்த்து வந்த யூதர்கள் - எல்லாக் காலகட்டங்களிலும் கிறிஸ்தவ மதத்துடன் போட்டிப் போட்டுக்கொண்டிருந்த யூதர்கள் அதற்குத் தலைமை ஏற்றார்களோ அந்த உலகாயதக் கொள்கையின் மூலவேர்களைப் பிடுங்கி எறியும் வகையில் இந்த அத்தியாயம் அமைந்தது. அத்தகைய ஆழிய கருத்துக்களைத் தாங்கியுள்ளது.

அந்த யூதர்களின் கைகளிலேயே இந்த உலகாயதக்கொள்கை தனது உச்ச நிலையை அடைய உள்ளது.

நாத்திகக் கொள்கையிலும், குழப்புதல், பகட்டு, பொய்யலங்காரம் ஆகியவற்றிலும் சாமர்த்தியசாலிகளில் எல்லாம் மிகப்பெரும் சாமர்த்தியசாலியாகத் திகழும் தஜ்ஜால் என்பவன் யூதர்களில் இருந்துதான் தோன்றுவான்!

மேலும் நபி(ஸல்)அவர்கள் - இந்த குகைஅத்தியாயத்தை ஓதுவது, அதன் ஆரம்ப அல்லது இறுதி வசனங்களைத் தொடர்ந்து ஓதிவருவது தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாப்பு அளிக்கும் என்று அறிவித்தார்கள்!

இவ்வாறு இந்த அத்தியாயத்தின் தொடக்கத்திற்கும் இறுதிக்கும் ஒரு நுட்பமான தொடர்பு உள்ளது. இதேபோல் இந்த அத்தியாயம் முழுவதற்கும் - கடைசி காலத்தில் தோன்றவிருக்கும் தஜ்ஜாலின் குழப்பத்துடன் ஓர் ஆழமான - உறுதியான தொடர்பு உள்ளது! ஆழமாகச் சிந்திக்கக் கூடியவர்களுக்கு இவ்வுண்மை புலப்படும்.

## நாற்பெரும் சரிதைகள்!

இந்த சூரத்துல் கஹ்ஃபில் நான்கு சரிதைகள் இடம் பெற்றுள்ளன. அவையே இந்த அத்தியாயத்தின் மைல்கற்கள்! தூண்கள்!

வேறு வார்த்தையில் சொல்வதானால், இந்த நான்கு சரிதைகளும் இந்த அத்தியாயத்தின் நாற்பெரும் துருவங்களாகும். இவற்றை மையமாகக் கொண்டே இந்த அத்தியாயத்தின் தத்துவங்கள், போதனைகள், அறிவுரைகள் அனைத்தும் சுழன்று வருகின்றன!

## குகைத் தோழர்கள் சரிதை

- **குகைத் தோழர்களின் சரிதை**
- **இருபெருந் தோட்டங்களைப் பெற்றிருந்த செல்வந்தனின் சரிதை**
- **நபி மூஸா - கிள்ர் சரிதை**
- **இவ்வுலகில் பெரும் அரசாட்சியையும் எல்லா விதமான சாதனங்களையும் வாய்ப்புகளையும் அவருக்கு அல்லாஹ் வழங்கியிருந்த துல்கர்னைன் மாமன்னரின் சரிதை**

இந்நான்கு சரிதைகளின் விளக்கும் பாணியும் முன்பின் தொடரும் வெவ்வேறு விதமாக அமைந்திருந்தாலும் இலட்சியத்திலும் குறிக்கோளிலும் இவை ஒன்றிணைகின்றன. இவற்றில் அமைந்திருக்கும் ஒரே வகையான உயிரோட்டம் - கருத்துச் செறிவான, ஆழமான, உறுதியான ஓர் இணைப்பை இவற்றிற்கிடையே ஏற்படுத்தி விடுகிறது!

## உலகின் இரு கொள்கைகள்

இந்தப் பேரண்டம் பெரும்பாலும் - அதில் ஆட்சியதிகாரம் செலுத்திக் கொண்டிருக்கும் இயற்கைக் கூறுகளுக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. அக்கூறுகளே இப்பேரண்டத்தின் அமைப்பைத் தமது கட்டுப்பாட்டின் கீழ் வைத்துக்கொண்டிருக்கும் இயற்கை சக்திகள் ஆகும். அவையே ஒவ்வொரு பொருளின் காரணிகள்.,சிறப்பியல்புகள் ஆகும். அந்தக்காரணிகள் தமது தாக்க சக்தியை அப்பொருள்களை விட்டு அரிதாகவே பிரிக்கும். அவற்றின் குறி தவறுவது மிகக்குறைவே!

மக்கள் சிலரின் பார்வை இந்த வெளிப்டையான காரணிகளுக்கும் இயற்கை சக்திகளுக்கும் அப்பால் செல்வதில்லை. அவர்களின் பார்வை இவ்வுலக வாழ்க்கையோடு குறுகிவிடுகிறது. புலனுக்குட்பட்ட இந்தச் சடத்துவ உலகோடு நின்று விடுகிறது.

உலகில் நிகழும் காரியங்கள் - விளைவுகள் எப்பொழுதுமே அவற்றிற்குரிய காரணிகளால்தான் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்று அவர்கள் கருதிக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் காரணிகளுக்கும் காரியங்களுக்கும் மத்தியில் குறுக்கிட்டு தனது முழு நாட்டத்தின்படி அதிகாரம் செலுத்தக்கூடிய - மேலும் காரணிக ளின்றி காரியங்களை உருவாக்கக்கூடிய - எவ்வித முன்னுதவியும் இன்றி, கருவியுமின்றி அவற்றைப் படைப்பதற்கு ஆற்றலுடைய வேறொரு சக்தி இவ்வுலகில் இல்லையென கருதிக் கொண்டிருக்கிறார்கள்!

விளைவு என்னவாயிற்று? இந்தக் கருத்துடையவர்கள் இந்தக் காரணிகளுடன் மட்டும் தொடர்பு கொண்டார்கள். அவற்றாலேயே எல்லாம் நிகழ்கின்றன என்று நம்பினார்கள். கடவுளை வணங்குவதுபோல் அவற்றை வணங்கத் தலைப்பட்டார்கள். இயற்கைக் காரணிகளுக்கும் (பொருட்களின்) சிறப்புத் தன்மைகளுக்கும் அப்பால் உள்ள ஆற்றலை நிராகரித்தார்கள். இவ்வுலகின் எஜமானனாகவும் ஆட்சியாளனாகவும் இருந்து - தனது எல்லையில்லா முழு அதிகாரத்தைச் செலுத்துகிற ஓர்(இறை) ஆற்றல் உண்டு என்பதை மறுத்தார்கள். உலக

வாழ்க்கைக்குப் பிறகு மீண்டும் ஒரு வாழ்க்கை உண்டென்பதையும் மரணத்திற்குப் பிறகு மனிதர்கள் மீண்டும் உயிருடன் எழுப்பப்பட்டு ஒன்றுதிரட்டப்படுவர்கள் என்பதையும் நிராகரித்தார்கள்.

இந்த இயற்கைச் சக்திகளையும் காரணிகளையும் ஒவ்வொரு பொருட்களின் இரகசியங்களையும் தம் வசப் படுத்துவதற்காக தங்கள் முயற்சிகளையும், ஆற்றல்கள் - தகுதிகள் அனைத்தையும் செலவு செய்தார்கள். உலகாயதச் சாதனங்களைக் கையாளுவதற்குப் பாடுபட்டார்கள். அந்த எண்ணத்துடனும் ஏக்கத்துடனும் சுற்றித் திரிந்தார்கள். அத்தகைய உலகாயத - இயற்கைச் சக்திகளை அளவு கடந்து கண்ணியப்படுத்தி னார்கள். அவற்றைப் புனிதமாகக் கருதினார்கள். இறுதியில் அவற்றையே இரட்சகனாகவும் கடவுளாகவும் அமர்த்தி விட்டார்கள்.

இத்தகையவர்கள், இயற்கை சக்திக்கும் பொருளுக்கும் அப்பால் எதுவுமே இல்லையென மறுக்கத் தலைப் பட்டார்கள் என்பது மட்டுமல்ல, இயற்கைச் சக்திகள் சிலவற்றைக் கைவசப்படுத்தி அவற்றில் இருந்து தங்கள் குறிக்கோளை அடைந்து விட்டால் அல்லது அந்த சக்திகளைத் தங்களது நாட்டத்திற்கும் தேவைக் கும் பணிய வைத்து விட்டால் - அப்போது தங்களையேகூட கடவுளாகக் கருதிக் கொள்கிறார்கள். தங்களிடம் படைப்பாற்றல் (இறையாண்மை)இருப்பதாகச் சொல் மூலம் அறிவிக்கிறார்கள். அல்லது அவர்களின் நடைமுறை பாவனையே அதனைப் புலப்படுத்துகிறது!

இத்தகையவர்கள்தாம் உலகில் பிற மனிதர்களை அடிமைப் படுத்தினார்கள்! மக்களின் உயிர், உடைமை, மானம், மரியாதை ஆகியவற்றோடு விளையாடினார்கள்! தங்கள் குறிக்கோளையும் மன இச்சைகளையும் நிறை வேற்றுவதற்காக அல்லது தங்கள் அபிலாசைகளை அடைவதற்காக அல்லது தம் இனத்தாரின் புகழுக்காக - தம் நாட்டின் உயர்வுக்காக அல்லது தங்கள் கட்சியினருக்கு உயர் பதவிகள் கிடைப்பதற்காக அநீதிக்குள் ளான அந்த மக்களைதாம் நாடியவாறெல்லாம் பந்தாடினார்கள்!

இவ்வுலகில் இன்னொரு கொள்கை உள்ளது. அது முந்தைய கொள்கைக்கு நேர்முரணானது. அடிப்படை யிலும் நோக்கிலும் போக்கிலும் அதற்கு வேறுபட்டது. அது இதுதான்: இந்த இயற்கைச் சக்திகள், காரணி களுக்கு அப்பால் -ஒவ்வொரு பொருளிலும் அமைத்து வைக்கப்பட்டிருக்கும் சிறப்பியல்புகளுக்கு அப்பால் வேறொரு மறைவான (இறை) சக்தி உள்ளது., அதுவே, இந்த இயற்கைச் சக்திகளின் - காரணிகளின் கடிவாளத்தை தனது பிடியில் வைத்திருக்கிறது.

மேலும் அந்தக் காரியங்களுக்கு இந்தக் காரணிகளே மூல காரணமாக இருப்பதுபோன்று அனைத்தையும் அடக்கியாளும் இறையாற்றல் இந்தக் காரணிகளுக்கு மூல காரணமாக உள்ளது. இந்தக் காரணிகள் இறை நாட்டத்திற்கும் கட்டளைக்கும் கட்டுப்பட்டே இயங்குகின்றன. ஏனெனில் இறைவன்தான் அந்தக் காரணிகளைப் படைத்தான். அவனே அவற்றை இயக்கவும் செய்கிறான்! தான் நாடுகிறபொழுது அந்தக் காரியங்களை விட்டும் அந்தக் காரணிகளைப் பிரிக்கவும் செய்கிறான். அதாவது காரணிகள் இருந்தாலும் காரியங்கள் நிகழாமல் தடுக்கிறான்!

ஆக, இறைநாட்டம்தான் காரணிகளுக்கெல்லாம் மூல காரணி. அடிப்படைகளுக்கெல்லாம் மூல அடிப்படை! 'அதற்கு இது கார ணம்., இதற்கு இன்னொன்று காரணம்' என்கிற சங்கிலித் தொடர் இறைநாட்டத்தின்பால் சென்றுதான் முற்றுப்பெறுகிறது!

இந்தப் பேரண்டத்தையும் இதிலுள்ள ஒவ்வொரு காரணியையும் படைத்த எல்லாம் வல்ல இறைவனின் கையிலிருந்து இவ்வுலகின் கடிவாளம் ஒருகணங்கூட நழுவிடாது.

இந்த இயற்கைக் காரணிகள் அனைத்தும் இறைவனுக்கு அடிமைப்பட்டிருப்பதிலிருந்து -அவனுக்கு அடங்கி யிருப்பதில் இருந்து விலகிடவோ ஒரு விநாடிகூட சுதந்திரமாக இயங்கிடவோ முடியாது! அவனது கட்டளையை மீறி முரண்டு பிடிக்கவோ அவனுக்கு எதிராகச் செயல்படவோ அவற்றால் இயலாது! வானத்திலும் சரி பூமியிலும் சரி, எந்த ஒன்றும் அவனை இயலாதவனாக்கிட முடியாது.

எல்லாப் பொருள்களையும் அவற்றின் சிறப்பியல்புகளுடன் அவனே இணைத்துவைத்தான். காரியங்களைக் காரணிகளுடன் பிணைத்து வைத்தான். முன் நிகழ்வுகளைப் பின்விளைவுகளுடன் சேர்த்து வைத்தான்! அதில் அவனுடைய முழுமையான தத்துவமும் எல்லா அதிகராமும் கொண்ட அவனது நாட்டமும் உள்ளது. இவ்வாறெல்லாம் இணைப்பவனும் அவனே! பிரிப்பவனும் அவனே! ஆக்குபவனும் அழிப்பவனும் அவனே! எல்லாப் பொருள்களையும் இல்லாமையில் இருந்து உருவாக்கி வெளிக்கொணர்பவனும் அவனே! ஏதேனும் ஒரு பொருளை அவன் படைக்க நாடினால் 'ஆகுக' என்றுதான் அதற்கு ஆணையிடுகிறான்., அது ஆகிவிடுகிறது!

இத்துடன் இன்னோர் உண்மையும் தெளிவாகிறது. அதாவது, தாக்கங்களை ஏற்படுத்தும் வேறு சில காரணிகளும் இவ்வுலகில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவை தனி மனிதர்களிலும் சமுதாயங்களிலும் -

இயற்கைச் சக்திகளைப் போல், ஏன் அவற்றை விடவும் கடும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடியவையாக உள்ளன. அந்தக் காரணிகளினால் ஏற்படும் பின்விளைவுகள் - இயற்கைச் சக்திகளினால் விளையும் உலகாயத விளைவு களை விடவும் அதிகப் புரட்சிகரமானவையாகவும் மகத்தானவையாகவும் உள்ளன!

அந்தக் காரணிகள் இவைதாம்: இறைநம்பிக்கை, நற்செயல்கள், உன்னதமான குணநலன்கள், இறைவனுக்கு அடிபணிதல், அவனை வழிபடுதல், நீதி, நேர்மை, கருணை, அன்பு போன்ற உயர்பண்புகள்!

இதேபோல இவற்றிற்கு நேர்முரணான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய வேறு சில காரணிகளும் உள்ளன. அவைதாம்: இறை நிராகரிப்பு, இறைநெறிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தல், உலகில் அராஜகம் விளைவித்தல், அநீதி இழைத்தல், மனஇச்சைகளுக்கு அடிமைப்படுதல், பாவம் புரிதல் போன்ற தீய பண்புகள்!

ஒருவர் இயற்கைக் காரணிகளைப் புறக்கணிக்காமல்- நல்விளைவுகளைத் தரும் உத்தமமான குணநலன் களைக் கடைப்பிடித்தால் அவருக்கு இவ்வுலகம் முற்றாக இணைங்கிவிடும். இவ்வுலக வாழ்க்கை அவருக்கு மகிழ்ச்சிகரமாக அமையும். அவருடைய செயல்களில் அல்லாஹ் இலகுவை ஏற்படுத்திக் கொடுப்பான். சில நேரங்களில் - தேவையான சூழ்நிலைகளில் இயற்கைக் காரணிகளையும் அவருக்குக் கீழடங்கிச் செல்லுமாறு அல்லாஹ் அமைத்துக் கொடுத்து வழமைக்கு மாறான சில வினோதங்களையும் அவரிடம் இருந்து வெளிப்படச் செய்வான்.

ஒருவர் இதற்கு மாறான தீய குணங்களையும் செயல்களையும் தனது வாழ்க்கையில் மேற்கொண்டால் - அதர்மத்தையும் இழி நடத்தையையும் கடைப்பிடித்தால் - இயற்கைக் காரணிகள் மீது மட்டும் முழு நம்பிக்கை வைத்து அதன் அடிப்படையில் தனது முழு வாழ்வையும் அமைத்துக் கொண்டால் இவ்வுலகம் அவனுக்கு எதிராகச் செயல்படத் தொடங்கிவிடும்., எந்தச் சக்திகளைத் தனக்குக் கீழ்ப்படியுமாறு வசப்படுத்தி வைத்தானோ அந்த சக்திகளே - ஒவ்வொரு விநாடியும் அவற்றின்பால் அவன் அதிகத் தேவை உடையவனாக இருக்கும் நிலையில் - அந்த சக்திகளே அவனை ஏமாற்றத் தொடங்கி விடும்., இயற்கையே அவனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து அவனுக்குத் துன்பமாக மாறிவிடும்!

## ஒரு கொள்கைப் போராட்டத்தின் சரிதையே குகை அத்தியாயம்!

இரு சிந்தனைகள், இரு கொள்கைகள், இரு கருத்துகளுக்கு மத்தியிலான ஒரு போராட்டத்தின் சரிதையே இந்தக் குகைஅத்தி யாயம்! ஒன்று: இயற்கை சக்தியின் மீதும் அதனைப் பின்தொடரும் பயன்களின் மீதும் மட்டும் நம்பிக்கை வைத்தல் எனும் கொள்கை. மற்றொன்று: அல்லாஹ்வையும் ஃகைப் எனும் மறைவான உண்மை களையும் நம்புதல் எனும் கொள்கை!

இவ்விரு கொள்கைகளினால் விளையும் கோட்பாடுகள், செயல்கள், குணபாடுகள், தாக்கங்கள், திருப்பங் கள் ஆகியவை இந்த அத்தியாயத்தில் விளக்கப்படுகின்றன. மேலும் உலகாயத சக்தியின் மீதும் அதன் பயன்கள் மீதும் மட்டும் நம்பிக்கை வைக்கச் சொல்கிற முந்தைய கொள்கையைக் கடைப்பிடிப்பதனால் - அல்லாஹ்வையும் ஃகைப் எனும் மறைவான உண்மைகளையும் மறுக்கிற கொள்கையைக் கடைப்பிடிப்பதனால் ஏற்படும் கேடுகள் பற்றி எச்சரிக்கையும் விடுக்கிறது இந்த அத்தியாயம்!

## குகைத் தோழர்களின் சரிதை!

இப்பொழுது அந்த நான்கு சரிதைகளுக்கு வாருங்கள். அனைத்திற்கும் முதலில் நம் முன்னே வருபது குகைத்தோழர்களின் சரிதைதான். குகைத்தோழர்கள் யார்? இவர்களின் சரிதை என்ன? மனித வரலாற்றில் இந்தச் சரிதையின் முக்கியத்துவம் என்ன? எல்லாக் காலங்களிலும் நாடுகளிலும் என்றென்றும் ஓதி உணரத் தக்க வகையில் நீடித்த நிலையான சரிதையாக திருக்குர்ஆனிலும் இதற்கொரு முக்கிய இடம் அளிக்கப் பட்டிருப்பது ஏன்? என்பன பற்றி நாம் ஆராந்திட வேண்டும்!

## கிறிஸ்தவ இலக்கியத்திலும் சமயக் கதைகளிலும் இடம் பெற்ற சரிதை!

குர்ஆனின் அற்புதமான மொழிநடையில் - குறிக்கோள் மிக்க கம்பீரமான அதன் விளக்கும் பாணியில் - தேவையற்ற சர்ச்சைகளோ தேவைக்கதிகமான விஷயங்களோ இல்லாத அதன் இலக்கிய நயத்தில் குகைத் தோழர்களின் சரிதையை நாம் காண்பதற்கு முன்னால் -

முற்கால சமய வேதங்களிலும் முன்னோர்களிடமிருந்து தலைமுறை தலைமுறையாகப் பேசப்பட்டு வந்த செவிவழிக் கதைகளிலும் அது பற்றி என்ன கூறப்பட்டுள்ளது என்பதை பார்ப்போம். பிறகு அந்தக் கதைக்கும்,

குர்ஆனில் விளக்கப்பட்டுள்ள சரிதைக்கும் எங்கெங்கு இணக்கமும் பிணக்கும் உள்ளன என்பதை ஆய்வு செய்வோம்.

குகைத் தோழர்களின் சரிதை பழைய ஏற்பாட்டின் **(OLD TESTA MENT)** ஏடுகளில் இடம் பெறவில்லை. ஏனெனில், அது கிறிஸ்தவ வரலாற்றின் தொடக்கத்தில் நடந்த நிகழ்ச்சி. அதாவது இந்த நிகழ்ச்சி, ஈஸா நபியின் சீடர்களின் மூலம் எகத்துவக் கொள்கையை ஏற்குமாறும் சிலைவழிபாட்டைக் கைவிடுமாறும் மேற் கொள்ளப்பட்ட பிரச்சாரப்பணி தீவிரம் அடைந்த பிறகு நிகழ்ந்ததாகும். அப்பொழுது பழைய ஏற்பாட்டின் கடைசி ஏடுகளும் தொகுத்து முடிக்கப்பட்டு விட்டனவே!

இந்தச்சரிதையில் ஈஸா நபியின் சீடர்களுடைய வீரமும் நேர்வழியில் நிலைத்திருக்கும் தீரமும் மிக எடுப்பாக இடம் பெற்றிருக்கும் காரணத்தால் இந்தச் சரிதையைப் பாதுகாக்கவோ மக்களிடையே பரவச் செய்யவோ இயற்கையாகவே யூதர்கள் ஆவல் கொள்ளவில்லை.

ஆனால் கிறிஸ்தவர்களைப் பொறுத்தவரையில் இந்தச் சரிதை அவர்களுக்கு மிகவும் பிரியமான சமயக் கதைகளுள் ஒன்றாகத் திகழ்கிறது. ஏனெனில் இது மிகவும் வினோதமான கதைகளுள் ஒன்று என்பது மட்டு மல்ல ஈஸா நபியின் ஆரம்ப காலத்துச் சீடர்களின் வீரத்தையும் ஈமானிய உறுதியையும் ஏகத்துவக் கொள்கை யைப் பாதுகாப்பதற்காக அவர்கள் செய்த தியாகத்தையும் மேலும் கிறிஸ்தவ மதத்தின் ஆரம்பகாலப் பரிசுத்த மான போதனைகளில் அவர்கள் கொண்டிருந்த உறுதிப்பாட்டையும் மிகத் தெளிவாகப் படம் பிடித்துக்காட்டும் வரலாற்றுச் சான்றாகவும் இது திகழ்கிறது!

இன்றும்கூட குகைத்தோழர்களின் சரிதை-எல்லாக் காலத்திலும் எல்லா நாடுகளிலும் வாழும் இறைநம்பிக்கை யாளர்களின் உள்ளங்களில் இறைநம்பிக்கையைக் கொழுந்துவிட்டெரியச் செய்வதற்கும், இறைமார்க்கத்தின் மீதான ரோஷத்தை உந்தியெழச் செய்வதற்கும் அசத்தியத்தை எதிர்க்கும் ஆற்றலையும் போர்க்குணத்தையும் கிளர்ந்தெழச் செய்வதற்கும் தகுதியான சரிதையாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது!

இந்தச் சரிதைக்குத் தனித்தன்மை அளிக்கும் இத்தகைய சிறப்புக் கூறுகள்தாம் - இந்தச் சரிதை பல காலங்களைக் கடந்து நிலைத்திருப்பதற்குக் காரணமாக, உலகின் பல பாகங்களிலும் பரவுவதற்கும் மக்கள் தலைமுறை தலைமுறையாக இதை எடுத்துச் சொல்லி வருவதற்கும் காரணமாக அமைந்தன!

இப்பொழுது நாம், ஆரம்ப காலக் கிறிஸ்தவர்கள் இந்தச் சரிதையினை எப்படிப் புரிந்திருந்தனர்? பின்னர் தோன்றிய தலைமுறையினருக்கு இதைப் பற்றி எத்தகைய தகவல்களை அளித்து வந்தனர் என்பதைப் பார்ப்போம்!

## நேர் வழியில் நிலைத்து நின்ற இளைஞர்கள்!

பண்பாடுகள் மற்றும் சமயங்கள் பற்றிய கலைக் களஞ்சியத்தில் இடம் பெற்றுள்ள கருத்துச் சாரம்வருமாறு: [7]

துயில் கொண்ட **(Seven Sleepers )** ஏழு இளைஞர்களின் இந்தச் சரிதை, பரிசுத்தவான்கள் பற்றிய சரிதை களிலேயே அறிவுக்கு நல்ல விருந்தாகவும் உலகெங்கும் புகழ்பெற்றதாகவும் உள்ளது. புராதன ஏடுகள் அனைத்திலும் இதுபற்றி இடம் பெற்றுள்ள விவரம் வருமாறு:

திக்யானூஸ் **(decius)** என்ற மன்னன் கிரேக்கத்தின் இஃபீஸஸ் **(Ephesus)** என்ற [8]பழம்பெரும் நகருக்குச் சென்று அங்கே சிலை வழிபாட்டு முறையைப் புதுப்பித்தான்.

---

**[7] பிரபல ஆங்கில வரலாற்றாசிரியர் எட்வர்ட் கிப்பன் (Edward gibbon) என்பார் Decline and fall of The Romen Empire - ரோமானியப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும் என்ற தமது நூலில் இந்தச் சரிதையை தனக்கே உரிய பாணியில் எடுத்தரைத்துள்ளார். இலக்கியம், வரலாறு, விமர்சனம், விளக்கம் ஆகிய அனைத்து அம்சங்களும் அதிலுள்ளன. மேலும் கிறிஸ்தவ மதக் காழ்ப்புணர்ச்சியும் தேவை யின்றி இஸ்லாத்தைச் சாடியிருப்பதும் அதில் எடுப்பாகத் தெரிகிறது! பார்க்க: பாகம் 2 பக்கம் 241 - 243 - Modern Library Giant Seriec**

**[8] இந்தக் குகைஅத்தியாயத்திற்கு விரிவுரை தரும்பொழுது - பைளாவி, நைஸாபூரி, ஆலூசி, இப்னு கதீர் போன்ற பெரும்பாலான விரிவுரையாளர்கள் இந்நிகழ்ச்சி நடைபெற்ற ஊர் இஃபீஸஸ் என்றே கருதுகிறார்கள். கிறிஸ்தவ மத வரலாற் றாசிரியர்கள், பூகோள வல்லுநர்கள் பெரும்பாலோர்கூட இவ்வாறே கருத்து தெரிவித்துள்ளனர். பேராசிரியர் கிப்பனும் - ரோமாபுரியின் நலிவும் வீழ்ச்சியும் என்கிற நூலில் இதையே சரியான கருத்து எனக்கூறியுள்ளார். இந்நூலில் துயில் கொண்ட எழுவரின் சரிதை எனும் பகுதியில் இதனைக் கூறியுள்ளார்.**

**இந்த ஊரின் பூகோள அமைப்பு குறித்து புஸ்தானியின் கலைக் களஞ்சியத்தில் வந்துள்ள விவரம் வருமாறு:**

**ஆசியா கண்டத்திலுள்ள அனாடோலி ( Anatolie) தீப கற்பத்தின் பன்னிரண்டு சிற்றூர்களில் இந்த ஊரும் ஒன்று. இது இஸ்மீர் (Smyrne) எனும் இடத்தில் இருந்து 60 கி.மீ. தெலைவில் உள்ளது. ரோமானியர் மேற்காசிய மாகாணத்தின் தலைநகராக இதனை**

சிலைகளுக்குப் பிராணிகளைப் பலியிடுமாறும் பூஜைப் பொருட்களைச் சமர்ப்பிக்குமாறும் - அங்கே வசித்து வந்த மக்களுக்கு குறிப்பாக கிறிஸ்தவர்களுக்குக் கட்டளை பிறப்பித்தான். அதனால் கிறிஸ்தவர்களில் ஒரு பிரிவினர் தம்முடைய கிறிஸ்தவக் கொள்கையைக் கைவிட்டனர். வேறு ஒருசிலர் மட்டுமே ஆட்சியாளர்கள் இழைத்த கொடுமைகளையும் துன்பங்களையும் தாங்கிக்கொண்டு தமது மதத்திலேயே நிலைத்திருந்தனர்.

இந்தக் கட்டத்தில் அரசனிடம் ஏழுஇளைஞர்களைப் பற்றி முறையிடப்பட்டது. (சில அறிவிப்புகளில் எட்டுப்பேர் என உள்ளது) அரசாங்கப் பிரமுகர்களின் மாளிகைகளிலேயே அவர்கள் வசித்து வந்தனர். அவர்களின் பெயர்கள் குறித்து பல்வேறு கருத்துகள் உள்ளன. அந்த இளைஞர்கள் மறைமுகமாக கிறிஸ்தவ மதத்தைப் பின்பற்றுகிறார்கள் என்றும் சிலைகளுக்கு பூஜை புனஷ்காரங்கள் சமர்ப்பிப்பதில்லை என்றும் அவர்கள் மீது குற்றம் சுமத்தப்பட்டது.

அந்த இளைஞர்கள் மீது உடனே நடவடிக்கை எடுக்காமல் கால அவகாசம் அளித்தான், அரசன்! அப்பொழுது அவர்கள் தம் தவற்றை எண்ணி மனம் வருந்தி கிறிஸ்தவ மதத்தை விட்டும் திரும்பிவிடுவார்கள்., திருந்தி விடுவார்கள் என்று எதிர்பார்த்தான். இதற்கிடையே அரசன் ஊரைவிட்டு வெளியேறினான்.

இந்த காலகட்டத்தில் அந்த இளைஞர்கள் அவ்வூரை விட்டும் வெளியேறி அருகில் இருந்த மலைக்குகை ஒன்றில் தஞ்சம் அடைகிறார்கள். அந்த மலையின் பெயர் **Ancilus** - ஆன்ஸிலஸ் ஆகும்.

இந்நிலையில் **Dimoedws** அல்லது **Imblicus** என்ற தோழர் அழுக்குப் படிந்த, கிழிந்த, பழைய ஆடைகளிலேயே யாருக்கும் தெரியாமல் குகையை விட்டும் வெளிக்கிளம்பி ஊருக்குள் செல்கிறார்., செய்திகளைத் தெரிந்து வர வேண்டும்., உணவு வாங்கி வர வேண்டும் என்பதே அவரது நோக்கம்.

இதற்குள்ளாக அரசனும் ஊர் திரும்புகிறான். அந்த இளைஞர்களைத் தன்னிடம் அழைத்துக் கொண்டு வருமாறு கட்டளை பிறப்பிக்கிறான்.

உணவு வாங்கிக்கொண்டு திரும்பிய அந்தத்தோழர், அரசனின் கட்டளையைத் தம் தோழர்களுக்குத் தெரி விக்கிறார். கவலையும் கலக்கமும் பீடித்த நிலையில் அனைவரும் உணவு உட்கொள்கிறார்கள். பின்னர் ஆழ்ந்த, நீண்ட நித்திரையில் அனைவரும் மூழ்கிவிடுகிறார்கள். அல்லாஹ்தான் அத்தகைய தூக்கத்தை அவர்கள் மீது சாட்டுகிறான்.

அந்த இளைஞர்களைப் பற்றி அரசனால் அறிய முடியாமல் ஆனபொழுது அவர்களின் பெற்றோரை அழைத்து விசாரித்தான். அதற்கு அவர்கள், அந்த இளைஞர்கள் ஓடிப்போனதற்கும் எங்களுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது., இந்தச் சதித்திட்டத்தில் மறைமுக உதவி எதுவும் நாங்கள் செய்யவில்லை என்று தெரிவித் தார்கள். அத்துடன் ஆன்சிலஸ் மலையில் அந்த இளைஞர்கள் ஒளிந்திருக்கிறார்கள் என்பதையும் அரசனிடம் சொல்லி விடுகிறார்கள்!

அதனைக் கேட்டதும் அரசன்,அந்தக் குகைவாசலைப் பெரும் பாறாங்கற்களைக்கொண்டு அடைக்க ஆணை பிறப்பித்தான். அந்தக் குகைக்குள்ளேயே அந்த இளைஞர்கள் உயிருடன் புதையுண்டு அவர்களின் வினையா லேயே அவர்கள் மரணம் அடையட்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்தான்!

**Theodore** மற்றும் **Rufinus** எனும் கிறிஸ்தவர் இருவர், வீரத் தியாகிகளான அந்த இளைஞர்களின் சரிதையை ஒரு ஈயத் தகட் டில் எழுதி குகையை அடைத்திருந்த பாறைக்கு அடியில் அதனைப் புதைத்து விடுகிறார்கள்!

## திறந்தது குகை வாசல்!

முன்னூற்றி ஏழு ஆண்டுகள் உருண்டோடிய பிறகு இரண்டாம் தியோதீஸெஸ் மன்னனின் ஆட்சி காலத்தில் நாட்டில் பெரும் புரட்சி ஒன்று வெடித்தது. கிறிஸ்வர்கள் சிலர் அதனை வழிநடத்தினார்கள். அவர்களில் **Theodore** என்ற பாதிரியின் தலைமையை ஏற்றிருந்த ஒரு கூட்டத்தினர் மறுமைக் கொள்கையை மறுத்தனர். அதாவது, மரணித்தவர்கள் மீண்டும் மறுவுலகில் எழுப்பப்படுவதையும் இந்த உடல்களுடனேயே அங்கு

---

**அமைத்திருந்தனர். மேலும் மிகப்பெரிய அளவில் செல்வாக்குடன் நடந்துவந்த வியாபார மையமாகவும் சந்தையாகவும் இந்நகரம் திகழ்ந்தது.**

**ஆயினும் இங்கே அமைந்திருந்த டயானா என்ற கிரேக்கத் தெய்வத்தின் பிரமாண்டமான வணக்கத் தலமே இந்நகரத்தின் மாபெரும் பெருமையாக விளங்கியது. இந்த வணக்கத் தலம் உலகின் ஏழு அற்புதங்களுள் ஒன்றாக் கணிக்கப்படுகிறது! மேலும் கிரேக்க வணக்கத் தலங்களிலேயே இதுவே மிகப்பெரியது.**

**A Manual Of Bibel History எனும் நூலில் அறிஞர் பிளாக்கி கூறுகிறார்: இ:.பீஸஸ் நகரம் முற்கால வரலாற்றில் - தத்துவம், குடிமக்களின் கட்டுப்பாடற்ற போக்கு, ஒழுக்கக்கேடு ஆகியவற்றில் பிரபலமாக விளங்கியது. தீயொழுக்கத்திற்கு ஓர் உவமையாகவே இந்த ஊர் திகழ்ந்தது. இந்நகரின் சிலை வழிபாட்டில், மேற்கத் திய முறையும் கிழக்கத்திய முறையும் கலந்திருந்தன!**

அனைவரும் ஒன்றுதிரட்டப் படுவது சாத்தியமே என்பதையும் நிராகரித்தார்கள். அந்த புரட்சியின் தீவிரத்தைக் கண்டு கிறிஸ்தவ மன்னன் நிலைகுலைந்து போனான்.

இந்நிலையில் **Adolius** என்ற பெயர் கொண்ட ஊர்த்தலைவர் ஒருவரின் உள்ளத்தில் அல்லாஹ் ஓர் எண்ணத்தைப் போட்டான். அந்தக் குகை அமைந்திருந்த மைதானத்தில் தன்னுடைய ஆடுகளுக்காகப் பட்டி ஒன்றைக் கட்டவிரும்பினார். அதைக் கட்டுவதற்காக வந்த கட்டிடக் கலைஞர்கள் குகையை அடைத்திருந்த பாறாங் கல்லைப் பயன்படுத்தினார்கள். இவ்வாறாகச் சிறிது சிறிதாகக் குகைவாசல் திறக்கப்பட்டது.

## மறுவுலகை உண்மைப்படுத்தும் ஆதாரம்

இந்நேரத்தில் அல்லாஹ் அந்த இளைஞர்களை விழித்தெழச் செய்கிறான். விழித்தெழுந்த இளைஞர் களுக்கு - நாம் ஓரிரவுதான் இங்கு தூங்கிக்கொண்டிருந்தோம் என்றே தோன்றுகிறது! தாங்கள் அனைவரும் திஸீஸ் மன்னனின் கையால் மரணத்தைச் சந்திக்க நேந்தாலும் பரவாயில்லை., அனைவரும் தியாகிகளாக மரணம் அடைவோம் என்று சூளுரைத்துக் கொள்கிறார்கள்!

அவர்களில் **Diomedes** என்ற தோழர் ஒருவர் வழக்கம் போல் ஊருக்குள் செல்கிறார். ஊரின் நுழை வாசலில் சிலுவை செதுக்கி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு அதன் முன்னால் திகைத்துப்போய் நிற்கிறார். நிலைமை என்ன என்பதே அவருக்குப் புரியவில்லை. அவ்வழியே போய்க்கொண்டிருந்த ஒருவரிடம் - இதுதான் இஃபீஸஸ் பட்டணமா? என்று கேட்டுத் தெரிய வேண்டியதாயிற்று அவருக்கு! ஊரினுள் ஏற்பட்டிருந்த இவ்வளவு பெரிய மாற்றத்தைத் தம் தோழர்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று அவரது உள்ளத்தில் ஆவல் பொங்கு கிறது.

ஆயினும் தனது ஆவலைக் கட்டுப்படுத்திக்கொண்டு உணவு வாங்குகிறார். தான் கொண்டுவந்திருந்த பணத்தை அதற்கான கிரயமாகக் கொடுக்கிறார். அவை திஸீஸ் மன்னன் காலத்தில் மக்களிடத்தில் புழக்கத் தில் இருந்த நாணயங்களாகும்.

அவற்றைப் பார்த்த கடைக்காரரும் கடைத்தெருவில் இருந்த மற்றவர்களும் - இந்த இளைஞன் பழங்காலத் துப் புதையல் ஒன்றைக் கண்டெடுத்திருக்கிறான் என்று கருதுகிறார்கள். அப்படியானால் அதில் தங்களுக்கும் ஒருபங்கு வேண்டும் என்று நப்பாசை ஏற்படுகிறது அவர்களுக்கு! அதனால் அந்தத் தோழரை அச்சுறுத்து கிறார்கள். ஊரின் நடுவே - வீதிகள் வழியாக அவரை இழுத்துக் கொண்டு செல்கிறார்கள். அதனைக் காண் பதற்கு மக்கள் கூட்டம் முண்டியடித்துக் கொண்டு வருகிறது. அந்தப் பெருங்கூட்டத்தின் நடுவே தனக்கு அறிமுகமானவர் யாரேனும் தென்படுகிறாரா என்று அந்த இளைஞர் தேடிப்பார்க்கிறார். அப்படி எவரும் கிடைக்க வில்லை!

அந்த ஊரின் ஆட்சி அதிகாரியான பாதிரி ஒருவர் அந்த இளைஞரிடம் விசாரிக்கிறார். தன் நீண்ட சரிதை யைப் பாதிரியிடம் எடுத்துச் சொல்கிறார் இளைஞர். தன்னுடன் குகைக்கு வந்து தன் தோழர்களையும் சந்திக்குமாறு அனைவரையும் அழைக்கிறார். எல்லோரும் மலை உச்சியில் ஏறுகிறார்கள். அங்கே இரண்டு ஈயப் பலகைகளைக் காண்கிறார்கள். அவற்றில் அந்த இளைஞர் கூறிய விவரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. எல்லோரும் குகையினுள் நுழைகிறார்கள். அங்கே அவருடைய தோழர்கள் அனைவரும் உயிருடன் இருக்கக் காண் கிறார்கள். அவர்களின் முகங்களில் அமைதியும் ஒளியும் இலங்கிக் கொண்டிருந்தன!

செய்தி இரண்டாம் தியோதீஸெஸ் மன்னனுக்கு எட்டியது. அவரும் அந்த இளைஞரைக் காண்பதற்காகக் குகைக்கு வருகிறார். அப்பொழுது அவரிடம்- **Achillides** அல்லது **Maximilian** என்ற தோழர் கூறினார்:

"அல்லாஹ்தான் எங்களை நீண்ட நித்திரையில் ஆழ்த்தினான்., பிறகு மறுமை நாள் ஏற்படும் முன்னர் எங்களை விழித்தெழவும் செய்துள்ளான். இதன் நோக்கம், மறுவுலகத்தில் மனிதர்கள் அனைவரும் உயிருடன் எழுப்பப்பட்டு ஒன்றுதிரட்டப்படுவார்கள் என்பதற்கு ஓர் ஆதாரம் சமர்ப்பிக்க வேண்டும் என்பதுதான்!"

பிறகு அந்த இளைஞர்கள் இறுதியான இயற்கை மரணம் அடைந்தார்கள். அவர்களின் நினைவாக ரோமானிய ஆலயம் ஒன்று அவ்விடத்தில் எழுப்பப்பட்டுள்ளது. [9]

---

[9] **பண்பாடு மற்றும் சமயங்கள் பற்றிய கலைக் களஞ்சியம். தலைப்பு: துயில் கொண்ட ஏழு பேர். ---- இப்னு ஜரீர் தபரி அவர்களும் ஏனைய திருக் குர்ஆன் விரிவுரையாளர்களும் இஸ்லாமிய அறிஞர்களும் - இப்னு இஸ்ஹாக் உடைய அறிவிப்புடன் - இந்தச் சரிதையைத் தமது நூல்களில் விலாவாரியாக இடம் பெறச் செய்துள்ளார்கள். அவற்றில் பல்வேறு யூகங்களும் கற்பனைகளும் கலந்து விட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் - அவர்களுடைய காலத்தில் கிறிஸ்தவ மத மூலாதார நூலகள் பரவலாகக் கிடைக்கவில்லை என்பதும் கிறிஸ்தவ மதம் அரசு அங்கீகாரம் உடையதாக ஆகுவதற்கு முன்னர் ரோமாபுரியின் வரலாற்றை அவர்கள் முழுமையாக**

## வரலாற்று முக்கியத்துவம்

இந்தச் சரிதைக்கு எந்தஅளவு வரலாற்று முக்கியத்துவம் உள்ளதெனில், பெரும் பெரும் வரலாற்றாசிரியர்கள் மட்டுமல்ல, மக்களிடம் பரவியுள்ள கதைகள், சம்பவங்களை விமர்சனம் செய்ப வர்கள்கூட இந்நிகழ்ச்சியின் உண்மை பற்றி ஐயம்கொள்ளவில்லை. இது நிகழ்ந்திருக்க முடியும் என்றே கருதுகின்றனர். ஏனெனில் இந்நிகழ்ச்சி கிறிஸ்தவ உலகம் முழுவதும் புகழ் பெற்றிருந்தது. பண்டைய ஏடுகள் அனைத்திலும் இடம் பெற்றிருந்தது. மக்களும் தலைமுறை தலைமுறையாக இதனை நினைவு கூர்ந்து வந்துள்ளனர்!

இதுபோன்ற புதுமையான நிகழ்ச்சிகள் - கதைகளையெல்லாம் மோசடியானவை என்று விமர்சனம் செய்யும் போரசிரியர் கிப்பன் இவ்வாறு கூறுகிறார்:

இந்தப் புதுமையான சரிதையை வெறும் கிரேக்கத்துக் கட்டுக்கதை என்றும் கிரேக்கர்களால் உண்மை போல் மெருகூட்டிப் புனைந்து கூறப்பட்ட சமயக்கதை என்றும் சொல்லிவிட முடியாது. ஏனெனில் ஓர் அற்புதமாக எடுத்துரைக்கப்படுகிற இந்நிகழ்ச்சி நடந்த பிறகு ஐம்பது ஆண்டுகள் வரை அது பற்றி நம்பத்தகுந்த பல அறிவிப்புகள் கிடைத்துள்ளன. இரண்டாம் தியூதீஸெஸ் மன்னனின் ஆட்சிக் காலத்திற்குச் சரியாக இரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு பிறந்தவரான ஜேம்ஸ் ஆஃப் சாரஸ் (Jams of Sarus) என்ற ஷாம் தேசத்து பாதிரி ஒருவர் தாம் எழுதிய 230 சரித்திரக் கதைகளில் ஒருகதையை இஃபீஸீஸ் நகரத்துப் புகழ்பெற்ற இளைஞர் (குகைத் தோழர்) களுக்காக ஒதுக்கியிருக்கிறார்!

மேலும் கி.பி. 6 ஆம் நூற்றாண்டு நிறைவடையும் முன்பே இந்தக் குகைத்தோழர்களின் சரிதை கிரிகோரி (Gregory Of Tours) என்ற கிரேக்க அறிஞனின் முயற்சியால் கிரேக்க மொழியில் இருந்து லத்தீன் மொழிக்குப் பெயர்க்கப்பட்டுள்ளது.

கீழை நாட்டு கிறிஸ்தவ உலகில் நடைபெற்று வந்த இரா போஜனம் (Eauvharist) தொடர்பான திருக்கூட்டங்களில் குகைத் தோழர்களின் புகழும் தியாகமும் கண்ணியத்தோடு நினைவு கூரப்பட்டு வந்துள்ளது. அது மட்டுமல்ல இந்த இளைஞர்களின் பெயர்கள் ரோமானியப் பண்டிகைகளிலும் ரஷிய நாட்டுப் பஞ்ஞாங்கத்திலும் முழுமையாக இடம் பெற்றிருந்தன. இத்தகைய ஆதாரங்களில் இருந்து - குகைத் தோழர்களின் சரிதை கிறிஸ்தவ உலகத்தில் மட்டும் புகழ்பெற்றிருக்கவில்லை எனத் தெரிகிறது!" [10]

## ஆண்டு எண்ணிக்கையில் கருத்து வேறுபாடு

குகைத் தோழர்கள் தூங்கிக் கழித்தவை 300 ஆண்டுகள் என் றும் 309 ஆண்டுகள் என்றும் இருவிதமான கருத்துகள் உள்ளன. 300 ஆண்டுகள் என கிறிஸ்தவர்கள் அறிவித்திருப்பதாக இஸ்லாமிய விரிவுரையாளர்கள் எடுத்துரைக்கிறார்கள். பண்பாடு மற்றும் சமயம் பற்றிய கலைக்களஞ்சியத்தில் 309 ஆண்டுகள் என உள்ளன.

ஆனால் குர்ஆனில் வந்திருப்பதுபோல் 300 அல்லது 309 ஆண்டுகள் எனும் வித்தியாசம் பற்றி - அது சூரியமான மற்றும் சந்திரமானக் கணிப்புகளினால் ஏற்பட்டது என்று முற்கால திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் விளக்கம் அளிக்கிறார்கள்.

அல்லாமா இப்னு கதீர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "குகைத்தோழர்கள் குகையில் தங்கியிருந்த கால அளவை இந்த வசனத்தின் மூலம் அல்லாஹ் தன்னுடைய தூதருக்கு அறிவித்துக் கொடுக்கிறான். அதாவது, அல்லாஹ், அந்த இளைஞர்களைத் தூக்கத்தில் ஆழ்த்தியது முதல் அவர்களை வழித் தெழச்செய்தது வரை - அக்கால மக்கள் அந்த இளைஞர்கள் உயிருடன் இருப்பதைக் கண்டிறிந்தது வரையிலான கால அளவை அறிவித்துக் கொடுக்கிறான். அதன் அளவு முன்னூறு ஆண்டுகள்., அதையே சந்திரமானக் கணக்குப்படி பார்த்தால் ஒன்பது ஆண்டுகள் அதிகரிக்கும். முன்னூறு ஆண்டுகள் என்பது சூரியமானக் கணக்கின் அடிப் படையிலாகும். ஒவ்வொரு நூற்றாண்டையும் சந்திரமானக் கணக்கின்படியும் சூரியமானக் கணக்கின்படியும் கணக்கிட்டால் மூன்று ஆண்டுகள் வித்தியாசப்படும் என்றும் அறிவித்துக் கொடுக்கிறான். இதனால்தான் - குகையில் அவர்கள் முன்னூறு ஆண்டுகள் தங்கினார்கள் என்று கூறிய பின்னர்-(சிலர்) ஒன்பது ஆண்டுகளைக்

---

**அறிந்திருக்க வாய்ப்பில்லை என்பதும்தான். உதாரணத்திற்கு பார்க்க: தஃப்ஸீர் இப்னு ஜரீர் பாகம் 15 பக்கம் 126 - இதனால்தான் இந்நூல்களை விட்டுவிட்டு கிறிஸ்தவ மத மூலாதார நூல்களில் இருந்து மட்டும் நாம் எடுத்தெழுதியுள்ளோம்.**

[10] **பேராசிரியர் கிப்பனின் ரோமானியப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும் எனும் நூலில் பாகம் 2 பக்கம் 241 - 243 துயில் கொண்ட ஏழு பேர் எனும் பகுதியைப் பார்க்கவும். (Modern Library Giant Series U.S.A )**

கூட்டிக் கணக் கிடலானார்கள் - என்று அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான்" (பார்க்க: த∴ப்ஸீர் இப்னு கதீர், சூரத்துல் கஹ்∴பின் விளக்கவுரை)

கலைக்களஞ்சியத்தில் இடம்பெற்றதாக நாம் எடுத்தெழுதியதன் படியும் கிப்பனின் நூலிலும் காலாகாலமாக மக்களிடையே பேசப்பட்டுப் பிரபலமாகி உள்ளதன்படியும் வரலாற்று ஏடுகளிலும் திருக்குர்ஆன் விரிவுரை களிலும் குறிப்பிட்டுள்ளதன்படியும் -

அதாவது, குகைத்தோழர்கள் தலைமறைவானதும் குகையில் தஞ்சம் புகுந்ததும் திஸீஸ் என்ற ரோமானிய மன்னனின் காலத்தில் நடைபெற்றது. அந்த மன்னனைத்தான் - அரேபிய வரலாற்றாசிரியர்களும் இஸ்லாமிய அறிஞர்களும் ஏனைய பொதுமக்களும் **திக்யானூஸ்** என்று பெயரிட்டு அழைக்கிறார்கள். இந்த மன்னன் (அன்றைய காலத்தில் தூய ஏகத்துவமாக இருந்த) கிறிஸ்தவமதக் கொள்கையை அழிப்பதற்கு மேற்கொண்ட - வரலாற்றுப் பிரபலமான அக்கிரமங்கள், அடக்குமுறைகளின் விளைவாகவே அந்த இளைஞர் கள் ஓடி ஒளிந் தார்கள். பிறகு அவர்கள் கண்டு பிடிக்கப்பட்டதும் அவர்களின் நிலைமை வெளி உலகிற்குத் தெரியவந்ததும் - ஏகத்துவக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவரான இரண்டாம் தியூதீஸிஸ் என்ற கிறிஸ்தவ மன்னனின் காலத்தில் நடைபெற்றது - என்கிற தகவல்களின்படி இவ்வாறு ஓர் ஐயம் எழுப்பப்படுகிறது:

அதாவது, இந்த இரு மன்னர்களுக்கும் இடைப்பட்ட காலம் பெரும்பாலும் இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேல் போகாதே! (அப்படி இருக்க அந்த இளைஞர்கள் முன்னூறு ஆண்டுகள் நித்திரையில் ஆழ்ந்திருந்தார்கள் என்று எப்படி சொல்லப்பட்டது?)

இதனை அடிப்படையாக வைத்துதான் -குகையில் அந்தத் தோழர்கள் தங்கியிருந்த காலத்தை நிர்ணயித்து குர்ஆனில் வந் துள்ள எண்ணிக்கை பற்றி எட்வர்ட்டு கிப்பன் பரிகாசம் செய்கிறார்!

முற்கால, தற்கால விரிவுரையாளர்களில் சிலர்[11] இந்த ஐயத்தில் இருந்து தப்புவதற்காக இவ்வாறு விளக்கம் தர வேண்டிய கட்டா யத்திற்கு ஆளாயினர்: குர்ஆனில் வந்துள்ள - **அவர்கள் தங்களது குகையில் முன்னூறு ஆண்டுகள் தங்கினார்கள். சிலர் ஒன்பது ஆண்டுகளை அதிகமாக்கினார்கள்** எனும் வாக்கியம் அல்லாஹ்வின் தீர்ப்பு அல்ல., குர்ஆன் நிர்ணயித்ததும் அல்ல. வேதம் வழங்கப்பட்டவர்களின் கருத்தாவே அது சொல்லப் பட்டுள்ளது. எனவே இது அவர்களுடைய வாதங்கள், கணிப்புகளில் சேர்ந்ததாகும். அதுமட்டுமல்ல இந்த வாக்கியம் இதற்கு முன்னுள்ள வசனத்துடன் இணைந்ததாகும். அதிலும் இதே போன்றே - குகைத்தோழர்கள் எத்தனை பேர் என்பதில் முந்தைய வேதக்காரர்களிடம் இருந்த கருத்து வேறுபாடுகளைத்தான் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். அந்த வசனம் இதுதான்:

"அந்த இளைஞர்கள் மூவர்.,அவர்களில் நான்காவது அவர்களின் நாய் என்று அவர்கள் கூறுவர். (வேறு சிலர்) அவர்கள் ஐவர்.,அவர்களில் ஆறாவது அவர்களின் நாய் என்று - மறைவான விஷயத்தை (தவறாகக் கணித்து) கூறுவர். (இன்னும் சிலரோ) ஏழுபேர்., அவர்களில் எட்டாவது அவர்களின் நாய் என்றும் கூறுவர்"

கத்தாதா (ரலி)மித்ர∴ப் பின் அப்துல்லாஹ்(ரலி)ஆகியோரின் கருத்தும் இதுவே என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்தக் கருத்துக்கு இசைவாக கிராஅத்துஷ் ஷாத்தா (தனிப்பட்ட கிராஅத் - ஓதல் ஒன்றும்) அறிவிக்கப் பட்டுள்ளது: அது **வேதக் காரர்கள் கூறினார்கள்** என்றே தொடங்குகிறது:

قالوا ولبثوا فى كهفهم ثلاث مائة سنين وازدادوا تسعا

"வேதக் காரர்கள் கூறினார்கள்: அவர்கள் தங்களது குகையில் முன்னூறு ஆண்டுகள் தங்கினார்கள். (சிலர்) ஒன்பது ஆண்டுகளை அதிகமாக்கினார்கள்"

இவ்வாறு கூறுவோர் தங்களது கருத்து ஆதாரமாக அடுத்து வரும் வசனத்தைச் சுட்டிக்காட்டுகிறார்கள். அது இதுதான்:

قُلِ اللهُ أَعْلَمُ بِمَا لَبِثُوْا لَهُ غَيْبُ السَّماوَاتِ وَالأَرْضِ

"(நபியே,) நீர்கூறுவீராக: அவர்கள் தங்கியிருந்த காலத்தை அல்லாஹ்தான் நன்கு அறிந்தவன். வானங்கள், பூமியின் இரகசி யங்கள் யாவும் அவனுக்கே தெரியும்" (18: 26)

---

[11] **அத்த∴ப்ஸீருல் காஸிமிய்யு -வில் அல்லாமா ஜமாலுத்தீன் காஸிமி, த∴ப்ஹீமுல் குர்ஆனில் மௌலானா அபுல் அ∴லா மௌதூதி ஆகியோர் போன்று.**

அந்த இளைஞர்கள் 300 - 309 ஆண்டுகள் தங்கினார்கள் என்பது அல்லாஹ்வின் தீர்ப்பாக இருந்தால் பிறகு பிரச்னையைத் தன்பக்கம் விட்டு விடுமாறு நபிக்கு கட்டளையிட்டிருக்கமாட்டான். -இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் இவ்வாறே விளக்கம் அளித்திருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

## இந்த வாதத்திற்கு பதில்

அல்லாமா ஆலூஸி அவர்கள் கூறுகிறார்கள்: இப்னு அப்பாஸ் (ரலி)அவர்களின் கருத்தும் இதுவே என்று சொல்லப்பட்டிருப்பது சரியல்ல. ஏனெனில் குகையில் தங்கிய ஆண்டுகள் எத்தனை என்பது போன்றதுதான் அந்தத் தோழர்கள் எத்தனை பேர் என்கிற பிரச்னையும்! இதிலும் **3\5\7** எனப் பல கருத்துகள் உள்ளன. 'அல்லாஹ் இந்தக் கருத்துகளைக் குறிப்பிட்டுவிட்டு கடைசியில் -அவர்களது எண்ணிக்கையை என் இறைவனே நன்கு அறிந்தவன் என்று (நபியே) நீர் கூறுவீராக' எனக் கட்டளையிட்டு இந்தப் பிரச்னையையும் தன்னிடம் விட்டு விடுமாறுதான் கூறியுள்ளான்.

இந்த இடத்தில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அந்த இளைஞர்கள் ஏழுபேர் என்று விளக்கம் தந்திருப்ப தாகத் தெளிவான ஓர் அறிவிப்பு வந்துள்ளது. இவ்விரு இடங்களிலும் பிரச்னையைத் தன்னிடம் விட்டு விடுமாறுதான் அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான். அந்தக் கட்டளை அவர்கள் ஏழுபேர் என்ற கருத்தை மறுப்பதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கருதாத பொழுது 300 \ 309 என்பதை மட்டும் அது மறுப்பதாக அவர்கள் கருதுகிறார்கள் என்பது எப்படி உண்மையாக முடியும்? அப்படித் தனித்தனியாகப் பொருள் கொடுப் பதற்கு இவ்விரு வசனங்களுக்கும் எவ்வித வேறுபாடும் இல்லையே!

மூத்த மார்க்க அறிஞர்கள் சிலரும் இந்தக்கருத்தை மறுத்துள்ளார்கள்., அவர்கள் கூறுகிறார்கள்: "அரபி மொழியின் சீரான இயப்புணர்வே இந்தக் கருத்தை ஏற்பதில்லை. குர்ஆனை ஓதும் எவரும் இவ்வகுப்பாரின் புது விளக்கத்தை ஊன்றிப் படித்தாலே தவிர சுயமாக இதுபோல் புரியமாட்டார்"

இமாம் ராஜி கூறுகிறார்கள்: அவர்கள் மூவர்., அவர்களில் நாலாவது அவர்களது நாய் என்று அவர்கள் கூறுவர் என்பது 22 வது வசனத்தின் தொடக்கமாகும். ஆனால் 300 \ 309 ஆண்டுகள் அவர்கள் குகையில் தங்கியிருந்தாகக் கூறுவது 25ஆம் வசனம்! இவ்விரு வசனங்களுக்கு மத்தியில்" அவர்களைப்பற்றி (மக்களிடம்) அதிகம் தர்க்கம்புரியாதீர்., மேலோட்டமான முறையிலே தவிர" எனும் 22 ஆம் வசனத்தின் இறுதித் தொடர் பிரித்து விடுகிறது! எனவே வேதக்காரர்களின் கருத்து வேறுபாடுகள் பற்றிய விவரம் 22 வது வசனத்துடன் முடிந்து விடுவதால் - 24 ஆம் வசனத்தில் - அவர்கள் 300 - 309 ஆண்டுகள் குகையில் தங்கியதாகக் கூறுவது திருக்குர்ஆனின் தீர்ப்பே ஆகும். அதற்கு முன்னதாக - (நபியே,) நீர் கூறுவீராக: அவர்கள் தங்கியிருந்த காலத்தை அல்லாஹ்தான் நன்கு அறிந்தவன். வானங்கள், பூமியின் ரகசியங்கள் யாவும் அவனுக்கே தெரியும்" எனும் வசனம் இடம் பெற்றிருப்பதால் அது வேதக்காரர்களின் கருத்தாக இருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை"

இமாம் இப்னு தைமிய்யா கூறுகிறார்கள்: அவர்கள் எவ்வளவு காலம் தங்கினார்கள் என்பதை அல்லாஹ் தான் நன்கு அறிந்தவன் எனும் வசனத்தின் அடிப்படையில் 300 \ 309 ஆண்டுகள் தங்கியதாகச் சொல்லப் பட்டது வேதக்காரர்களின் கருத்தாகும் என்பதாக விரிவுரையாளர்களில் சிலர் தவறாக விளக்கம் தருகிறார்கள். ஆனால் அது அப்படியல்ல., அல்லாஹ் அதனை வேதக்காரர்களின் கருத்தாகக் கூறவில்லை., தனது தீர்ப்பாகவே கூறியுள்ளான்" (நூல்: **அல் ஜவாபுஸ் ஸஹீஹ் லிமன் பத்தல தீனல் மஸீஹ்**)

## எது சரியான கருத்து?

குர்ஆன் கூறுகின்ற எண்ணிக்கைக்கும் ரோமானிய வரலாற்றின் விளக்கத்தின்படி அமைகின்ற -கிப்பன் நிர்ணயிக்கிற எண்ணிக்கைக்கும் மத்தியில் கற்பிக்கப்படும் மோதலும் ஐயமும் எங்கிருந்து வந்தது என்பதைப் பார்க்க வேண்டும்.

சில இளைஞர்கள் தலைமறைவாகி குகையினுள் தஞ்சம் புகுந்த நிகழ்ச்சி திஸீஸ் மன்னனின் காலத்தில் நடைபெற்றதாகும் என்று பிலபலமாகி விட்ட கருத்துதான் இதற்கு காரணம். இவனது ஆட்சி காலம் கி.பி. 249 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து கி.பி. 251 ஆம் ஆண்டு ஜூ ன் மாதம் வரைதான்.

இந்த கதையின் நாயகனாக இந்த மன்னனைத் தொடர்புபடுத்தியது இவனைப் பற்றிப் பிரபலமாகி இருந்த இந்தச் செய்திகளாகத்தான் இருக்க வேண்டும்: அதாவது, முரட்டுக்குணம், மனித உயிர்களை அநியாய மாகக் கொலைசெய்தது, கிறிஸ்தவர்களின் மீது கட்டவிழ்த்து விட்ட கொடுமைகள், சிலைகளுக்கு பூஜைப் பொருட்களையும் பலிப்பிராணிகளையும் சமர்ப்பிக்க வேண்டும் என்றும் குறிப்பிட்ட அரசு அதிகாரிகள் முன்னிலை

யில் அவற்றைச் செய்துகாட்டி அவர்களிடம் சான்றிதழ் பெற வேண்டும் என்றும் வற்புறுத்தியது போன்றவை தாம்.[12]

ஆனால் இந்த மன்னன்தான் இந்த நிகழ்ச்சிக்குப் பொறுப்பாளன் என்றும் இவனே இதன் கதாநாயகன் என்றும் குறிப்பிடுவதில் பெரும் ஐயப்பாட்டை ஏற்படுத்துவது எதுவனில், இவனது ஆட்சிக் காலம் மிகமிகக் குறைவு. இரண்டு ஆண்டுகள்கூட இருக்காது. அது மட்டுமல்ல இவ்வளவு குறுகிய ஆட்சிக்காலத்தில்கூட **Goths** - கூத்தார் என்ற இனத்தினருடன் போர் செய்வதில்தான் இவன் ஈடுபட்டிருந்தான். இறுதியில் பிரான்ஸ் நாட்டின் **Rhine** ரைன் என்ற நதிக்கரையில் அந்த இனத்தாரின் கைகளாலேயே கொலை செய்யப்பட்டு இறந்தான்.

மேலும் பரந்துவிரிந்த ரோமாபுரி சாம்ராஜியத்தின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த கீழ்த்திசை கிரேக்க நகரங்களில் நெடிய சுற்றுப் பயணம் ஒன்றை திஸீஸ் மன்னன் மேற்கொண்டதற்கான சாத்தியக் கூறுகள் மிகவும் குறைவே. கிரேக்க நகரங்களுக்கும் நாட்டின் கீழைப் பகுதிகளுக்கும் அவன் பயணம் மேற்கொண்டதாக வரலாற் றிலும் எங்கும் குறிப்பிடவில்லை.

உலக வரலாற்றில் இடம் பெற்றவர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பில் வந்துள்ளது: திஸீஸ் மன்னனின் ஆட்சிக் காலம் மிகவும் குறுகியது. அத்துடன் மிகவும் அமைதியாகவே கழிந்தது. அவன் ஆட்சிக்கு வந்ததுமே ஜால் என்ற நகரத்தின் பக்கம்தான் கவனம் செலுத்தினான்.,அங்கு எழுந்த புரட்சி ஒன்றை அடக்குவதில்தான் ஈடுபட்டிருந்தான்! மேலும் அவனது ஆட்சியின் பெரும் பகுதி கூத்தார் என்ற இனத்தாருடன் நடைபெற்ற போர் களிலேயே கழிந்தது![13]

மேலும் இந்த மன்னன், தனது சட்டத்திற்குக் கட்டுப்படாத காரணத்தால் எந்த கிறிஸ்தவத் தலைவர் களைக் கொன்றானோ அந்தத் தலைவர்களின் பெயர்களையும் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். அதில் குகைத்தோழர்கள் பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை. பேராசிரியர் கிப்பன்கூட அந்த மன்னனால் தண்டிக்கப் பட்டவர்கள் மெத்தம் 10 ஆண்கள் 7 பெண்கள் என்றுதான் குறிப்பிடுகிறார்.[14]

இன்னொன்றையும் கவனத்தில் கொள்ள வேண்டும். கிறிஸ்தவ இளைஞர்கள் சிலர் ஓடி ஒளிந்தது குறிப்பிட்டதொரு பகுதியில் மட்டும் அறியப்பட்ட நிகழ்ச்சிதான். அது நடைபெற்றபொழுது வரலாற்றாசிரியர்களின் கவனத்தை ஈர்க்கும் அளவுக்கு - நூலாசிரியர்கள் தமது ஏடுகளில் அதன் வரலாற்றைப் பதிவு செய்ய ஆவல் கொள்ளும் அளவுக்கு எந்த முக்கியத்துவமும் அது பெற்றிருக்கவில்லை.

ஆனால் அந்த இளைஞர்கள் நீண்ட நெடிய நித்திரையில் இருந்து அற்புதமான முறையில் விழித்தெழுந்து ஊருக்குள் வந்த தும் அவர்களின் புகழ் திக்கெங்கும் பரவியதும்தான் ஒரு வித்தியாசமான நிகழ்ச்சி!

இந்த இரண்டாவது நிகழ்ச்சிதான் அதாவது, தியூசீஸெஸ் மன்னன் காலத்தில் இந்த இளைஞர்கள் தூக்கத்தில் இருந்து எழுந்ததும் கிறிஸ்தவ உலகம் முழுவதும் அவர்களின் செய்தி பரவியதும்தான் மிகவும் பரபரப்பான நிகழ்ச்சிகளுள் ஒன்று! கிறிஸ்தவ உலகெங்கும் பிரபலமான - கிறிஸ்தவ விழாக்களிலும் திருச்சபை களிலும் முக்கிய இடம் பெற்ற செய்தியானது! இத்தகைய பேரற்புதமான நிகழ்ச்சியைத் தம்முடைய ஏடுகளில் தொகுக்கவும் பதிவு செய்யவும் வரலாற்றாசிரியர்கள் முனைப்புக் காட்டினார்கள். பிரச்சாரகர்களும் அதனை எடுத்துரைப்பதில் பெருமிதம் கொண்டார்கள்.

இந்த அடிப்படையில் நாம் ஆராய்ந்தோமானால் இந்நிகழ்ச்சி பற்றிய ஆதாரப்பூர்வமான உண்மை இதுதான் எனத் தெளிவாகிறது:

---

[12] பார்க்க: பிரிட்டானிய கலைக் களஞ்சியம் தலைப்பு: திஸீஸ் **(Decius)** பாகம் 7 பக்கம் 157

ரோமானிய வரலாற்றை அறிந்தவர்களுக்கு இது தெரியாமலிருக்க முடியாது. அதாவது, சிலைகளுக்குப் பூஜைகள் செய்து அதற்கான சான்றிதழ் பெற வேண்டும் என்பது போன்ற நடைமுறையைத் தோற்றுவித்தவன் அல்லது அதற்குத் தூண்டுகோலாக இருந்தவன் திஸீஸ் மன்னன் அல்லன்., அவனுக்கு வெகு காலத்திற்கு முன்னர் ஆட்சி செய்த துறாஜான் என்ற மன்னன்தான் இவ்வாறெல்லாம் செய்தது. அவனது ஆட்சியில்தான் பைத்துல் முகத்தஸ் மற்றும் ஹலப் இரு நகரங்களின் பாதிரிகள் இருவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது, அவ்விருவரும் கிறிஸ்தவர்கள் என்கிற ஒரே காரணத்திற்காக! பார்க்க: **History Of The Christian Church – By Georgeh . Dryer** பக்கம் 65 - 66

[13] பார்க்க: தாரீகுல் முஅர்ரிகீன் எனும் நூல் பாகம் 6 பக்கம் 413 இல் கூத்தார் என்ற இனத்தாருடன் நடைபெற்ற யுத்தங்கள் மற்றும் அவர்களின் கைகளில் திஸீஸ் மன்னன் கொலை செய்யப்பட்டு இறந்தது பற்றிய விவரம்.

[14] பார்க்க: ரோமானியப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும் நூல் பாகம் 2 பக்கம் 98

அதாவது, இளைஞர்கள் சிலர் கொடுமைக்குள்ளாகி குகையினுள் ஒளிந்த நிகழ்ச்சி ஹாதிரீன் (**Aelius Hadrinus – Hadrian Publius**) மன்னனின் காலத்தில் நிகழ்ந்ததாகும்.[15] இவன் நீண்ட காலம் ஆட்சி செய்தான். கி.பி. 129 முதல் கி.பி. 134 ஆம் ஆண்டு வரையிலான காலகட்டத்தில் கீழ்த்திசை மாகாணங்களில் நீண்ட தாரு சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்தாக வரலாறு கூறுகிறது. அந்த சுற்றுப் பயணத்தின்பொழுது அந்த இளைஞர்கள் கொடுமைப்படுத்தப்பட்டு குகையில் தஞ்சம் புகுந்திருக்கலாம். மேலும் மன்னன் முன்னிலை யிலேயே அவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டனர் என்பதும் தேவையில்லை. அவனது ஆணைப்படியே கொடுமை நடந்தது என்பதும் தேவையில்லை. இதேபோல அந்தக் கொடுமையை அவர் தெரிந்திருந்தார்., அவரது விருப்பப்படியே அது நடந்தது என்பதும் அவசியமில்லை.

ஏனெனில் அன்றைய ரோமானியப் பேரரசு மிகப்பெரிய அளவில் வியாபித்திருந்தது. மாநிலத் தலைநகரங் களில் மத்திய ஆட்சிக்கு உட்பட்டிருந்த ஆளுநர்களும் அதிகாரிகளும் ஆங்காங்கே பல்வேறு பொறுப்புகளில் நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

அத்தகைய ஓர் அதிகாரியோ ஆளுநரோ புதிதாக உருவெடுத்த மதக்கிளர்ச்சியை ஒடுக்குவதற்காக தனது தனிப்பட்ட முடிவின்படி - மத உணர்ச்சியின் உத்வேகத்தில் நடவடிக்கை எடுத்திருக்கலாம். அல்லது நாட்டின் அரசியல் சட்டத்தைப் பிரயோகித்து நடவடிக்கை எடுத்திருக்கலாம்., அது வரம்பு மீறிப்போய் இருக்கலாம். இவற்றை யெல்லாம் அந்நாட்டு மன்னன் தெரிந்து கொண்டிருக்க வேண்டியதில்லை. இதற்கு அறிவு ரீதியில் கூட அதிக சாத்தியக்கூறு உண்டு. சாதாரணமாக எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் இவ்வாறு நடைபெறுவதைக் காணலாம்.

எனவே இளைஞர்கள் கொடுமைப்படுத்துப்பட்டு குகையில் தஞ்சம் புகுந்தது ஹாதிரீன் மன்னனின் இந்தச் சுற்றுப் பயணத்தின்பொழுது நடைபெற்றது என்றும் குகையிலிருந்து அவர்கள் வெளிவந்தது தியூதீஸெஸ் மன்னனின் காலத்தில் நிகழ்ந்தது என்றும் நாம் நிர்ணயித்து விட்டால் -

குகையில் இளைஞர்கள் துயில்கொண்ட ஆண்டுகள் பற்றி கிறிஸ்தவர்கள் கூறும் எண்ணிக்கைக்கும் குர்ஆன் கூறும் எண்ணிக்கைக்கும் பெரிய ஏற்றதாழ்வு ஏற்படாது.,கிப்பனின் பரிகாசத்திற்கு எந்த அடிப்படையும் கிடைக்காது!

---

**[15] ஹாதிரீன் மன்னன் கி.பி. 117 முதல் கி.பி. 138 வரை ஆட்சி செய்தான். துறாஜான் என்ற மன்னனுக்குப் பிறகு அரியணையில் அமர்ந்தான். நாட்டின் ஆட்சிக்குழு கி.பி. 117 ஆகஸ்ட் மாதம் ஹாதிரீன் மன்னனுக்கு பதவிப் பிரமாணம் செய்து வைத்தது. கிரேக்க நகரங்களின் அழிந்துபோன அழகுச் சின்னங் களையும் செழுமையையும் புதுப்பிப்பதில் இந்த மன்னன் பெரும் முயற்சி எடுத்தான். நாட்டின் எல்லைப் பகுதியில் எல்லைச் சுவர் ஒன்றை இவனே எழுப்பினான். கி.பி. 132 ஆம் ஆண்டில் யூதர்கள் நடத்திய புரட்சியை ஹாதிரீன் மன்னன் ஒடுக்கினான. அந்தப் புரட்சியை அடக்குவதற்காக கடுமையான வன்முறை கையாளப்பட்டது. யூதர்களை நாடுகடத்தும்படி இவன் கட்டளையிட்டதும் அப்பொழுதுதான். அவ்வாறு நாடுகடத்தப்பட்ட யூதர்களுக்கு - ஆண்டில் ஒரு முறைதான் பைத்துல் முகத்தஸ் ஆலயத்தைத் தரிசனம் செய்வதற்கு இவன் அனுமதி அளித்தான். யூதர்களை நாடுகடத்தும் வரலாறு அன்றில் இருந்துதான் தொடர் கதையானது! பார்க்க: Historians History Of World**

**ஹாதிரீன் மன்னன் கி.பி. 119 ஆம் ஆண்டு சிற்றாசியா, சிரியா ஆகிய பகுதி களுக்கு அரசு சார்பிலான சுற்றுப் பயணம் மேற்கொண் டான். அப்பொழுது ஸமர்னா என்ற ஊரில் மகா சபை ஒன்றைக் கூட்டினான். கீழ்த்திசை நாடுகளின் மன்னர்களையும் தலைவர் களையும் அதில் கலந்து கொள்ளுமாறு அழைத்தான். குளிர் காலத்தை ஹலப் நகரத்தில் கழித்தான். பிறகு கி.பி. 130 ஆம் ஆண்டில் தென் பகுதிக்குத் திரும்பினான். பைத்துல் முகத்தஸின் மலைப்பாங்கான பகுதிகளில் புதிய நகர் ஒன்றை நிர்மாணிப்பதற்குக் கட்டளை பிறப்பித்தான். பிறகு அரபு நாடுகள் வழியாக எகிப்து வந்து சேர்ந்தான்.**

**பிறகு மீண்டும் கி.பி. 133 ஆம் ஆண்டில் ஹாதிரீன் மன்னன் பாலஸ்தீனம் திரும்ப வேண்டியதாயிற்று! அங்கு யூதர்களை அடக்கும் இயக்கத்திற்குத் தலைமை ஏற்றான். பின்னர் அந்தப் பதவியை பிரபல தளபதி Julis Severus என்பவன் கையில் ஒப்படைத்துவிட்டு ரோமாபுரி திரும்பினான். கி.பி. 138 ஆம் ஆண்டு ஜூ ன் 10 இல் Baiae என்ற இடத்தில் ஹாதிரீன் மன்னன் காலமானான்.**

**“ஹாதிரீன் மன்னனின் வாழ்க்கை, முரண்பாடுகளின் மொத்த வடிவமாக உள்ளது” ( பிரித்தானிய கலைக் களஞ்சியம் பாகம் 11)**

**கிறிஸ்துவ சர்ச்களின் வரலாறு எனும் நூலில் அதன் ஆசிரியர் George H. Dryer என்பவர் எழுதியுள்ள விவரம் வருமாறு: ஹாதிரீன் மன்னன் முற்கால ரோமாபுரியினரை விட்டும் வித்தியாசமானவராக இருந்தாலும் முற்போக்கு உடையவராக இருந்தார். மத விஷயங்களில் நன்கு ஆய்வு செய்பவராகவும் அதில் ஐயம் கொள்பவராகவும் இருந்தார். பொதுப்படையாக எவர் மீதும் நாத்திகப்பழி சுமத்தக்கூடாது என்றும் சமூகப்பழியைத் தேடிக்கொள்ளக்கூடாது என்றும் சொல் லக் கூடியவராக இருந்தார். ஆனாலும் நாத்திகர் களையும் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களையும் (பெரும்பாலும் அவர்கள் கிறிஸ்தவர்களாக இருந்தனர்) சிலைகளுக்கு முன்னால் நேர்ச்சை சமர்ப்பிக்க வேண்டும் என்றும் ரேமானிய மதத்தைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்றும் வற்புறுத்துவதில் தமது குருவாகிய துறாஜான் மன்னனின் அனுகுமுறையைக் கடைப்பிடிப்பவராகத் திகழ்ந்தார். பக்கம் 66**

இதுவே ஏற்றுக்கொள்ளத்தக்க கருத்து என்பதற்கு இன்னொரு காரணம் உண்டு. அதாவது இந்தச் சரிதை எப்பொழுது தொடங்கியது? எப்பொழுது முடிவடைந்தது என்பது பற்றி நுட்பமான கால வரையறை யுடன் வரலாற்றில் அறியப்படவில்லை. அந்த இளைஞர்கள் விழித்தெழுந்த ஆண்டு பற்றி சிரியா மற்றும் கிரேக்கத்தின் வரலாற்று ஆசிரியர்களின் கருத்துகள் வெவ்வேறாக வந்துள்ளன.

சிரியா நாட்டு வரலாற்றாசிரியர்கள், கி.பி. 425 அல்லது 437 ஆம் ஆண்டில் விழித்தெழுந்தனர் என்று கூறுகிறார்கள். கிரேக்க நாட்டு வரலாற்றுக் குறிப்போ, இரண்டாம் தியூதீஸ் மன்னன் ஆட்சிக்கு வந்த ஆண்டில் இருந்து சரியாக 38 வது ஆண்டில் விழித்தெழுந்தார்கள் என்கிறது.[16] (அந்த மன்னன் கி.பி. 408 ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்தான். அப்படியானால் கி.பி. 446 ஆம் ஆண்டில் [17] விழித்தெழுந்திருக்க வேண்டும் என்றாகிறது)

மேலும் மதக்கிளர்ச்சியின் பெயரால் அந்த இளைஞர்கள் எந்த ஆண்டில் கொடுமைப்படுத்தப்பட்டனர் என்பதும் தெளிவின்றியே உள்ளது. நைரூன் என்ற மன்னன் (கி.பி. 64) காலத்திலிருந்து கிறிஸ்தவ மதம் வெளிப்படையாகவே கொடுமைக்குள்ளாக்கப்பட்டு வந்தள்ளது. கிறிஸ்தவ மதம் ரோமின் ராணுவத் தளபதிகள் அனைவரின் மதமாக ஆகும் வரை - கி.பி. நான்காம் நூற்றாண்டில் கிஸ்த்தன்தீன் மன்னன் கிறிஸ்தவ மதத்தைத் தழுவிய காலம் வரையில் - ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு காலம் வரையில் அந்தக் கொடுமை தொடர் கதையாக நீடித்து வந்துள்ளது!

இப்படியாக ஆரம்ப கால கிறிஸ்தவ வரலாற்றில் தெளிவின்மை அதிகம் உள்ளது. அது அருகியும் - பலவீனப்பட்டும் உள்ளது!எந்த ஒருவரலாற்று நிகழ்ச்சி தொடர்பாகவும் நம்பத் தகுந்த வரலாற்றுத் தொகுப்பை அங்கு காணமுடிவதில்லை!

ஆனால் முந்தைய இறைவேதங்களைக்கூட பாதுகாக்கக்கூடி யதாகத் திகழ்கிற குர்ஆன்தான், முன்னுக் குப்பின் முரணான இத்தகைய சரித்திரக் குறிப்புகளை விடவும் அதிக நம்பிக்கைக்குரியது என்று நாம் உறுதி கொண்டுள்ளோம். பல்வேறு மாற்றங்களுக்கும் இடைச்செருகல்களுக்கும் இலக்காகிவிட்ட மூலாதார நூல்கள் மற்றும் புராணக் கதைகளை விட குர்ஆன்தான் ஏற்றுக் கொள்ளத் தக்கது!

சிறியதொரு இளைஞர் கூட்டம் எங்கோ ஒரு சிற்றூரில் தலை மறைவான செய்தி நாட்டு மக்கள் அனை வரின் கவனத்தையும் ஈர்க்கும் அளவுக்கு முக்கியத்துவம் பெறாதென்பது இயற்கையே. இது, அவ்விளைஞர்கள் விழித்தெழுந்த நிகழ்ச்சியிலிருந்து பெரிதும் வேறுபடுகிறது. நீண்ட நித்திரையில் இருந்து அவர்கள் விழித்தது தான் அதிசயமும் ஆச்சரியமும் நிறைந்தது. அதுவும் அந்த இளைஞர்களின் மதத்தை ஏற்றுக்கொண்ட மன்ன னின் ஆட்சிகாலத்தில் எனும் பொழுது அது இன்னும் அதிக முக்கியத்தும் பெற்று விடுகிறது!

அதிலும் மரணத்திற்குப் பிறகு மீண்டும் ஒருவாழ்வு உண்டெனும் மறுமைக் கொள்கையும் அங்கு மனிதர்கள் மீண்டும் உயிருடன் எழுப்பப்படும் சிந்தனையும் பெரும் சர்ச்சைக்கும் விவாதத்திற்கும் உட்படுத்தப்பட்ட காலத் தில் - அப்படி நிகழ்வது சாத்தியமே என்பதைத் தெளிவாக்கும் ஆதாரத்தின் தேவை அதிகரித்துள்ள சூழ் நிலையில் அந்த இளைஞர்கள் (நீண்ட நித்திரைக்குப்பின்) விழித்தெழுந்தது அதிக முக்கியத்துவத்துடன் மதிக்கப்படும் என்பதே இயல்பு!

எனவே இந்த நிகழ்ச்சியின் முடிவு இதுதான் என்பதிலும் குகைத்தோழர்கள் விழித்தெழுந்து அவர்களின் விஷயம் பிரபலம் அடைந்த - புகழ்பெற்ற காலம் இதுதான் என்று வரையறை செய்வதிலும் எவ்வித ஐயத்திற் கும் தர்க்கத்திற்கும் இடமே இல்லை. ஏனெனில் இதுபோன்ற பிரமாண்டமான நிகழ்ச்சிகளைப் பாதுகாப் பதிலும் ஆய்வு செய்வதிலும் மனிதன் இயற்கையாகவே ஆவல் கொள்கிறான். வருங்காலத் தலைமுறையினரும் தெரிந்து பயன் பெறும் வகையில் ஏடுகளில் பதிவு செய்வதில் மனிதனை அவனது மதி, மன, மதத்தேட் டங்கள் அதிகம் உந்தியெழச் செய்கின்றன! ஆனால் இந்த நிகழ்ச்சியின் தொடக்கம் இது போன்றதல்ல. அல்லாஹ் மிக அறிந்தவன்!

## குகைத் தோழர்களின் சரிதையை குர்ஆன் தேர்ந்தெடுத்தது ஏன்?

இந்த நூதனமான சரிதை குர்ஆனில் இடம் பெற்றதற்கான காரணம் தொடர்பாக திருக்குர்ஆன் விரிவுரை யாளர்கள் வைத்திருக் கும் ஆதாரம் என்னவெனில், குறைஷிகள் ஒரு தூதுக்குழுவை மதீனத்து யூத அறிஞர் களிடம் அனுப்பினர் என்றும் முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் உண்மை நிலையை - வானத்திலிருந்து இறை

[16] **பேராசிரியர் கிப்பனின் நூலைப் பார்க்கவும்.**

[17] **தியூதோஸீஸ் மன்னன் கி.பி. 408 முதல் 540 வரை ஆட்சி செய்தான்.**

யருட்செய்தி அவர்களுக்கு வந்து கொண்டிருப்பதைச் சோதித்துப் பார்க்க உதவும் விதத்தில் சில கேள்வி களை அந்தக்குழு, யூதர்களிடம் கேட்டனர் என்றும் அப்போது அவர்கள் குறைஷிகளுக்காகச் சில கேள்வி களைத் தேர்ந்தெடுத்தார்கள் என்றும் அவற்றில் குகைத்தோழர்கள் பற்றி ஒரு கேள்வி இருந்தது என்றும் முஹம்மத் பின் இஸ்ஹாக் அறித்துள்ள அறிவிப்பே ஆகும் [18]

முஹம்மத் பின் இஸ்ஹாக் பதிவு செய்துள்ள இந்த அறிவிப்பு சரியானதாக இருந்தாலும் இது மட்டுமே - குர்ஆன் இந்தச் சரிதையைத் தேர்ந்தெடுத்ததற்கான தலையாயக் காரணமல்ல.

கொடுமைகள் பற்றிய சரிதைகளும் நூதனமான கதைகளும் ஏராளம் உண்டு. அவற்றை அறிவதற்கும், அவற் றின் உண்மை நிலையை அறிவித்துக் கொடுப்பதற்கும் வஹி (எனும் இறையருட் செய்தி)யைத் தவிர வேறுவழி இல்லை., அப்படிப்பட்ட சரிதைகளை விட்டுவிட்டு இந்தக் குகைத்தோழர்களின் சரிதையை குர்ஆன் தேர்ந் தெடுத்ததற்கு இந்த அறிவிப்பே மூல காரணமல்ல.

---

[18] முஹம்மத் பின் இஸ்ஹாக் கூறுகிறார்: நாற்பது ஆண்டுகளாக வந்து கொண்டிருந்த எகிப்து நாட்டைச் சேர்ந்த வயதானவர் ஒருவர், இக்ரிமா இடம் இருந்தும் அவர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் இருந்தும் அறிவித்தார்கள்: குறைஷிகள் நள்ர் பின் ஹாரிஸ், உக்பா பின் அபீ முஈத் இருவரையும் மதீனத்து யூத அறிஞர்களிடம் அனுப்பிவைத்தார்கள். அவ்விருவரிடமும் சொன்னர்கள்: யூத அறிஞர்களிடம் முஹம்மதை பற்றி விசாரியுங்கள். அவரைப் பற்றிய முழு விவரத்தையும் அவருடைய கருத்துகளையும் எடுத்துச் சொல்லுங்கள். யூதர்கள் முந்தைய வேதம் வழங்கப்பட்டவர்கள். நபிமார்கள் பற்றி - நம்மிடம் இல்லாத விஷய ஞானம் அவர்களுக்கு உண்டு.

அவ்விருவரும் புறப்பட்டு மதீனா வந்தார்கள். யூத அறிஞர்களிடம் முஹம்மத் (ஸல்) அவர்கள் பற்றி வினவினார்கள். மேலும் அவர்ளைப் பற்றிய விவரங்களையும் அவர்கள் என்னென்ன சொல்கிறார்கள் என்பதையும் கூறினார்கள். அவ்விருவரும் சொன்னார் கள்: "நிச்சயமாக நீங்கள் தௌராத் வேதம் வழங்கப்பட்டவர்கள். எங்களுடைய தோழர் பற்றி சரியானதொரு முடிவை எங்களுக்கு அறிவிப்பீர்கள் என்றுதான் உங்களிடம் வந்துள்ளோம்"

அவ்விருவரிடமும் யூத அறிஞர்கள் சொன்னார்கள்: நாங்கள் உங்களுக்குக் கட்டளையிடுவது என்னவெனில், மூன்று விஷயங் களை அவரிடம் வினவுங்கள். அவற்றிற்கு முறையான பதிலை அவர் சொன்னால் அவர் உண்மையில் இறைவனிடம் இருந்து அனுப்பப்பட்ட நபிதான். இல்லையெனில் அவர் பொய்சொல்லக்கூடியவர். பிறகு அவர் விஷயத்தில் உங்கள் விருப்பப்படி நடந்து கொள் ளுங்கள்.

முன்னொரு காலத்தில் உயிரோடு மறைந்துபோன இளைஞர்கள் பற்றி - அவர்களுடைய நிலைமை என்னவானது என்று அவரிடம் வினவுங்கள். அந்த இறைஞர்கள் தொடர்பாக நூதனமான வரலாறு ஒன்றுண்டு. உலகெங்கும் பயணம் செய்த ஒரு பேரரசர் பற்றி - அவரது செய்தி பற்றி வினவுங்கள். அவர் பூமியின் மேற்குப் பகுதிகளையும் கிழக்குப் பகுதிகளையும் வெற்றி கண்டவர். மேலும் ரூஹ் - உயிர் பற்றியும் அதன் உள்ளமை பற்றியும் அவரிடம் வினவுங்கள். இவற்றிற்குச் சரியான பதில்களை அவர் உங்களுக்கு அறிவித்தால் அவர் உண்மை நபிதான்., அவரைப் பின்பற்றுங்கள். அப்படி அவர் அறிவிக்கவில்லை யெனில் அவர் பொய் வாதம் புரிபவர். அவர் விஷயத்தில் உங்கள் விருப்பப்படி நடந்துகொள்ளுங்கள்.

நள்ரும் உக்பாவும் புறப்பட்டு மக்கத்து குறைஷிகளிடம் வந்தார்கள். "குறைஷி குலத்தினரே! நமக்கும் முஹம்மதுக்கும் மத்தியில் தீர்வு காணக்கூடிய சில விஷயங்களை நாங்கள் கொண்டுவந்துள்ளோம். யூத அறிஞர்கள் சில விஷயங்கள் பற்றி முஹம்மதிடம் வினவுமாறு நமக்குக் கட்டளை பிறப்பித்துள்ளார்கள்" என்று சொன்னார்கள். -- அவ்விருவரும் அந்த விஷயங்களை குறைஷிகளுக்கு அறிவித்துக் கொடுத்தார்கள்.

குறைஷிகள் நபி (ஸல்)அவர்களிடம் வந்தார்கள். கேட்டார்கள்: "முஹம்மதே! இவற்றிற்குரிய பதில்களை எங்களுக்குச் சொல்லுங் கள்., பார்க்கலாம்" - யூத அறிஞர்கள் சொல்லி அனுப்பிய விஷயங்கள் பற்றி குறைஷிகள் இவ்வாறு நபியிடம் வினவினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் "நீங்கள் கேட்ட கேள்விகளுக்கான பதிலை நாளை உங்களுக்கு அறிவிக்கிறேன்" என்று கூறினார்கள். இன்ஷா அல்லாஹ் - அல்லாஹ் நாடினால் என்று சொல்லவில்லை. குறைஷிகள் திரும்பிச் சென்றார்கள்

பிறகு நபி (ஸல்)அவர்கள் 10 நாட்கள் எதிர்பார்த்திருந்தார்கள். அது விஷயத்தில் அவர்களுக்கு அல்லாஹ் வஹி எதுவும் அனுப்பி வைக்கவில்லை., அவர்களிடம் ஜிப்ரீல் வரவில்லை., - அதனால் கொந்தளிப்பை உருவாக்கும் வதந்திகளை மக்கத்து எதிரிகள் பரப்பினார்கள்!

அவர்கள் சொன்னார்கள்: "நாளை என்று முஹம்மத் நம்மிடம் வாக்குறுதி அளித்தார். இன்று வரை 15 நாட்கள் கழிந்துவிட்டன. நம்முடைய கேள்விகள் எதற்கும் நம்மிடம் அவர் பதில் தரவில்லை"

வஹி இறங்குவது தாமதமானதால் நபி (ஸல்) அவர்கள் மிகவும் துயரம் அடைந்தார்கள். மக்கத்து குறைஷிகளின் ஏச்சுகளும் பேச்சுகளும் அவர்களை மனம் வருந்தும்படி செய்தன.

பிறகுதான் ஓர் அத்தியாயத்தை அல்லாஹ்விடம் இருந்து பெற்றுக் கொண்டு நபியவர்களிடம் ஜிப்ரீல் வந்தார். அதில் - குகைத் தோழர்களின் சரிதையும் குறைஷிகள் விஷயத்தில் நபியவர்கள் துயரப்பட்டது தொடர்பாக நபியை அல்லாஹ் கண்டித்ததும் இருந்தன. உலகம் முழுவதும் பவனி வந்த அரசர் பற்றிய செய்தியும் இருந்தது! அத்துடன் அல்லாஹ்வுடைய இந்த வசனமும் இருந்தது: (நபியே!) ரூஹ் பற்றி இவர்கள் உம்மிடம் வினவுகிறார்கள். நீர் கூறும்: ரூஹ் என் இறைவனின் கட்டளையினால் ஏற்படக்கூடியதாகும். ஆனால் உங்க ளுக்குக் குறைவாகவே ஞானம் வழங்கப்பட்டுள்ளது. (நூல்: இப்னு ஜரீர் தபரி பாகம் 15 பக்கம் 118 119 )

- இந்த அறிவிப்பில் எவரிடம் இருந்து இப்னு இஸ்ஹாக் அறிவித்துள்ளார்களோ அவர் மஜ்ஹூல் - அறியப்படாதவராக இருக்கிறார். எனவே நபிமொழிக் கலையில் இந்த அறிவிப்புக்கு அதிக முக்கியத்துவம் இல்லை.

அருளப்பட்டதற்கான காரண நிகழ்ச்சிகள் (اسباب النزول) யாவும் - அவை குறித்து திருமறை விரிவுரையாளர்கள் ஏராளமாக எழுதி யிருந்தாலும் முற்கால அறிஞர்கள் அவற்றிற்குப் பெரிய அளவில் முக்கியத்துவம் கொடுத்திருந்தாலும் - இன்று பெரும்பாலான அறிஞர்கள், அருளப்பட்டதன் காரணங்களுக்கு எந்த அந்தஸ்தைக் கொடுத்துள்ளார்களோ அந்த அந்தஸ்தை அவை பெற்றிடமாட்டா.

உண்மையாதெனில், சீர்திருத்தம் மற்றும் கல்வி கற்பித்தல் எனும் எந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக குர்ஆன் அருளப்பட்டதோ அந்த நோக்கங்களிலும் சீர்குலைந்த எந்தச் சமுதாயத்தைச் சீர்திருத்திப் பண்படுத்த வேண்டுமென நபி (ஸல்)அவர்கள் அனுப்பிவைக்கப்பட்டார்களோ - குர்ஆன் இறக்கியருளப்பட்டதோ அந்தச் சமுதாயச் சூழ்நிலைகளிலும், எவ்விதமான பெரும் மாற்றங்களுக்கும் இலக்காகாத மனித இயல்புகளிலும், புதிய புதிய கோலங்களைத் தாங்கிய வண்ணம் சுழன்று கொண்டிருக்கும் காலங்களிலும் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து நிகழ்கிற நிகழ்ச்சிகளிலும், காலங்களும் நாடுகளும் எவ்வளவு மாறுபட்டிருப்பினும் எந்த மனித சந்ததிகளை நோக்கி குர்ஆனின் அழைப்பு அமையுமோ - முஹம்மத் நபியவர்களின் தூதுத்துவம் வழி நடத்திச் செல்லுமோ அந்த சந்ததிகளிலும் - குர்ஆன் அருளப்படுவதற்குப் பல தூண்டுதல்கள் அமைந்துள்ளன.

அவையே மிகவும் வலுவானவை., ஏற்றுக்கொண்டு பதில் தருவதற்கு மிகவும் ஏற்றமானவை! இத்தகைய காரணிகள்தாம், ஒரு குழுவினரின் வினாவை விட, ஒரு கூட்டத்தாரின் பரிசோதனையை விட மிகவும் வெளிப்படையானவை. முக்கியத்தும் கொடுப்பதற்கு மிகவும் தகுதியானவை! ஓர் அத்தியாயமோ வசனமோ அருளப்பட்டதற்கான காரணம் தொடர்பாக அறிவிப்பாளர்கள் அறிவிக்கும் தனிப்பட்ட நிகழ்ச்சியை விட இவையே மிக உயர்ந்தவை ஆகும்!

**வலிய்யுல்லாஹ் தெஹ்லவி** என்று அனைவராலும் அறியப்பட்ட **ஷைகுல் இஸ்லாம் அஹ்மத் பின் அப்துர் ரஹீம் (ரஹ்)** அவர்கள் தஃப்ஸீர் கலையின் அடிப்படைகள் பற்றிய தமது தனிப்பெரும் நூலான **அல் பௌஸுல் கபீர்** எனும் நூலில் இவ்வாறு கூறுகிறார்:

"பெரும்பாலான விரிவுரையாளர்கள் - தர்க்கவாத வசனங்கள், சட்டம் தொடர்பான வசனங்கள் ஒவ்வொன்றையும் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியுடன் இணைக்கிறார்கள்.,அந்த நிகழ்ச்சியே அந்த வசனங்கள் அருளப்பட்டதன் காரணம் என்றும் கருதுகிறார்கள். ஆய்வு செய்யப்பட்ட உண்மையாதெனில், மனித உள்ளங்களைப் பண்படுத்துவது, வீணான - அசத்தியவாதக் கொள்கைகளை ஒழித்துக்கட்டுவது, கெட்ட செயல்களை அழித்தொழிப்பது ஆகியவைதான் திருக்குர்ஆன் அருளப்பட்டதன் அடிப்படை நோக்கங்களாகும்,

ஆம், மக்களிடம் வீணான - அசத்தியவாதக் கொள்கைகள் காணப்பெற்றதே தர்க்கம் தொடர்பான வசனங்கள் அருளப்பட்டதன் தனிப்பெரும் காரணமாகும். மேலும் மக்களின் தவறான செயல்களும் அவர்களிடையே அநீதிகள் பரவியிருந்ததுமே சட்டம் தொடர்பான வசனங்கள் அருளப்பட்டதற்குப் போதிய காரணமாகும். மேலும் குர்ஆனில் இடம்பெற்றுள்ள இவற்றைச் செவியேற்ற பின்னரும் அதாவது, அல்லாஹ்வின் அருட்கொடைகளைக் கூறுதல், 'அய்யாமுல்லாஹ்' எனும் இறையாற்றலை நினைவூட்டும் வரலாற்று நிகழ்ச்சிகளைச் சொல்லுதல், மரணத்தின்போதும் அதன் பிறகும் நிகழவிருக்கும் நிலைமைகளை எடுத்துரைத்தல் ஆகியவற்றைச் செவியேற்ற பின்னரும் மக்கள் தீமைகளை விட்டு விலகாமல் அலட்சியத்தில் மூழ்கிக் கிடந்ததுதான் - அறிவுரைகள் தொடர்பான வசனங்கள் அருளப்பட்டதற்கான உண்மைக் காரணமாகும்.

ஆனால் எந்தத் தனிப்பட்ட சம்பவங்களையும் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளையும் விரிவுரையாளர்கள் அதிகச் சிரத்தையுடன் எழுதிக்குவித்திருக்கிறார்களோ - சளைக்காமல் அள்ளிவிட்டிருக்கிறார்களோ அவற்றிற்கு எவ்விதப் பெரிய தொடர்பும் இல்லை., பொருட்படுத்தும் வகையிலான எவ்வித முக்கியத்துவமும் இல்லை! ஒரு சில வசனங்கள் விஷயத்தில் மட்டும் அப்படி இருக்கலாம். நபியவர்களின் காலத்திலோ அதற்கு முன்போ நிகழ்ந்த ஏதேனும் நிகழ்ச்சி பற்றி அந்த வசனங்களில் சமிக்ஞையாகக் குறிப்பிடப்பட்டிருக்கும். அதனைக் கேட்பவருக்கு ஒருவிதமான கருத்து மயக்கம் - எதையோ எதிர்பார்க்கும் ஆவல் இருந்து கொண்டிருக்கும். அந்தக் குறிப் பிட்ட நிகழ்ச்சியை விவரித்தால்தான் அது நீங்கும்" (நூல்: அல் பௌஸு ல் கபீர்) [19]

## திருகையில் போடப்பட்ட தானியம் போல்!

குகைத்தோழர்களின் இந்தச் சரிதை சரியான காலகட்டத்தில் - பொருத்தமான பகுதியில்தான் அருளப்பட்டுள்ளது. ரோமாபுரி மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் எத்தகைய உச்சகட்டமான கொடுமையையும்

---

[19] பார்ஸி மொழியில் (அசலில்) இருந்து செய்யப்பட்ட அரபியாக்கம். (இது அதன் தமிழாக்கம்)

சர்வாதிகாரத்தையும் அந்த இளைஞர்கள் எதிர் கொண்டிருந்தார்களோ அதே சூழ்நிலைகளைத்தான் அன்று மக்கத்து முஸ்லிம்களும் எதிர்கொண்டிருந்தார்கள்! இறைநம்பிக்கை கொண்ட அந்த இளைஞர்கள் தமது ஊரை விட்டும் வெளியேறி குகையில் தஞ்சம் அடைவதற்கு முன்னால் எத்தகைய காலகட்டத்தில் வாழ்ந்து வந்தார்களோ அதே போன்றதொரு காலகட்டத்தில்தான் மக்கத்து முஸ்லிம்களும் வாழ்ந்துவந்தார்கள். குர்ஆனை விடவும் நேர்த்தியாக வேறுயாரும் அதனைச் சித்தரிக்க முடியாது. குர்ஆன் கூறுகிறது:

وَاذْكُرُوْا اِذْ أَنْتُمْ قَلِيْلٌ مُسْتَضْعَفُوْنَ فِيْ الاَرْضِ تَخافُوْنَ اَنْ يَّتَخَطَّفَكُمُ النَّاسُ (سورة الأنفال ٢٦)

"அந்தச் சூழ்நிலையை நினைத்துப் பாருங்கள்: நீங்கள் (மக்கத்துப் பூமியில்) சிறுபான்மையினராகவும் ஒடுக்கப்பட்டவர்களாகவும் இருந்தீர்கள். பிற மக்கள் உங்களை இராஞ்சிக் கொண்டு சென்று விடுவார்களோ என்று அஞ்சிக்கொண்டும் இருந்தீர்கள்" (8 : 26)

நபிமொழித் தொகுப்புகளும் நபிவரலாற்று ஏடுகளும் இத்தகைய ஈவிரக்கமற்ற கொடுமைகளின் நிகழ்ச்சி களையும் கண் மூடித்தனமாக அடித்துத் துன்புறுத்திய கதைகளையும் ஏராளம் எடுத்துரைக்கின் றன. பிலால், அம்மார், கப்பாப், முஸ்அப், ஸு மையா (ரலியல் லாஹு அன்ஹு ம்) போன்ற தோழர்களுக்கு நேர்ந்த துன்பங் களை மெய்சிலிர்க்கும் வண்ணம், உணர்வே உறைந்து போகும் விதத்தில் விவரிக்கின்றன!

குர்ஆனும் நபிவரலாறும் - அன்று மக்கத்து முஸ்லிம்களை ஆட்கொண்டிருந்த பயங்கரமான, கழுத்தை நெரிக்கக்கூடிய சூழ் நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. எப்படிப்பட்ட நெருக்கடியெனில், எவ்விதமான நம்பிக்கை ரேகையும் அந்த வானில் மின்னவில்லை., அந்தச் சூழ்நிலையில் காற்றும் ஒளியும் வருவதற்கென எவ்வித ஜன்னலும் திறந்திருக்கவில்லை! திருகையில் போடப்பட்ட தானியம் போன்றும் பசிகொண்ட சிங்கத்தின் கைகளில் சிக்கிய இரை போன்றும்தான் முஸ்லிம்களின் நிலை இருந்தது! திருக்குர்ஆனை விட மிக நுட்பமான வார்த்தை அமைப்பு வேறெதுவும் இல்லை. அது வருமாறு:

حَتّى اِذَا ضَاقَتْ عَلَيْهِمُ الأَرْضُ بِمَا رَحُبَتْ وَ ضَاقَتْ عَلَيْهِمْ أَنْفُسُهُمْ وَ ظَنُّوْا اَنْ لاَ مَلْجَأَ مِنَ اللهِ الاَّ اِلَيْهِ (التوبة الآية : ١١٨)

"அவர்களின் நிலைமை எந்தஅளவு மோசமாகிவிட்டிருந்ததெனில், பூமி இத்துணை விரிவாக இருந்தும் கூட அவர்களைப் பொறுத்த வரை குறுகிவிட்டது., அவர்கள் உயிர் வாழ்வதே அவர்களுக்குக் கஷ்டமாகி விட்டது. மேலும் அல்லாஹ்விடம் இருந்து தப்பிப்பதற்கு -அவனது அருளின் பக்கம் திரும்புவதைத் தவிர வேறு புகலிடமில்லை என்பதை அவர்கள் அறிந்துகொண்டார்கள்"(9:118) [20]

இந்நிலையில்தான் வஹி எனும் இறையருட்செய்தி இறங்குகிறது. துன்பத்திற்குப் பின் மகிழ்ச்சி, கஷ்டத் திற்குப் பின் இலகு, இழிவுக்குப் பின் கண்ணியம் ஆகியவற்றின் சரிதைகளை குர்ஆன், அந்த இறைநம்பிக்கை யாளர்களுக்கு எடுத்துக் கூறுகிறது. ஏழு வானங்களுக்கு மேலிருந்து அற்புதமான முறையில் இறங்கிய - உலகியல் ஒப்பீடுகள் ஒவ்வொன்றையும் பொய்ப்படுத்தக்கூடிய, அனுபவங்கள் ஒவ்வொன்றையும் தகர்த்தெறியக் கூடிய, அறிவு ரீதியான புற அளவுகோல்களுக்குச் சவால் விடக்கூடிய வகையில் ஏழுவானங்களுக்கு அப்பால் இருந்து அல்லாஹ்வின் உதவி வந்திறங்கிய விந்தையை வான் மறை விவரிக்கிறது!

விரல் விட்டு எண்ணத்தக்க சிறியதொரு கூட்டத்திற்கு - எவ்வித ஆற்றலும் ஆயுதமுமின்றி நிராயுதபாணியாக இருந்த இளைஞர்கள் சிலருக்கு அல்லாஹ் எவ்வாறு வெற்றியைக் கொடுத்தான்? இறைநிராகரிப்பிலும் பாவத்திலும் மூழ்கிக்கிடந்த, வரம்புமீறி - அளவின்றி அநீதி புரிந்துகொண்டிருந்த, பண வசதியையும் செல்வச் செழிப்பையும் அதிக அளவு பெற்றிருந்த, எல்லா விதமான சக்திகளையும் சாதனங்களையும் ஆற்றல்களையும் வசதி வாய்ப்புகளையும் கைவசம் வைத்திருந்த அதிக எண்ணிக்கையிலான பெரும் கூட்டத்தை அல்லாஹ் எவ்வாறு தோல்வி அடையச்செய்தான்?

உயிரில்லாததில் இருந்து உயிருள்ளதையும் உயிருள்ளதில் இருந்து உயிரில்லாததையும் அல்லாஹ் எவ்வாறு வெளிப்படுத்துகிறான்? இருளிலிருந்து ஒளி பிறந்திட எவ்வாறு வழிசெய்கிறான்? இரத்த தாகம் கொண்ட பகைவர்களில் இருந்து - ஈரல்களை வகுந்து மென்று தின்னும் அளவு வெறிகொண்ட பயங்கரமான விரோதிகளில் இருந்து - மனிதகுலப் பாதுகாவலர்களையும் தாயுள்ளம் போன்ற கருணையுடன் ஒழுக்கம் போதிக்கும் உத்தமர்களையும் அல்லாஹ் எவ்வாறு உருவாக்கினான்?

[20] **இந்த வசனம், விவகாரம் ஒத்திபோடப்பட்டிருந்த மூவர் விஷயத்தில் இறக்கியருளப்பட்டதாகும். அவர்கள் கஅப் பின் மாலிக், ஹிலால் பின் உமையா, முறாறா பின் ரபீஇல் ஆமிரி (ரலியல்லாஹு அன்ஹு ம்) - இந்த வசனம் மதீனாவில் அருளப்பட்டதாகும்.**

நிராகரிப்பாளர்களான பெற்றோரிலிருந்து இறைநம்பிக்கைகெண்ட பிள்ளைகள் வாரிசுகளாக வந்ததெப்படி என்பதை எல்லாம் குர்ஆன் அந்த நம்பிக்கையாளர்களுக்கு விவரமாக எடுத்துரைத்தது!

## மக்கத்து முஸ்லிம்களும் குகைத் தோழர்களும்

நிராசையும் துர்ப்பாக்கியமும் ஆட்கொண்டிருந்த பயங்கரமான இந்தச் சூழ்நிலையில் - கண்கள் மருண்டு, உயிர் தொண்டையை அடைக்கக் கூடிய நெருக்கடியான நிலையில் ஒரு புறம் யூசுப் - சகோதரர்களின் சரிதையையும் மூஸா - ஃபிர்அவ்ன் சரிதையையும் அல்லாஹ் எடுத்துரைக்கிறான். இவை தனிநபர் மற்றும் ஒரு குழு தொடர்பான சரிதை., ஒரு நபி மற்றும் ஒரு சமுதாயம் தொடர்பான சரிதை.

மறுபுறம் குகைத்தோழர்களின் சரிதையை குர்ஆன் அவர்களுக்கு எடுத்துரைக்கிறது. இது சர்வாதிகாரியும் அநீதியாளனுமான ஓர் அரசனின் முன்னிலையில் சில இளைஞர்களின் இறைநம்பிக்கை சோதனைக்கு உள்ளா க்கப்பட்ட நிகழ்ச்சி.

இந்தச் சரிதைகள் - காலங்களாலும் சூழ்நிலைகளாலும் மாறுபட்டிருந்தாலும் அவற்றில் நடுநாயகமாகத் திகழும் மனிதர்கள் வேறுபட்டிருந்தாலும் குறிக்கோளில் ஒன்றுபடுகின்றன. இறுதி விளைவைப் பொறுத்தும் ஒன்றுக்கொன்று ஒப்பாகின்றன! ஒரேஒரு மையப்புள்ளியில் அனைத்தும் ஒன்றிணைகின்றன. அந்த இலக்கு தான் - அனைத்தையும் அடக்கியாளும் இறைநாட்டம் என்பது!

அந்த இறைநாட்டம்தான் - இறைநிராகரிப்பாளனுக்கு எதிராக இறைநம்பிக்கையாளனுக்கும், தீயவனுக்கு எதிராக நல்லவனுக்கும், அநீதியாளனுக்கு எதிராக அநீதிக்குள்ளானவனுக்கும், பலசாலிக்கு எதிராக பலவீன னுக்கும், செல்வந்தனுக்கு எதிராக ஏழைக்கும் பல விதங்களில் - பல வழிகளில் உதவி செய்து கொண்டி ருக்கிறது. அப்படிப்பட்ட உதவி எப்படிப் கிடைக்கிறது என்பது குறித்து மனித அறிவு திகைத்து நிற்கிறது., அதற்கு எந்த விளக்கமும் மனிதனால் அளிக்க முடிவதில்லை! இறைநிராகரிப்பாளன்கூட அதனை ஏற்றுக் கொள்ள வேண்டியதாகிறது. ஐயப்பாடு உடையவனும் அதனை உறுதியாக நம்ப வேண்டியதாகிறது.

யூசுப் அத்தியாயத்தின் இறுதியில் அல்லாஹ் கூறுகிறான்:

لَقَدْ كَانَ فِي قَصَصِهِمْ عِبْرَةٌ لأُولِي الأَلْبَابِ، مَاكَانَ حَدِيْثًا يُفْتَرَى وَلَكِنْ تَصْدِيْقَ الَّذِى بَيْنَ يَدَيْهِ وَ تَفْصِيْلَ كُلِّ شَيْءٍ وَهُدًى وَرَحْمَةً لِقَوْمٍ يُؤْمِنُوْنَ (يوسف الآية: ١١١)

"திண்ணமாக இவர்களின் சரிதைகளில் பகுத்தறிவு உடை யோருக்கு அரிய படிப்பினை உள்ளது. இ(ங்கு கூறப்படுகிற)வை அனைத்தும் புனைந்துரைக்கப்பட்டவை அல்ல. மாறாக (இந்த குர்ஆன்) தனக்கு முன் அருளப்பட்ட வேதங்களை மெய்ப்பிக்கக் கூயதாகவும் (நேர்வழிக்கான)எல்லா விஷயங்களையும் விவரிக்கக் கூடியதாகவும் திகழ்கிறது. மேலும் நம்பிக்கைகொள்ளும் சமூகத்தாருக்கு வழிகாட்டக் கூடியதாகவும் அருளாக வும் உள்ளது" (குர்ஆன் 12 : 111) - ஹூத் அத்தியாயத்தின் இறுதியில் அல்லாஹ் கூறுகிறான்:

وَكُلاًّ نَقُصُّ عَلَيْكَ مِنْ أَنْبَاءِ الرُّسُلِ مَا نُثَبِّتُ بِهِ فُؤَادَكَ وَ جَاءَكَ فِي هَذِهِ الْحَقُّ وَ مَوْعِظَةٌ وَ ذِكْرَي لِلْمُؤْمِنِيْنَ (سورة هود الآية: ١٢٠)

" (நபியே!) இறைத்தூதர்களின் வரலாறுகளில் இருந்து நாம் எடுத்துக்கூறும் இந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் எப்படிப்பட்டவை எனில், இவற்றின் மூலம் நாம் உமது இதயத்தை உறுதிப்படுத்துகிறோம்., மேலும் இவற்றில் சத்தியத்தைப் பற்றிய அறிவும் உமக்குக் கிடைத்துள்ளது. நம்பிக்கையாளர்களுக்கு இவற்றில் அறிவுரையும் நினைவூட்டலும் உள்ளன" (11 : 120)

அன்றைய மக்கத்து முஸ்லிம்களின் நிலைமையை நாம் ஆராய்ந்தால் அவர்களுக்கும் குகைத்தோழர்களுக் கும் பெரும் அளவு ஒற்றுமை இருப்பது புரியும். அந்த இளைஞர்கள் தங்கள் தீனை - இறைமார்க்கத்தையும் இறைநம்பிக்கையையும் குழப்பத்தில் இருந்து பாதுகாப்பதற்காக குகையில் தஞ்சம் புகுந்தார்கள். பிறகு நீண்ட காலமாக அங்கே தங்கி விட்டார்கள். அல்லாஹ் இரவு - பகலை மாறிமாறி சுழன்று வரச்செய்து கொண்டிருந் தான். காலங்கள் கழிந்தன. இறைநம்பிக்கையையும் ஏகத்துவக்கொள்கையையும் ஏற்றிருந்த மக்களைக் கொடுமைப்படுத்திய நிராகரிப்பாளர்களின் அரசு காலாவதியானது.

பின்னர் ரோம் நாட்டு அரியணையில் -இணைவைப்பிலும் சிலை வழிபாட்டிலும் ஊறித்திழைத்த ஆட்சியாளர் களே - கொடுமையிலும் தீமையிலும் மூழ்கியிருந்த அரசர்களே நீண்டகாலமாகக் கோலோச்சிய ரோம் நாட்டு அரியணையில் உண்மையான இறைநம்பிக்கையாளர் அமர்ந்தார். ஈஸா நபியின் மதத்தையும் அவர்கள் விட்டுச் சென்ற ஏகத்துவப் பிரச்சாரத்தையும் பாதுகாப்பவராக அவர் திகழ்ந்தார். தாமும் அந்த மார்க்கத்தைப் பின்பற்று

வதில், அதன் கொடியைத் தூக்கிப்பிடிப்பதில் பெருமை கொண்டார். மேலும் யார் யார் அந்த மார்க்கத்திற்காகப் போராடி இன்னல்கள் பல ஏற்று சாதனை புரிந்தார்களோ அவர்களைக் கண்ணியப்படுத்தவும் செய்தார். அவர்களை அதிக அளவு நேசித்தார்., அவர்களுக்கு உயர் அந்தஸ்தும் மதிப்பும் அளித்துக் கௌரவித்தார்!

முஸ்லிம்கள் மக்காவில் வாழ்ந்த காலெமெல்லாம் அவர்களின் நிலைமையும் இவ்வாறுதான் இருந்தது. தீக்கங்கைக் கையில் எடுத்ததுபோன்றும் தணல் தகிக்கும் பாறைகளில் வெறுங்காலால் நிற்பது போன்றும் பதறித் துடித்துக்கொண்டுதான் தங்கள் தீனை - இறைமார்க்கத்தை அவர்கள் பின்பற்ற வேண்டியதிருந்தது. இறுதியில் ஒருவாறாக நிம்மதி பிறந்தது. (மக்காவை விட்டும்) ஹிஜ்ரத் செல்ல அவர்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டது. ஒரு பாதுகாப்பான கோட்டைக்கு - 'உறுதிமிக்கதொரு குகைக்கு' அவர்கள் திரும்பினார்கள். அது தான் மதீனத்து யஸ்ரிப் (யஸ்ரிப் பட்டணம்!)[A]

ஆனாலும் அன்று கி.பி. 2 ஆம் நூற்றாண்டில் இறைநம்பிக்கை கொண்ட இளைஞர்களிடம் இருந்து எத்துணை பெரிய தியாகத்தை அல்லாஹ் விரும்பினானோ அதைவிட அதிகமான தியாகத்தை இந்த முஸ்லிம்களிடம் இருந்து விரும்பினான். ஆம், அல்லாஹ் தனது மார்க்கத்தை ஏனைய அனைத்து மதங்களை விடவும் இவர்களின் மூலம் மேலோங்கச் செய்ய வேண்டும் என்று விரும்பினான்.

هُوَ الَّذِى أَرْسَلَ رَسُوْلَهُ بِالْهُدَى وَ دِيْنِ الْحَقِّ لِيُظْهِرَهُ عَلَى الدِّيْنِ كُلِّهِ وَلَوْ كَرِهَ الْمُشْرِكُوْنَ (سورة التوبة الآية : ٣٣)

அல்லாஹ் கூறுகிறான்: அவன்தான் தன் தூதரை நேர்வழியுடனும் சத்திய மார்க்கத்துடனும் அனுப்பி வைத்தான்., அனைத்து மதங்களை விடவும் அதனை அவர் மேலோங்கச் செய்ய வேண்டும் என்பதற்காக! இணைவைப்பாளர்கள் அதனை எவ்வளவு வெறுத்தாலும் சரியே "(9: 33)

மேலும் நபித்துவத் தொடரின் இறுதி நிலையான முஹம்மத் (ஸல்) அவர்களின் தூதுத்துவத்தை ஒரு பெரும் சமுதாயத்தின் தோற்று வித்தலோடு முடித்துவைத்தான்.

كُنْتُمْ خَيْرَ اُمَّةٍ اُخْرِجَتْ لِلنَّاسِ تَأمُرُوْنَ بِالْمَعْرُوْفِ وَ تَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِوَ تُؤْمِنُوْنَ بِاللهِ (سورة آل عمران الآية: ١١٠)

இனி மனித குல (சீர்திருத்த)த்திற்காகத் தோற்றுவிக்கப்பட்டிருக்கும் மிகச்சிறந்த சமுதாயத்தினராக நீங்கள் இருக்கிறீர்கள். நன்மை புரியும்படி ஏவுகிறீர்கள்., தீமையை விட்டும் தடுக்கிறர்கள். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறீர்கள்" (3 : 110) -

நபி (ஸல்) அவர்கள் அருளியதாக அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்:

اِنَّمَا بُعِثْتُمْ مُيَسِّرِيْنَ وَ لَمْ تُبْعَثُوْا مُعَسِّرِيْنَ (رواه الترمذى عن ابى هريرة ﷺ)

நீங்கள் அனுப்பப்பட்டிருப்பது இலகுவாக்குவதற்குத்தானே தவிர சிரமப்படுத்துவதற்காக அல்ல" (நூல் : திர்மிதி)

குறைந்த எண்ணிக்கையிலான இந்த முஸ்லிம்களுக்கு நெறுக்கடியான, குறுகலான குகை எந்த வகையிலும் பொருத்தமானதல்ல. ஓடியாடி பணிகள் ஆற்ற இயலாமல், வாழ்க்கை வட்டத்தை விட்டும் தூரமானவர்களாய் குகையில் அவர்கள் ஏன் முடங்கிக் கிடக்க வேண்டும்! இஸ்லாமிய அழைப்புப் பணிக்கு அன்று அவர்கள் மட்டும்தானே பொறுப்பு. மனித குலத்தின் எதிர்காலம் அவர்கள் மூலம் மட்டும்தானே ஒளி பெறவேண்டியதிருந்தது!

## உப்பும் தானிய வித்தும்

ஈஸா நபி (அலை) அவர்களின் சொல் வழக்குப்படி - அன்றைய முஸ்லிம்கள் பூமியின் உப்பும், பயிரை உற்பத்தி செய்யும் தானிய வித்தும் ஆவர்! ஆம்,எந்த வேளாண்மைப் பயிரில் மனித வாழ்க்கை அமைந்துள்ளதோ., எதில் மனித இனத்தின் நிலைப்பாடு உள்ளதோ அத்தகைய வேளாண்மைப் பயிரை உற்பத்தி செய்யும் தானிய வித்துக்கள் ஆவர் அன்றைய முஸ்லிம்கள்!

அத்தகைய சிறுபான்மை சமுதாயம் அழிந்து விடலாகாது., விழித்தெழுந்து விட்ட அவர்கள் மீண்டும் தூக்கத்திற்கு ஆட்பட்டு விடக்கூடாது.,தனியே மூலையில் முடங்கிடக்கூடாது என்பது அல்லாஹ்வின் தீர்ப்பாக அமைந்தது!

---

[A] **அதுதான் பின்னர் மதீனத்துந் நபி - நபிகளாரின் பட்டணம் எனும் கருத்தில் மதீனா ஆனது! மக்கா நகர் துறந்து மதீனாவில் குடிபெயர்ந்தது வரலாற்றில் ஹிஜ்ரத் என சொல்லப்படுகிறது. (மொழிபெயர்த்தோன்)**

அந்த முஸ்லிம்கள்தாம் அல்லாஹ்வின் மார்க்கத்தின் பக்கம் தெளிவாக அழைப்பு விடுக்க வேண்டும். அசத்தியத்தைத் துணிவுடன் எதிர்த்துப் போர் புரிந்திட வேண்டும். அநீதியும் அக்கிரமும் மானிட வர்க்கத்தை விட்டே அகற்றப்படவும் அல்லாஹ்வின் மார்க் கம் மேலோங்கிடவும் அவர்கள் போராட வேண்டியதுள்ளது!

حَتَّى لاَ تَكُوْنَ فِتْنَةٌ وَ يَكُوْنَ الدِّيْنُ كُلُّهُ لِلَّهِ (سورة الأنفال الآية: ٣٩)

எதுவரையெனில், ஃபித்னா [β] - குழப்பம் இல்லாதொழிந்து தீன் - வழிபாடு முழுவதும் அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தாகும் வரையில் " (குர்ஆன் 8 : 39)

குகைத்தோழர்களில் ஒருவர் நிலைமைகளைக் கண்காணித்து வருவதற்காக ஊருக்குள் வந்தபோது எல்லாம் அவருக்குப் புதுமையாகத் தென்பட்டன. மக்களும் மாறியிருந்தார்கள். அவர்களின் கலாச்சாரமும் நாகரிகமும் மதமும்கூட மாறிவிட்டிருந்தன! தங்களது மார்க்கமே அந்த நகரில் ஆட்சி செய்து கொண்டிருப்பதைக் கண்டார். தனது (ஏகத்துவக்) கொள்கைக்கே கண்ணியமும் சிறப்பும் அளிக்கப்படுவதைப் பார்த்தார்.

இதேபோன்றுதான் முஹாஜிர்கள் (மதீனாவுக்குக் குடிபெயர்ந்த முஸ்லிம்கள்) மக்கா திரும்பியபொழுது அந்நகரம் அவர்களை - முன்பு வரவேற்ற முகத்துடன் இல்லாமல் - மலர்ந்த முகத்துடன் வரவேற்றது! இஸ்லாத்தின் கொடியே வானுயரப் பரந்துகொண்டிருந்தது. கஅ்பா ஆலயத்தின் திறவுகோல் நபி(ஸல்) அவர்களின் கைக்குக் வந்தது. தாம் விரும்பும் நபரிடம் அதை ஒப்படைக்கும் அதிகாரத்தை அவர்கள் பெற்றிருந்தார்கள்.

மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அல்லாஹ்வின் மார்க்கத்தில் இணையும் நிலைமை இருந்தது! இஸ்லாம் மட்டுமே அனைத்துச் சிறப்புக்கும் உயர்வுக்கும் பிறப்பிடமாய்க் கருதப்பட்டது. சிலைவழிபாடு இழிவுக்கும் தாழ்வுக்கும் மறுபெயராய் கருதப்பட்டது. நேற்று நாட்டை விட்டும் விரட்டப்பட்டவர்கள் இன்று மக்கட் தலைவர்களாய் ஆனார்கள்! வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் ஒழுக்கம் போதிக்கும் போதகர்களாய் மதிக்கப்பட்டார்கள்!

குகைத் தோழர்களின் சரிதைக்கும் மக்கத்து முஸ்லிம்களின் அதாவது திருமதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற இளைஞர்களின் வரலாற்றுக்கும் எவ்வளவு பெரிய ஒற்றுமை! ஏதோ ஒருசில வேறுபாடு உள்ளதெனில் அது இஸ்லாத்தின் இயல்புக்கும் மனித குலத்தின் தேவைக்கும் உரிய இயற்கையான மாறுபாட்டின் விளையே ஆகும்.

## அந்த வரலாறு தொடர் கதையாகிறது!

இஸ்லாம் எனும் இந்த இறைமார்க்கத்திற்கு நீடித்த நிலையையும் இந்த முஸ்லிம் சமுதாயத்திற்கு உலகெங்கும் பரவி நீடித்து நிலையாக வாழும் பாக்கியத்தையும் அல்லாஹ் எழுதி வைத்து விட்டான். அதன் இயல்பான தேட்டம் என்னவெனில், முற்கால சமுதாயங்கள் வரலாற்றின் பற்பல காலகட்டங்களில் கடந்து வந்த திருப்பங்கள் அனைத்தையும் இந்தச் சமுதாயமும் கடந்தாக வேண்டும். மேலும் மனித வாழ்க்கையில் ஏற்படும் - பலம், பலவீனம், பெரும்பான்மை, சிறுபான்மை, ஆமோதிப்பு, ஆட்சேபனை, வெற்றி, தோல்வி ஆகிய இயற்கையான பல நிலைமைகளையும் இந்தச் சமுதாயத்தின் சத்திய அழைப்பு சந்தித்தாக வேண்டும்.

இதோ! அநேக நேரங்களில் சத்திய அழைப்புப் பணியின் முன்னோடிகளாகத் திகழும் குழுவினர்கள், சீரான கொள்கையில் நிலைத்திருக்கும் கூட்டத்தினர் - பயங்கரமான கொடுமை, துன்புறுத் தல், தண்டனை, நாடுகடத்தல் ஆகியவற்றிற்கு ஆளாகிறார்கள்! இஸ்லாத்திற்கு எதிரான ஆட்சிகளில் மட்டுமின்றி இஸ்லாத்தின் பெயரால் நடத்தப்படுகிற ஆட்சிகளிலும் இவை நடைபெறுகின்றன! அந்த ஆட்சியாளர்கள் தௌஹீத் - ஏகத்துவக் கலிமாவை மொழிகிறார்கள்தான்., இறையில்லங்களைப் பெரிய அளவில் கட்டியெழுப்புகிறார்கள்தான்., மீலாது* விழாக்களையும் தீன் - இறைமார்க்கத்தின் கொண்டாட்டங்களையும் விமர்சையாக நடத்துகிறார்கள்

---

[β] **படைத்த இறைவனை மட்டுமின்றி வேறு ஒருவரையும் வழிபடும் இணைவைப்பையே இங்கு ஃபித்னா எனும் சொல் சுட்டுகிறது. (மொழி பெயர்த்தோன்)**

[*] **மீலாதுவிழா கொண்டாடத்தான் வேண்டும்., அது மார்க்கத்தில் வரவேற்கப்பட வேண்டிய அம்சம்தான் என்பது போன்ற கருத்து தொனிக்கும் வகையில் வாசகம் அமைந்துள்ளது. ஆனால் நபி பிறந்த நாளுக்கு விழா எடுப்பது பித்அத் – நூதன அனுஷ்டானமாகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

عن عائشة رضى الله عنها عن النبى ﷺ انه قال : من عمل عملا ليس عليه أمرنا فهو رد – رواه البخارى

**"நமது வழிகாட்டல் இல்லாத ஒரு செயலை ஒருவர் செய்வாராயின் அது ரத்து செய்யப்படக்கூடியதாகும்" (அறிவிப்பு: ஆயிஷா (ரலி) நூல்: புகாரி) - (மொழி பெயர்த்தோன்)**

தான்., இஸ்லாமியப் பெருநாட்களையும் தீனின் அடையாளச் சின்னங்களையும் கொண்டாடுகிறார்கள்தான்! ஆனாலும் சில நேரங்களில், இஸ்லாமிய அழைப்புப் பணியையும் சரியான கொள்கையையும் வெறுக்கிறார்கள். எந்த அளவுக்கெனில், இஸ்லாத்திற்கு எதிரான இயக்கங்கள், இணைவைப்பு ரீதியிலான அநாச்சாரங்கள், வழிகேடான சிந்தனைகள், நாத்திக வாதச் சித்தாந்தங்கள் ஆகியவற்றை விடவும் அதிகமாக இஸ்லாமிய அழைப்புப் பணியினால் தங்களுக்கும் தங்களின் சுய நலன்களுக்கும் பெரும் தீங்கும் பேரபாயமும் ஏற்படும் என்று அஞ்சுகிறார்கள்!

இத்தகைய சூழ்நிலையில் குகைத்தோழர்களின் சரிதை இஸ்லாமிய மண்ணில் புதிய சரிதையாய் ஒளிர் கிறது! அதிக சக்திவாய்ந்த, வஞ்சகக்குணம் உடைய பெரும்பான்மையினருக்கும், இறை நம்பிக்கையில் உறுதி யுடன் - அதே நேரத்தில் பலவீனமானவர்களாக உள்ள சிறுபான்மையினருக்கும் போராட்டம் தொடங்குகிறது. அந்த நேரத்தில் அந்த சிறுபான்மை இளைஞர்கள் குகைத்தோழர்களின் சரிதையில் உயிரோட்டத்தையும் ஒளியையும் பெறுகிறார்கள்!

**قال الله تعالى: اِنَّهُمْ فِتْيَةٌ آمَنُوْا بِرَبِّهِمْ وَ زِدْنَاهُمْ هُدًى وَ رَبَطْنَا عَلَى قُلُوْبِهِمْ اِذْ قَامُوْا فَقَالُوْا رَبُّنَا رَبُّ السَّمَاوَاتِ وَ الاَرْضِ ، لَنْ نَدْعُوَا مِنْ دُوْنِهِ اِلَهًا لَقَدْ قُلْنَا اِذًا شَطَطًا** (سورة الكهف الآية: ١٣– ١٤)

"திண்ணமாக அவர்கள் தம் இறைவன் மீது நம்பிக்கை கொண்டிருந்த இளைஞர்கள். நாம் அவர்களை நேர்வழியில் மேலும் மேலும் முன்னேறச் செய்தோம். (சத்தியத்திற்காகப் போராட) அவர்கள் எழுந்து நின்று 'எவன் வானங்களுக்கும் பூமிக்கும் அதிபதியாக இருக்கிறானோ அவன்தான் எங்கள் இரட்சகன். அவனை விடுத்து வேறெந்தக் கடவுளையும் நாங்கள் அழைக்க மாட்டோம். அப்படிச் செய்தால் நாங்கள் வரம்பு மீறிய பேச்சைப் பேசியவர்கள் ஆவோம்' என்று(துணிந்து) கூறியபொழுது அவர்களின் இதயத்தை நாம் திடப்படுத்தி னோம்" (18 : 13-14)

இத்தகைய நிலைமை சிலபொழுது கடுமையாகிறது. உயிருக்கே ஆபத்து வந்து சேருகிறது. ஏற்றுக் கொண்ட இறைநம்பிக்கைக்கு ஏற்ப கொள்கைப்பிடிப்போடு வாழ்வதும் சுதந்தரமாகச் செயல்படுவதும் சாத்திய மாகாமல் போகிறது. எந்த அளவுக்கு எனில், சமுதாயத்தை விட்டும் வெளியேறி தனியே வாழ்வதைத் தவிர முஸ்லிம் களுக்கு வேறு வழியே இல்லாமலாகிவிடுகிறது!

இத்தகைய நிலைமை, வரலாற்றில் பல யுகங்களுக்குப் பின்னர்தான் - மிகமிக நெருக்கடியான சூழ்நிலை களில்தான் ஏற்படும். ஆயினும் நபி (ஸல்)அவர்களின் தூதுத்துவம் - அது எல்லாக் காலங்களுக்கும் உரிய தாக இருப்பதால், எல்லாச் சூழ்நிலைகளுக்கும் வழிகாட்டிக் கொண்டிருப்பதால் - இந்த அரிய நிலையைக் கூட முன்னறிவிப்புச் செய்துள்ளது! நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

**عن ابىسعيد الخدري ﵁ عن النبي ﷺ قال: يُوْشِكُ أَنْ يَكُوْنَ خَيْرَ مَالِ الْمُسْلِمِ غَنَمٌ يَتَّبِعُ بِهِ شَغَفَ الْجِبَالِ وَمَوَاقِعَ الْقَطْرِ ، يَفِرُّ بِدِيْنِهِ مِنَ الْفِتَنِ – رواه البخارى**

இப்படி ஒரு காலம் வரலாம்: அப்பொழுது ஒரு முஸ்லிமிடம் சிறந்த செல்வமாக ஆடுகள் மட்டுமே இருக்கும். அவன் அவற்றை ஓட்டிக்கொண்டு தனது தீனை - இறைமார்க்கத்தை குழப்பங்களில் இருந்து பாதுகாப்பதற்காக மலைக் கணவாய்களையும் மழைத்துளிகள் வடியும் இடங்களையும் நோக்கி ஓடுவான்" (அறிவிப்பு: அபூ ஸயீதுல் குத்ரி (ரலி) நூல்: புகாரி)

இந்தச் சூழ்நிலையில் அந்த முஸ்லிமுக்கு சூரத்துல் கஹ்பு தஞ்சம் அளிக்கிறது. அவன் செல்ல வேண்டிய பாதையை வெளிச் சம் போட்டு காட்டுகிறது!

## குர்ஆனின் ஒளியில் குகைத் தோழர்களின் சரிதை!

இப்பொழுது குகைத்தோழர்களின் சரிதையை குர்ஆனின் ஒளியில் சமர்ப்பிக்கிறேன். கண்ணெதிரே நிகழ்வது போன்ற - நேரில் காண்பது போன்ற விரிவான தோரணையில், பல்வேறு படிப்பினைகளும் அறிவுரைகளும் கிடைக்கும் ரீதியில் எடுத்துரைக்கப் போகிறேன்.

## சிலைவழிபாடும் ஊதாரித்தனமும் கொண்ட ஆட்சி!

ரோமின் பெரு நகரங்களுள் ஒன்றில் (நீங்கள் விரும்பினால் அதற்கு இ:.பிஸூ ஸ் அல்லது இ:.பிஸிஸ் என்று பெயர் சூட்டிக் கொள்ளுங்கள். அங்கு) கிறிஸ்துவ வரலாற்றின் தொடக்கத்தில் உலகாயதப் போக்கு மிகைத் திருந்தது. அதன் விளைவாகப் பட்டவர்த்தனமான சிலைவழிபாடும் மனஇச்சையின் அடிப்படையிலான கீழ்த்தர மான வாழ்க்கை முறையும் உச்ச நிலையை அடைந்திருந்தன.

வரலாறு இதற்குச் சாட்சியம் அளிக்கிறது: அதாவது, சிலை வழிபாட்டுக் கொள்கையுடன் - தான்தோன்றித் தனமும், மனஇச்சையின் அடிப்படையிலான வாழ்க்கையும் - ஏதோ அவற்றிற்கு மத்தியில் ஓர் இரகசிய உடன் படிக்கை இருப்பதுபோன்று - என்றைக்கும் இணைந்தே இருக்கும்! பண்டைய இந்தியாவில் இதே நிலையே இருந்ததாக புராதனச் சின்னங்களும் கல்வெட்டுகளும் அறிவிக்கின்றன. கிரேக்க நாட்டிலும் எகிப்திலும் அறியா மைக் காலத்தில் அரேபிய தீபகற்பத்திலும் இதே நிலையே இருந்தது!

இவ்வாறுதான் அன்று இஃபீஸஸ் மாநகரத்தின் ஆட்சியிலும் ஆட்சியாளர்களிடத்திலும் தான்தோன்றித்தனமே அதிகரித்திருந்தது! சிலைவழிபாட்டிலும் மன இச்சையைப் பின்பற்றிய வாழ்விலும் உலகாயதப் போக்கிலும் அவர்கள் ஊறித் திளைத்திருந்தார்கள். சிலைவழிபாட்டுக் கொள்கையும் மன இச்சையைப் பின்பற்றும் நிலை யும் பேரலைகளாய் எழுந்து ஆர்ப்பரித்து அங்கு வாழ்ந்த மக்களின் ஒழுக்க, ஆன்மீக மாண்புகளை எல்லாம் அரித்துக் கொண்டே சென்றுவிட்டன.

இறுதியில் இஃபீஸெஸ் எனும் தலைநகரத்தில் வாழ்ந்த மக்கள் வெறும் சடத்துவ வாதச்சமுதாயமாக ஆகி விட்டார்கள். வெளிப்படை யானவற்றையும் புலனுணர்வுக்கு உட்பட்டவற்றையும் தவிர வேறெ தையும் அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. உடனடி இன்பங்கள், தற்காலிக இலாபங்கள் ஆகியவற்றைத் தவிர வேறெதையும் அவர் கள் ஒப்புக்கொள்வதில்லை.

இயற்கையாகவே அரசாங்கம் தன்னிறைவு பெற்று சுகபோக வாழ்க்கைக்குரிய சாதனங்கள் அனைத்தையும் கைவசப்படுத்தி இருந்தது. மகிழ்வு, செல்வச் செழிப்பு, புகழ், சிறப்பு ஆகியவற்றின் பிறப்பிடமாகத் திகழ்ந்தது. அரசாங்கத்தின் கொள்கையையும் சிந்தனைப் போக்கையும் ஏற்றுக்கொண்டு ஆட்சியாளர்களைத் தழுவிச் செல் வது மட்டுமே - அதிகாரம், செல்வம், புகழ், சிறப்பு ஆகிய வற்றை அடைவதற்கான ஒரே வழி என்றாகியது. இதனால் சந்தர்ப் பவாதிகளும் பேராசைக்காரர்களும்தான் அந்த ஆட்சியாளர்களைச் சூழ்ந்திருந்தார்கள். மேலும் மக்கள் ஒரே வண்ணமும் எண்ணமும் உடையவர்களாய் ஆயினர். அதாவது, மனஇச்சையின் அடிமை களாய், அரசாங்கப் பதவியிலும் அதிகாரத்திலும் வருவாயிலும் அதிக மோகம் கொண்டவர்களாய், அரசு மானியங்கள் மீது போராசை உடையவர்களாய் ஆனார்கள்!

அரசாங்கம் தனது கொள்கையை நடைமுறைப்படுத்துவதில் பிடிவாதமாக இருந்தது. தனது சிந்தனைப் போக்கை மக்களிடையே திணிப்பதில் வரம்பு மீறிச்செயல்பட்டது. சிலைவழிபாட்டுக் கொள்கைக்கும் தான்தோன் றித்தனமான வாழ்க்கைக்கும் யார் யார் முரணாகச் செயல்படுகிறாகளோ அவர்களைத் தேடிப்பிடித்துத் தண்டிப் பதில் ஈடுபட்டிருந்தது. வாழும் உரிமையைக்கூட அவர்களுக்கு வழங்கவில்லை. அவர்களின் கலாச்சார உரிமைகளையும் பறித்து விட்டது.

அந்த நாடு முழுவதிலும் ஒரே விதமான வாழ்க்கை முறையே அமைந்திருந்தது. அநாச்சாரமும் ஊதாரித் தனமும் நிறைந்த ஒரே வார்ப்பே நிலவியது. கொள்கையிலோ குணவொழுக்கத்திலோ எந்த ஒரு மாறுதலை யும் செய்ய எவருக்கும் அனுமதி கிடையாது. எண்ணத்தில் என்ன, வண்ணத்தில்கூட எந்தப் புதுமையும் காண முடியாது. அந்நாட்டு மக்கள் - பல இனத்தினராகவும் பல தரத்தினராகவும் வயதில் பல நிலையினராகவும் அறிவாற்றலில் பல அம்சத்தினராகவும் வேறுபட்டிருந்த போதிலும் உறுதியான ஒரே அச்சகத்தில் வார்க்கப்பட்ட ஒரு நூலின் பிரதிகள் போன்று எந்த மாறுதலுமின்றி காணப்பட்டார்கள்!

## இறைநம்பிக்கை கொண்ட புரட்சியாளர்கள்

சிலை வழிபாட்டுக்கொள்கையுடைய - அநீதி தலைவிரித்தாடிய இந்த நாட்டில், கட்டுப்பாடும் கண்ணியமும் தவறிய இந்தச் சமுதா யத்தில், நெருக்கடியான - பயங்கரமான இந்தச் சூழ்நிலையில், எங்கும் காரிருள் கப்பி கழுத்தை நெரித்துக் கொண்டிருந்த கால கட்டத்தில் -

இப்படிப்பட்ட இளைஞர்கள் சிலரும் வாழ்ந்தார்கள். அவர்களை, ஈஸா நபி (அலை) அவர்களின் சத்திய அழைப்பு சென்றடைந்திருந்தது. நல்லவற்றை ஈர்க்கும் அறிவுடனும் இறையச்சமிக்க இதயத்துடனும் உயிர்த் துடிப்பான மனச்சாட்சியுடனும் அவர்களை அது பெற்றுக்கொண்டது. அந்த அழைப்பு, அவர்களின் இதயங் களைத் திறந்தது. அவற்றை முழுமையாக ஆட்கொண்டது. அவர்களின் மனதில் ஆழமாகப் பதிந்தது. அவர் களின் இதயங்களிலும் சிந்தைகளிலும் முழுமையாக இடம் பிடித்தது. அந்த அழைப்பு அவர்களின் ஈமான் - நம்பிக்கையாகவும் கொள்கையாகவும் இன்ப நிலையாகவும் இதய பலமாகவும் தெளிந்த அறிவாகவும் நிறைந்த உறுதியாகவும் மாறியது! இனி அந்தக் கொள்கையின்றி அவர்களால் உயிர் வாழமுடியாத நிலையானது! இவ்வுலகில் எவ்வளவு கூடுதல் விலைக்கு ஈடாகவும் அதனை விற்பதற்கு அவர்கள் முன்வரவில்லை! அந்தக் கொள்கைக்காக தங்களது வாழ்வையும் உயிரையும்கூட அர்ப்பணிப்பதற்கு அவர்கள் தயாராயினர்!

இந்தக் கட்டத்தில்தான் போராட்டம் தொடங்கியது. போராட்டக்குணம் முதலில் அந்த இளைஞர்களின் இதயங்களில் பிறந்தது. பிறகு செயலில் வெளிப்பட்டது. போராட்டஉணர்வு முதலில் இதயத்திலிருந்து தொடங்குவதுதான் யதார்த்தம்.

அந்த இளைஞர்கள் அன்றைய அரசுக்கும் மக்கள் சமூகத்திற்கும் நேர் எதிரான சிந்தனையைப் பெற்றார்கள். அரசாங்கம் உருவவழிபாடு உடையது. அதைத் தவிர வேறு எதையும் ஏற்றுக் கொள்ளாதது. சமுதாயம் தான்தோன்றித்தனமானது. தான்தோன்றித்தனமான போக்கைத் தவிர வேறு எதையும் அது பொருந்திக் கொள்ளாது. அரசாங்கத்துடனும் மக்கள் சமுதாயத்துடனும் ஒத்துப்போகாமல் - அதிகாரத்தையும், செல்வாக்கையும் பெறுவது என்பது ஒருபுறம் இருக்கட்டும் - உயிர் வாழ்வதே முடியாது.

இவ்வாறாக காரண - காரியங்களின் தத்துவமும் சமூக கூட்டு வாழ்க்கையின் ஆய்வும் வாழ்க்கையின் யதார்த்த நிலையும் - இவை அனைத்தும் அந்த இளைஞர்களை அரசாங்கத்திற்கும் சமுதாயத்திற்கும் கட்டுப்பட்டுச் செல்லுமாறுதான் கட்டாயப்படுத்தின.

உணவின்றி வயிறு நிரம்ப முடியாது. பணமின்றி உணவு கிடைக்காது. பணமோ அரசாங்கத்திடம் மட்டுமே உள்ளது. இதே போன்று பதவியின்றி கண்ணியமும் புகழும் இல்லை. பதவி என்பது அரசுப் பணியின்றி இல்லை. அரசுப் பணி அரசாங்கத்திடம் மட்டுமே உள்ளது.

எனவே அமைதியும் நிம்மதியும் வேண்டுமானால் மக்களோடு ஒத்துப் போனால்தான்- ஊரோடு இணைந்து வாழ்ந்தால்தான் கிடைக்கும். அப்படியானால் மக்களிடமுள்ள பொதுக்கருத்தையும் செல்வாக்குப் பெற்றுள்ள கொள்கையையும் ஏற்றுக்கொண்டால்தான் முடியும். - இதுதான் கண்ணெதிரில் காணக்கூடிய - அனுபவத்தில் கிடைக்கக் கூடிய உலகாயதத் தத்துவமாகும். எல்லாப் பொருள்களின் இயல்பு நிலையுமாகும்.

எனினும் இந்தத் 'தெளிவான தத்துவத்தை' (இதன் அனுதாபிகள் இதற்கு இப்படித்தான் பெயரிடுகிறார்கள். இந்தக் கருத்தை) அந்த இளைஞர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை., அதற்கு எதிராகவே செயல்படுகிறார்கள். தங்களது இறைநம்பிக்கை மற்றும் ஏகத்துவக் கொள்கையின் மூலம் மட்டுமே உதவி பெறுகிறார்கள்.

அவர்களின் தூர நோக்குடைய, ஆழமான சிந்தனை - அங்கு நிலவிய வெளிப்படையான, புலனுக்குட்பட்ட நிலைமையைக் கடந்து செல்கிறது. இந்தப் புலனுலகிற்கு அப்பாலுள்ள எதார்த்தநிலை அவர்களுக்கு முன் தோற்றமளிக்கிறது! இந்த அரசாங்கமும் மக்கள் சமுதாயமும் கைவசப்படுத்தியுள்ள காரணிகளுக்கு அப்பால் வேறொரு காரணி இருப்பதை அவர்கள் பாரக்கிறார்கள். அதுவே இறைசக்தி. அதுவே ஏனைய காரணிகளைப் படைத்துத் திரை மறைவிலிருந்து அவற்றை இயக்கிக் கொண்டிருக்கும் இறைநாட்டம்!

மாபெரும் ஆற்றல்மிக்க அந்த இறைநாட்டம் யாருக்குத் துணைநிற்கிறதோ அவர் மீது இந்தப் புறக்காரணிகளும் அவற்றைக் கைப்பற்றி வைத்திருக்கும் மனிதர்களும் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தி விட முடியாது. அந்த மனிதர்களின் பால் அவர் தேவையாகவும் மாட்டார். நிலைமைகளையும் சுற்றுச் சூழ்நிலைகளையும் அல்லாஹ் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்து அவற்றை, அவரது நிலைமைக்கும் தேவைக்கும் உடன்படும் வகையில் - தேவையை நிறைவேற்றிக் கொடுக்கும் வண்ணம் அமைத்து விடுகிறான்! மேலும் அவரது பணிகளுக்கு வேண்டிய வழிகாட்டலையும் அனைத்து வசதி வாய்ப்புகளையும் தயார்படுத்திக்கொடுக்கிறான். மேலும் தனது பிரத்தியேக கருணையையும் அருளையும் அவருக்கு வழங்குகிறான்.

எனவே அவர் வெளிரங்க சக்திகளுக்கு முன்னால் அடிபணியவோ அவற்றைக் கைப்பற்றியுள்ளவர்களுக்கு அடங்கிச் செல்லவோ தேவையில்லை! அந்தக் காரணிகளைக் கைப்பற்றி வைத்திருக்கும் மனிதர்கள் உண்மையில் பலவீனமானவர்கள் - ஏழைகள்தாம்! எனவே அவர் தமது கொள்கையில் உறுதியாக நிலைத்திருப்பதுதான் அவசியம்!

இங்குதான் இறைநம்பிக்கை உலகாயதச் சிந்தனைப் போக்கின் மீது முழுமையாக வெற்றிகொள்கிறது. நம்பிக்கையின் தத்துவம் ஆதாரத்தின் அடிப்படையிலான தத்துவத்தை அடக்கியாளுகிறது! இந்த வரலாற்றின் திறவுகோலும் படிப்பினைக்குரிய இடமும் இதுதான்!

قال الله عز وجل: <u>اِنَّهُمْ فِتْيَةٌ</u> آمَنُوْ بِرَبِّهِمْ وَ زِدْنَاهُمْ هُدًى وَرَبَطْنَا عَلَى قُلُوْبِهِمْ اِذْ قَامُوْا فَقَالُوْا رَبُّنَا رَبُّ السَّمَاوَاتِ وَالاَرْضِ لَنْ نَدْعُوَ مِنْ دُوْنِهِ اِلَهًا لَقَدْ قُلْنَا اِذًا شَطَطًا ، هَؤلاَءِ قَوْمُنَا اتَّخَذُوْ ا مِنْ دُوْنِهِ آلِهَةً ، لَوْ لاَ يَأْتُوْنَ عَلَيْهِمْ بِسُلْطَانٍ بَيِّنٍ فَمَنْ أَظْلَمُ مِمَّنِ افْتَرَى عَلَى اللهِ كَذِبًا (سورة الكهف الآية: ١٣ – ١٥)

திண்ணமாக அவர்கள் தம் இறைவன் மீது நம்பிக்கை கொண்டிருந்த இளைஞர்கள். நாம் அவர்களை நேர்வழியில் மேலும் மேலும் முன்னேறச் செய்தோம். அவர்கள் (சத்தியத்திற்காகப் போராட) எழுந்து நின்று

'வானங்களுக்கும் பூமிக்கும் யார் அதிபதியோ அவன்தான் எங்கள் இறைவன். அவனை விடுத்து வேறெந்த கடவுளையும் நாங்கள் அழைக்கமாட்டோம். அவ்வாறு அழைத்தால் நாங்கள் முறையற்ற பேச்சை பேசியவர்கள் ஆவோம்' என்று (துணிந்து) கூறியபொழுது அவர்களின் இதயங்களை நாம் திடப்படுத்தினோம். (பிறகு அவர்கள் தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள்) 'இந்த நம்முடைய சமூகத்தினர் பேரண்டத்தின் அதிபதியை விடுத்துப் பிறவற்றைத் தெய்வங்களாக ஆக்கிக் கொண்டார்களே! (அவை வணக்கத்திற்குரிய தெய்வங்கள் என் றால்) அதற்கான தெளிவான சான்றினை இவர்கள் ஏன் கொண்டுவரவில்லை? அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்து கூறுபவனை விட பெரும் கொடுமைக்காரன் யார்?" (18 :13 -15 )

## வாழ்வா? சாவா?

ஆனால் இப்பொழுது கொள்கையில் நிலைத்திருப்பதற்கு என்ன வழி என்பதுதான் பிரச்னை. இந்தப் பூமி இவ்வளவு பரந்து விரிந்திருந்தும்கூட இறைநம்பிக்கையாளர்களான அந்த இளைஞர்கள் மீது நெருக்கடியாகி விட்டிருந்தது. அரசாங்கம், அந்நாட்டு மக்கள் அனைவரையும் அந்த இளைஞர்களுக்கு எதிராகத் தூண்டி விட்டி ருந்தது! உணவும் இதர வாழ்க்கைத் தேவைகளும் அவர்களுக்குத் தடை செய்யப்பட்டன.

இந்நிலையில் கொள்கையில் நிலைத்திருக்க வேண்டும் எனில், அதற்கான வழி என்ன? கொள்கையற்ற, குணவொழுக்கமற்ற வாழ்க்கை வாழ்வதா? கொள்கையைப் பாதுகாப்பதற்காக வாழ்வையும் சுதந்திரத்தையும் தியாகம் செய்வதா? இவ்விரண்டில் எது முக்கியம் என்பதே அந்த இளைஞர்களுக்கு முன் எழுந்த கேள்வி!

இந்நிலையில் ஈமான் (இறைவன் மீதான உறுதியான நம்பிக்கை) அவர்களுக்குக் கைகொடுத்து உதவு கிறது. செல்லும் பாதையை அவர்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. மேலும் 'அல்லாஹ்வின் பூமி பரந்து விரிந்தது., அவனது உதவி நிச்சயம்' எனும் உறுதியை அவர்களின் இதயங்களில் ஏற்படுத்துகிறது. இன்ப வாழ்வையும் வசதிவாய்ப்புகள் அனைத்தையும் இழந்துவிட்ட பொழுது இனியும் இந்த அநியாயக்காரர் களின் ஊரில் தங்கியிருக்க வேண்டும் என்று எந்தக் கட்டாயமும் தங்களுக்கு இல்லை என்கிற எண்ணம் அவர் களிடம் உறுதிப்பட்டது. அப்பொழுது அவர்களின் நாவில் எழுந்த வார்த்தைகள் இவைதான்:

وَاِذِ اعْتَزَلْتُمُوْهُمْ وَ مَا يَعْبُدُوْنَ اِلاَّ اللهَ فَأْوُوْا اِلَى الْكَهْفِ يَنْشُرْ لَكُمْ رَبُّكُمْ مِنْ رَحْمَتِهِ وَ يُهَيِّىءْ لَكُمْ مِنْ أَمْرِكُمْ مِرْفَقًـــا (ســـورة الكهف الآية: ١٦)

இந்த மக்களை விட்டும், அல்லாஹ்வை விடுத்து இவர்கள் வணங்கிக்கொண்டிருக்கும் தெய்வங்களை விட்டும் நீங்கள் விலகிக் கொண்டீர்களானால், இன்ன குகைக்குச் சென்று அபயம் தேடுங்கள். உங்கள் இறைவன் தனது கருணையை உங்கள் மீது இன்னும் விரிவாக்குவான். மேலும் உங்கள் பணிகளுக்கு வேண்டிய அனைத்துச் சாதனங்களையும் உருவாக்கித் தருவான்" (18 : 16)

## களத்தைக் காலி செய்த பிறகு செய்ய வேண்டியதென்ன?

பிறகு அந்த இளைஞர்கள் அல்லாஹ்வின் பூமியில் அப்படியே கண்போன போக்கில் சுற்றித் திரிந்திருக்க லாம். ஒவ்வொருவரும் தத்தமது பாதையில் சென்றிருக்கலாம். தனித் தனிக் குகையைத் தேடியோ மலை உச்சியை நாடியோ சென்றிருக்கலாம். எவ்வாறு கிறிஸ்தவர்கள் துறவறம் மேற்கொண்ட காலகட்டத்திலும் வீழ்ச்சி அடைந்தபோதும் செயல்பட்டார்களோ அவ்வாறு இந்த இளைஞர் களும் செய்திருக்கலாம்.

ஆனால் அந்த இளைஞர்களின் உள்ளத்தில் - நாம் அனைவரும் நமது தீன்- இறைமார்க்கத்தையும் கொள்கையையும் காப்பாற்றிக் கொள்வதற்காக ஒரே ஜமாஅத் - கூட்டமாகதான் இவ்வூரில் இருந்து வெளியேறி அல்லாஹ்விடம் தஞ்சம் அடைய வேண்டும்., அவனிடம் இருந்தே விரைவான மகிழ்வையும் தெளிவான வெற்றி யையும் எதிர்பார்க்கவேண்டும் என்கிற ஓர் உள்ளுதிப்பை அல்லாஹ் ஏற்படுத்தினான்.

இதுவே சரியான திட்டம்! மிகவும் சீரான பாதை! இறை நம்பிக்கையாளர்கள் மீது இப்பூமி நெருக்கடியாகி, வாழும் வழிகள் அனைத்தும் அடைபட்டுப்போய் அவர்களுடைய ஈமான் - இறை நம்பிக்கையும் வழிபாட்டு முறை யும் பேரபாயத்திற்குள்ளாக நேரிடும் ஒவ்வொரு காலகட்டத்திலும் அவர்கள் மேற்கொள்ள வேண்டிய நடைமுறை இதுதான்.

## இறைநம்பிக்கைக்கும் தியாகத்திற்கும் கிடைத்த பரிசு

பிறகு நடந்ததென்ன? இறைநம்பிக்கை மற்றும் வீரம் ஆகிய இரண்டு தன்மைகளை அந்த இளைஞர்கள் தங்களிடம் நிறைவாக்கினார்கள். அவ்விரண்டும்தான் இறைவனின் உதவியும் அவனது மறைமுகமான ஒத்து ழைப்பும் கிட்டுவதற்கான பதிவேட்டில் உள்ள இரு அடிப்படைப் பண்புகள்!

اِنَّهُمْ فِتْيَةٌ آمَنُوْا بِرَبِّهِمْ

திண்ணமாக அவர்கள் இளைஞர்கள். தம் இறைவன் மீது நம்பிக்கை கொண்டவர்கள்" [21]

அப்பொழுது அல்லாஹ்வும், தான் அளித்த வாக்குறுதிகள் அனைத்தையும் அவர்களுக்கு நிறைவேற்றிக் கொடுத்தான். அவைதான்: நேர்வழியில் முன்னேற்றம் அளித்தல், இதயத்தை உறுதிப்படுத்தல் என்பன.

وَزِدْنَاهُمْ هُدًى وَرَبَطْنَا عَلَى قُلُوْبِهِمْ

"நாம் நேர்வழியில் அவர்களை மேலும் மேலும் முன்னேறச் செய்தோம். அவர்களின் இதயங்களைத் திடப் படுத்தினோம்" [22]

சொந்த ஊரை விட்டு வெளியேறிச் செல்லும் இறைநம்பிக்கை யாளன்தான் - தனது சமுதாயத்தையும் சமூகச் சூழ்நிலையையும் எதிர்த்துப் புரட்சி செய்யக்கூடிய, கொடுங்கோல் ஆட்சியையும் சர்வாதிகார அரசையும் எதிர்த்துப்போராடக்கூடிய ஒரு முஸ்லிம்தான் வழிகாட்டலுக்கும் நிலைகுலையாமைக்கும் அதிகம் தேவை உடை யவன்! அவனது தடுமாறும் இதயத்தை அல்லாஹ், உறுதிப்படுத்துவதும் அவனது நெகிழும் மனத் தைத் திடப்படுத்துவதும் மிகவும் அவசியம்!

ஆம், கண்ணியமிக்க அந்த இளைஞர்கள் விஷயத்தில் தான் அளித்த வாக்குறுதியை அல்லாஹ் நிறை வேற்றினான். அவர்களுக்கு நேர்வழியில் முன்னேற்றத்தை அளித்தான். அவர்களின் இதயங்களை உறுதிப்படுத்தி னான். கோழை, அச்சம், தயக்கம்,தடுமாற்றம் ஆகிய தன்மைகளை அவர்களின் இதயங்களில் இருந்து வெளியேற்றிவிட்டு -வீரம், அமைதி, ஊக்கம், உறுதி, மகிழ்வு, ஆனந்தம் ஆகிய தன்மைகளை அவற்றில் நிரப்பி னான். அல்லாஹ்வையும் அவனுடைய செயல்களையும் முழு மனத்துடன் ஏற்றுக்கொள்ளும் மனநிறைவை அவர் களுக்கு அளித்தான்.

அல்லாஹ்வின் பாதையில் நாடு துறந்து செல்பவரின் கட்டமுதம் இதுதான்! இறைவழியில் போர் புரியக் கூடிய, தனது காலத்தையும் சமூகச் சூழ்நிலையையும் எதிர்த்துப் புரட்சி செய்யக்கூடிய ஒரு வீரனுக்குத் தேவையான ஆயுதம் இதுதான்!

பிறகு என்ன நடந்தது? அந்த இளைஞர்கள் ஊரை விட்டு வெளியேறினார்கள். சமூக வாழ்வையும் அதன் அலங்காரங்களையும் துறந்தார்கள். வாழ்க்கைச் சாதனங்களையும் வசதி வாய்ப்புகளையும் தூக்கி எறிந்தார் கள். சிறப்புமிக்க தம் நாட்டையும் மதிப்புமிக்க தங்களின் வீடுகளையும் விட்டுப் பிறிந்தார்கள். உண்மை யாதெனில் அந்த இளைஞர்கள் உயர்ந்த குடும்பங்களில் சிறந்த குலங்களில் பிறந்தவர்களாவர். [22]

விரிவான, ஆரோக்கியமான [23] ஒரு குகையின் பக்கம் அந்த இளைஞர்களுக்கு அல்லாஹ் வழிகாட்டியது அவர்கள் மேற்கொண்ட தியாகத்தின் பரிசு என்றுதான் சொல்ல வேண்டும். ஆம், இது போன்ற குகைகளை, விரிவான, ஆரோக்கியமான, தூய்மையான அபய இல்லங்களைப் பெரியபெரிய நிறுவனங்கள்கூட கட்டியெழுப்ப முடியாது.

அந்தக் குகை எப்படி அமைந்திருந்ததெனில், சூரிய ஒளியும் வெப்பமும் போதிய அளவு அங்கு கிடைத்துக் கொண்டிருந்தன. அத்துடன் சூரியனின் மிதமிஞ்சிய வெப்பத்தின் தீமையிலிருந்து பாதுகாப்பாகவும் இருந்தது. அது மட்டுமல்ல தூய்மையான காற்றும் இதமான சூழ்நிலையும் அந்த இளைஞர்களுக்கு நற்சுகத்தையும் சுறு சுறுப்பையும் அளித்துக் கொண்டிருந்தன!

وَتَرَى الشَّمْسَ اِذَا طَلَعَتْ تَزَاوَرُ عَنْ كَهْفِهِمْ ذَاتَ الْيَمِيْنِ وَاِذَا غَرَبَتْ تَقْرِضُهُمْ ذَاتَ الشِّمَالِ وَهُمْ فِى فَجْوَةٍ مِنْهُ

"(அவர்கள் தஞ்சம் புகுந்த குகை எவ்வாறு அமைந்திருந்த தெனில்,) சூரியன் உதயமாகும்பொழுது அவர்களின் குகையை விட்டும் விலகி வலது பக்கமாக உயர்வதையும் மறையும்பொழுது (அவர்களை விட்டும்

---

[21] சூரத்துல் கஹ்பு வசனம் 13

[22] சூரத்துல் கஹ்பு வசனம் 13

[22] அல்லாமா ஆலூசி அவர்கள் தமது விரிவுரையில் கூறுகிறார்கள்: அந்த இளைஞர்கள் ரோமாபுரியின் சிறப்புமிக்க, கண்ணியமிக்க பிரமுகர்களின் பிள்ளை களாவர். (நூல்: ரூஹு ல் மஆனி பாகம் 5 பக்கம் 11)

[23] லிசானுல் அரப் எனும் அகராதியில் உள்ளது: கஹ்பு என்பது மலைப் பொதும்பு ஆகும். ஆனால் குகை - பொதும்பு இரண்டுக்கும் வேறுபாடு என்னவெனில், குகை என்பது பொதும்பை விட மிக விரிவானது. நெருக்கடியானதாக இருந்தால் அதற்குப் பொதும்பு எனப்படும்.

கடந்து) இடது பக்கமாகத் தாழ்வதையும் நீர் காண்பீர். (எந்நிலையிலும் சூரியக் கதிர்கள் நேரடியாகக் குகையி னுள் செல்வதில்லை) அவர்களோ குகையினுள் ஒரு விசாலமான முற்றத்தில் இருந்தார்கள் "[24]

இவ்வாறு - அசுத்தமான, நாற்றமெடுத்த சமூகச் சூழ்நிலையை விட்டும் கொடுமையிலும் தீமையிலும் மூழ்கிக் கிடந்த ஆட்சியாளர்கள் மற்றும் சமூகத் தலைவர்களை விட்டும் அந்த இளைஞர்களின் உறவு முற்றாக முறிந்தது. மாசு மறுவற்ற வாழ்க்கையோடும் தூய்மையான வெளிவுலகத்துடனும் அவர்களின் உறவு தொடர்ந் தது. அவர்கள் ஊர் உலகத்தை விட்டும் விலகித்தான் வாழ்ந்தார்கள்., ஆயினும் உலக வாழ்வின் அனைத்து நலன்களையும் பலன்களையும் அனுபவித்தார்கள். இதுவெல்லாம் இதயத்தில் ஆழப்பதிந்திருந்த ஈமான் - இறைநம்பிக்கைக்கும் உண்மையான இறைவழிப்போராட்டத்திற்கும் கிடைத்த பரிசே அன்றி வேறில்லை. அல்லாஹ் ஒருவன்தான் இத்தகைய வசதியை ஏற்படுத்திக் கொடுத்தான். அவனே அதற்கான வழிகாட்டலை வழங்கினான்.

ذَٰلِكَ مِنْ آيَاتِ اللهِ مَنْ يَهْدِ اللهُ فَهُوَ الْمُهْتَدِ

இது (அதாவது, அந்த இளைஞர்கள் உலகையும் அதன் உறவுகள் அனைத்தையும் சத்தியத்திற்காக விட்டொழித்தது) அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் ஒன்றாகும். அல்லாஹ் எவருக்கு நேர்வழிகாட்டுகிறானோ அவரே நேர்வழியில் உள்ளவர் "[24]

இறைநிராகரிப்பாளர்கள், அல்லாஹ் வகுத்தளித்த சட்டங்களுக்கும் அவனது ஷரீஅத் -நெறிமுறைகளுக்கும் எதிராகக் கிளர்ச்சியை மேற்கொண்டார்கள். இயற்கைக்கு எதிராகச் செயல்பட்டார்கள். சுகபோகமான, உல்லாசமான, ஆனந்தமான வாழ்க்கையை அடைவதற்காக தங்கள் ஆற்றல்கள், உழைப்புகள், கல்விகள், விஷய ஞானங்கள் அனைத்தையும் செலவு செய்தார்கள். தங்களுடைய சொந்த நலன்களுக்காக இயற்கை சக்திகளை வசப்படுத்தினார்கள். சுகபோகத்தையும் செல்வச் செழிப்பையும் உல்லாசத்தையும் தரக்கூடிய சாத னங்களைத் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் வரும்படி செய்தார்கள். ஆனால் இறுதியில் என்ன ஆனது?

எதிர்பார்த்த பலன்களை விட்டும் அவர்கள் தடுக்கப்பட்டார்கள். ஆம், வாழ்க்கைச் சூழல்களும் இயற்கை யுமே அவர்களுக்கு எதிராகத் திரும்பிவிட்டன. அவர்கள் எதிர்பார்த்திருக்காத வழிகளில் அல்லாஹ்வின் தண்டனை அவர்களை வந்தடைந்தது. அவர்களே கண்டுபிடித்த கண்டு பிடிப்புகளுக்கும் சாதனங்களுக்கும் அவர்கள் இரையானார்கள். நூதனமான நோய்களுக்குப் பலியானார்கள். வினோதமான சிக்கல்களுக்கு ஆளா னார்கள். பேரழிவுமிக்க போர்களில் சிக்கினார்கள்!

وَمَنْ يُضْلِلِ اللهُ فَلَنْ تَجِدَ لَهُ وَلِيًّا مُرْشِدًا

"(நபியே!) அல்லாஹ் எவனை வழிதவறச் செய்கிறானோ அவனுக்கு உதவிபுரிபவரையும் வழிகாட்டுபவரை யும் நீர் காண மாட்டீர்"[26]

## ஈமானியக் குகை வாழ்க்கை

அந்த இளைஞர்கள் இந்த ஈமானியக் குகையில் வீணிலும் ஓய்விலும் தங்களது வாழ்வைக் கழிக்கவில்லை. அங்கு அவர்கள் இறைநெறிச் சட்டமும் வழிகாட்டலுமின்றி இருளிலோ கண்களைக் கட்டிய நிலையிலோ இருந்து கொண்டிருக்கவில்லை.

ஆதாரங்களில் இருந்து தெரியவருவது என்னவெனில், சில ஆகமங்களையும் எழுதப்பட்ட ஓலைகளையும் அந்த இளைஞர்கள் தம்முடன் கொண்டு சென்றிருந்தார்கள். அவை தௌராத் மற்றும் இன்ஜீலின் வசனங்கள் எழுதப்பட்ட ஏடுகளாக இருக்கலாம். நபிமார்களின் ஞானங்கள் மற்றும் போதனைகளில் இருந்து எஞ்சிய

---

[24] சூரத்துல் கஹ்பு வசனம் 17 - ரூஹு ல் மஆனியில் உள்ளது: அந்த இளைஞர்களைச் சூரிய வெப்பம் அறவே தாக்காத வகையில்தான், துன்புறுத்தாத வகையில்தான் குகை அமைந்திருந்தது. இதமான காற்று கிடைத்துக்கொண்டிருக் கும் வகையில், குகையின் நெருக்கடியால் துன்பத்திற்குள்ளாகாத முறையில் குகையின் நடுப்பகுதியில் அவர்கள் தங்கியிருந்தார்கள். (பாகம் 5 பக்கம் 20)

தஃப்ஸீருர் ராஜியில் உள்ளது: குகையின் வாசல் வடக்குப் பக்கமாகத் திறந் திருந்தது. சூரியன் உதயமானால் குகையின் வலது பக்கமாக அமைந்து விடும். மறையும்பொழுது இடது பக்கமாகச் சென்றுவிடும். (பாகம் 5 பக்கம் 466)

25 சூரத்துல் கஹ்ப் வசனம் 17

[26] சூரத்துல் கஹ்ஃப் வசனம் 17

பதியங்களாகவும் இருக்கலாம். ஊரை விட்டும் வெளியே கிளம்பும் பொழுது தங்களோடு அவற்றையும் பாதுகாப் பாக எடுத்துச் சென்றிருந்தார்கள். [27]

இது எத்தகைய நடைமுறையெனில், தங்களுடைய சமுதாயத்தையும் சமூகச் சூழ்நிலைகளையும் எதிர்த் துப் போராடக்கூடிய, நாட்டையும் வீட்டையும் துறந்து புகலிடம் தேடித் தனிமையை நாடிச்செல்ல வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாகக்கூடிய ஒவ்வொருவருக்கும் இது ஒரு சாஸனமாக இருக்கட்டும்., அப்படி ஊரை விட்டும் வெளியேறித் தனிமையை நாடும் சூழ்நிலை ஏற்படும்பட்சத்தில்!

பிறகு அந்த இளைஞர்கள் கையோடு கொண்டுசென்றிருந்த கட்டமுதும் இதரப் பொருட்களும் முடிந்து வந்த பொழுது அல்லாஹ் அவர்கள் மீது நிம்மதியான, நீண்டநெடியதொரு நித்திரையைச் சாட்டினான். உண்ணப் பருக வேண்டிய தேவைகூட இல்லாத வகையில்!

فَضَرَبْنَا عَلَى آذَانِهِمْ فِي الْكَهْفِ سِنِيْنَ عَدَدًا

அப்பொழுது நாம் அவர்களை அதே குகையில் பல்லாண் டுகள் ஆழ்ந்த நித்திரையில் ஆழ்த்தினோம்" [28]

## ரோமாபுரியின் தலைகீழ் மாற்றம்

குகைத் தோழர்களுடைய சரிதையின் அற்புதங்களுள் ஒரு பேரற்பும் இங்கு வெளிப்படுகிறது. குகையில் அவர்கள் தனித்திருந்த - நித்திரையில் ஆழ்ந்திருந்த காலத்தில் அவர்களது ஊரின் நிலைமை பெரும் மாறுதல் அடைகிறது. ரோம் நாட்டிலும் அதன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதிகளிலும் தலைகீழ் மாற்றம் ஏற்பட்டது. சிலை வழிபாட்டுக்கொள்கையும் ஊதாரித்தனமும் கொண்ட ஆட்சி காலாவதியானது. அதன் ஆட்சியாளர்களும் அதிகார வர்க்கத்தினரும் காலச்சுழற்சிகளினுள் சுருட்டப்பட்டார்கள். அத்தகைய அரசாங்கத்தின் சிதைவு களிடையே - அல்லாஹ்வின் மீதும் ஈஸா நபி மீதும் நம்பிக்கைகொண்ட ஓர் அரசு ஆட்சிக்கு வந்தது. [29]

எந்தப் புதிய மதத்தை முந்தைய அரசாங்கம் நீண்ட காலமாக எதிர்த்துக் கொண்டிருந்ததோ - அதனைப் பின்பற்றியவர்களையும் அதனை வழிநடத்திச் சென்ற தலைவர்களையும் நாட்டை விட்டே துறத்தியதோ அந்த

---

[27] **குர்ஆன் அவர்களுக்கு அஸ்ஹாபுல் கஹ்பு வர் ரகீம் என்று பெயரிடுகிறது. ரகீம் என்பதில் பல கருத்துகளை விரிவுரையாளர்கள் எழுதுகிறார்கள். சிலர் கூறுகிறார்கள்: அது ஒரு கற்பலகை. குகைத் தோழர்களின் வரலாற்றை அல்லது அவர்களின் பெயர்களை அதில் எழுதியிருந்தார்கள். பின்னர் அது குகையின் வாசலில் வைக்கப்பட்டது. வேறு சிலர் கூறுகிறார்கள்: ரகீம் என்பது ஒரு கிராமத்தின் அல்லது நகரத்தின் பெயர்.**

**அல்லாமா கைலானி அவர்கள் தமது கட்டுரையில் பின் வரும் கருத்தை எழுதியுள்ளார்கள்: ரகீம் என்பது எழுதப்பட்ட ஓர் ஏடு. குகையில் அவர்களுக்கு அது உதவியாக இருந்தது.**

**அல்லாமா ஆலூசி அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்தாக எழுதியிருப்பது அதற்கு வலுவூட்டக்கூடியதாக உள்ளது: ரகீம் என்பது அவர்களிடம் இருந்த ஓர் ஏடு. ஈஸா நபி (அலை) அவர்களின் தீனில் இருந்து எந்தச் சட்டங்களை அவர்கள் பின்பற்றி வந்தார்களோ அந்தச் சட்டங்கள் அந்த ஏட்டில் எழுதப்பட்டிருந்தன. (நூல்: ரூஹு ல் மஆனி பாகம் 15 பக்கம் 11) இதுவே நமது கருத்தாகும்.**

**இப்னு ஜரீர் (ரஹ்) அவர்கள் இப்னு ஜைத் இடம் இருந்து அறிவித்துள்ளார்கள்: ரகீம் என்பது ஓர் ஏடு. அதற்கு ஒரு பிரத்தியேகச் செய்தி ஒன்று உண்டு. அதனை அல்லாஹ் அறிவித்துத் தரவில்லை.**

وَمَا أَدْرَاكَ مَا عِلِّيُوْنَ كِتَابٌ مَرْقُوْمٌ يَشْهَدُهُ الْمُقَرَّبُوْنَ

**"அந்த மேன்மக்களின் பதிவேடு என்னவென்பது உமக்குத் தெரியுமா? அது எழுதப்பட்ட ஒரு புத்தகம். (இறைவனிடம்) நெருக்க மான மலக்குகள் அதனைப் பாதுகாக்கிறார்கள்" (பாகம் 15 பக்கம் 122)**

**இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ரகீம் என்றால் ஏடு. அரபியில் மர்கூம் என்றால் எழுதப்பட்டது என்று பொருள். (ஸஹீஹு ல் புகாரி பாகம் 2 தஃப்ஸீர் பகுதி, சூரத்துல் கஹ்பு)**

[28] **சூரத்துல் கஹ்பு வசனம் 19**

[29] **இது கிஸ்தந்தீன் கபீர் என்ற மன்னன் காலத்தில் நிகழ்ந்ததாகும். இவர் கி.பி. 306 ஆம் ஆண்டில் ஆட்சிப் பொறுப்பேற்றார். அப்பொழுது இவர் கிறிஸ்தவ மதத்தை ஏற்றார். (இதுதான் பிரபலமான அறிவிப்பு. ஆனால் புதிய மதத்தை ஏற்றதில் இந்த மன்ன ருடைய வாய்மையிலும் நல்லெண்ணத்திலும் ஐயம் கொள்கிறார்கள், பெரும்பாலான ஆய்வாளர்கள்! அவர் கிறிஸ்துவத்தைத் தழுவி யது அரசியல் நலன்களுக்காகவே என்று சொல்கின்றனர்) இந்த மன்னர்தான் கிறிஸ்துவத்தை அரசாங்கத்தின் அதிகாரப்பூர்வ மதம் ஆக்கினார். மேலும் முக்கியமான சபைகளை (மஜ்லிஸ்களை) கூட்டினார்., அவற்றில் பெரிய பெரிய பாதிரிமார்களும் பிஷப்களும் கலந்துகொண்டார்கள். அதன் நோக்கம் கிறிஸ்துவக் கொள்கையில் ஒருமுகத்தன்மையை ஏற்படுத்துவதும் கருத்து வேறுபாடுகளைக் களைவதும் கோஷ்டி மோதல்களை ஒழிப்பதுமாகும். இவரே கிஸ்தன்தீனியா (Constantinople) எனும் நகரை கி.பி.330 ஆம் ஆண்டு உருவாக்கினார். அது அவரது பெயரில் பிரபலமாகியுள்ளது. அதனை நாட்டின் தலைநகராக ஆக்கினார். கி.பி. 337 ஆம் ஆண்டு மரணம் அடைந்தார்.**

புதிய மதத்திற்கு இந்த அரசு உதவி புரிந்தது. அந்தமார்க்கத்துடன் இணைகிற அனைவரையும் கண்ணியப் படுத் தியது. அதன் கொள்கைப்படி வணக்க வழிபாடு செய்பவர் அனைவரையும் வரவேற்று கௌரவித்தது.

இந்தக் காலகட்டத்தில் குகைத்தோழர்களை அல்லாஹ் விழித்தெழச் செய்கிறான்., மூன்று நூற்றாண்டு களுக்கும் அதிகமாகத் தூங்கிக் கொண்டிருந்த அவர்களின் நீண்ட நெடிய தூக்கம் கலைந்தது!

وَلَبِثُوْا فِى كَهْفِهِمْ ثَلاَثَ مِائَةٍ سِنِيْنَ وَ ازْدَادُوْا تِسْعًا

மேலும் அவர்கள் தமது குகையில் முன்னூறு ஆண்டுகள் தங்கினார்கள். சிலர் ஒன்பதாண்டுகளை அதிக மாக்கினார்கள்" [30]

தூக்கத்தில் கழிந்த காலம் எவ்வளவு என்பது பற்றி தங்களுக்கு மத்தியில் அவர்கள் வினவிக் கொள்கிறார் கள். அந்தக் காலஅளவைத் தீர்மானிப்பதில் - துல்லியமாகக் கணிப்பதில் அவர்களுக்குள் கருத்து வேறுபாடு எழுகிறது. பிறகு அந்த விவகாரத்தை அல்லாஹ் வின் பக்கம் விட்டுவிடுகிறார்கள். ஏனெனில் அது முக்கிய மான மார்க்கப் பிரச்னையோ முக்கியமான உலக விவகாரமோ அல்ல.

قَالَ قَائِلٌ مِنْهُمْ كَمْ لَبِثْتُمْ قَالُوْا لَبِثْنَا يَوْمًا أَوْ بَعْضَ يَوْمٍ، قَالُوْا رَبُّكُمْ أَعْلَمُ بِمَا لَبِثْتُمْ

"அவர்களில் ஒருவர் நாம் தங்கியிருந்தது எவ்வளவு காலம் என்று கேட்டார். அதற்கு அவர்கள், ஒருநாள் அல்லது சில மணி நேரம் தங்கியிருப்போம் என்று பதில் அளித்தார்கள். (அந்தக் கால அளவை சரியான முறையில் அறிந்திட முடியாமல் ஆனபொழுது) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் எவ்வளவு காலம் தங்கி யிருந்தீர்கள் என்பதை உங்கள் இறைவன்தான் நன்கு அறிந்தவன்" [31]

சிறிது நேரத்தில் அனைவரும் பசியை உணர்கிறார்கள். உடனே தங்களில் ஒருவரை, நல்ல உணவை வாங்கி வருமாறு பணிக்கிறார்கள். தங்களது ஊரில் இருந்து கையோடு கொண்டுவந்திருந்த வெள்ளி நாணயங்களை அவரிடம் கொடுத்து அனுப்புகிறார்கள்.

فَابْعَثُوْا اَحَدَكُمْ بِوَرِقِكُمْ هَذِهِ اِلَى الْمَدِيْنَةِ فَلْيَنْظُرْ أَيُّهَا أَزْكَى طَعَامًا فَلْيَأْتِكُمْ بِرِزْقٍ مِّنْهُ

நம்மில் ஒருவரை இந்த வெள்ளி நாணயத்தைக்கொடுத்து ஊருக்குள் அனுப்பி வையுங்கள். மிகவும் நல்ல உணவு [32] எங்கு கிடைக்கும் என்று பார்த்து அங்கிருந்து சாப்பிடுவதற்கு ஏதாவது நமக்கு வாங்கி வரட்டும்" [33]

இரகசியம் வெளிப்பட்டு விடாதவாறு பாதுகாப்பாகவும் சாமர்த்தியமாகவும் சென்று திரும்பும்படி தம் தோழருக்கு அவர்கள் அறிவுரை கூறுகிறார்கள். ஏனெனில் நாட்டின் ஆட்சி இன்னும் எதிரிகளின் கைவசமே உள்ளது என்றும் போலீஸாரும் புலனாய்வுத் துறையினரும் தங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும்தான் அவர்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள்.

وَلْيَتَلَطَّفْ وَلاَ يُشْعِرَنَّ بِكُمْ أَحَدًا ، اِنَّهُمْ اِنْ يَظْهَرُوْا عَلَيْكُمْ يَرْجُمُوْكُمْ أَوْ يُعِيْدُوْكُمْ فِىْ مِلَّتِهِمْ وَلَنْ تُفْلِحُوْا اِذًا أَبَدًا

அவர் சாமர்த்தியமாக நடந்து கொள்ளட்டும். நாம் இங்கு இருப்பதை யாருக்கும் அவர் தெரியப்படுத்திட வேண்டாம். அவர்கள் நம்மைப் பிடித்துவிட்டால் நம்மைக் கல்லால் அடித்துக் கொன்று விடுவார்கள். அல்லது அவர்களது மதத்திற்கு நம்மை பலவந்தமாக் கொண்டு சென்று விடுவார்கள். அப்படி ஆகிவிட்டால் நீங்கள் ஒரு பொழுதும் வெற்றி பெற முடியாது" [33]

இங்கே - இறைநம்பிக்கை கொண்ட இளைஞர்கள் கொடுமைப்படுத்தப்பட்ட கதையையும் அது சிலை வழிபாட்டில் திளைத்திருந்த தீயோர்களின் ஆட்சியில் நடந்ததென்பதையும் ஊர்மக்கள் செவிவழிச் செய்தியாகத் தெரிந்திருந்தார்கள். அந்த இளைஞர்களுக்கு இழைக்கப்பட்ட துன்பங்களையும் அதனால் அவர்கள் தங்கள் நாட்டைத் துறந்து சென்றதையும் மக்களின் கண்களை விட்டும் எவ்வித அடிச்சுவடும் இல்லாமல் மறைந்து போனார்கள் என்பதையும் மக்கள் கேள்விப்பட்டிருந்தார்கள்.

---

[30] **சூரத்துல் கஹ்பு 25**

[31] **சூரத்துல் கஹ்பு 19**

[32] **இந்த வசனத்திற்கு இமாம் ராஜீ அவர்கள், மிகவும் தூய்மையான, சுவையான உணவு என்று விளக்கம் அளிக்கிறார். மேலும் எழுதுகிறார்: உணவை சேகரித்து வைப்பதற்காக முயற்சி செய்வது ஷரீஅத்தில் அனுமதிக்கப்பட்ட ஒன்றுதான்., அது தவக்குல் - இறைவனை முழுவதும் சார்ந்திருத்தல் எனும் பண்புக்கு கேடு விளைவிக்காது என்பது இந்த வசனத்தில் இருந்து தெரிகிறது.**

[33] **சூரத்துல் கஹ்பு 19 - 20**

ஆட்சிக்கு வந்த புதிய கிறிஸ்தவ அரசு, தனது மதம் கொடுமைப் படுத்தப்பட்ட வரலாற்றுச் சின்னங்களுக் குப் புத்துயிர் கொடுப்பதிலும் அதன் அடையாளச் சுவடுகளைப் புதுப்பிப்பதிலும் ஈடுபட்டது. தனது மதத்திற் காகப் போராடி உயிர்த்தியாகம் செய்த வீரர்களின் நினைவைப் புதுமைப் படுத்துவதிலும் அவர்களின் புகழை நிலை நாட்டுவதில் அதற்காக நினைவு இல்லங்களை எழுப்புவதிலும் நாட்டம் கொண்டது. அத்தகைய வீரர்களின் பட்டியலில் குகைத் தோழர்களே முன்னலையில் இருந்தனர்.

## நேற்றோ விரட்டப்பட்டவர்கள்., இன்றோ வீரத் தியாகிகள்

இதன் விளைவாக குகைத் தோழர்களின் சரிதைதான் அந்த நகரம் முழுவதன் பேச்சானது. உணவுக்காக அவர்கள் அனுப்பி வைத்த தோழர் பதுங்கிப் பதுங்கிப் புறப்பட்டார்., சாதுரியமாகவும் அச்சத்தினால் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியும் கிளம்பினார். சுவையான உணவு எங்கு கிடைக்கும் என்று பார்க்கிறார். அதை வாங்கிக் கொண்டு விரைவாக தன் தோழர்களிடம் திரும்ப வேண்டும் என்று கருதுகிறார். அப்படித் திரும்பினால் அதுவே பெரும் பாக்கியம் என்று எண்ணுகிறார்.

ஆனால் அங்கு நகர மக்கள் அனைவரின் ஆச்சரியப் பார்வைக்கு இலக்காகி விடுகிறார். மட்டுமல்ல அவரும் அவருடைய தோழர் களுமே ஊரினுள் தலைவர்களாக மதிக்கப்படுகிறார்கள். அவர்களின் தியாகம், பெருமை, வீரம் பற்றியே மக்களிடத்திலும் அரசுத் தரப்பிலும் வெகுவாகப் புகழப்பட்டுக் கொண்டிருந்தது.

அனைத்திற்கும் முதலில், அவர் தன்னுடன் எடுத்துச் சென்றிருந்த நாணயங்கள் அல்லது அவரது பேச்சுப் பாணி, அல்லது அவர் அணிந்திருந்த ஆடைகள் மூலம் அவரைப் பற்றிய விபரம் மக்களுக்குத் தெரிந்து விடுகி றது. ஆனால் குர்ஆன் இந்த விவரங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. ஏனெனில் குர்ஆனின் குறிக் கோள் நேர்வழி காட்டுவதே தவிர வரலாறுகளையும் கதைகளையும் விவரிப்பதல்ல.

பிறகு இந்தச் செய்தி நகர் முழுவதும் ஏன், நாடு முழுவதும் தீயெனப் பரவுகிறது. எங்கு நோக்கினும் மக்கள் அனைவரும் அதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். மேலும் மக்கள் தனித்தனியாகவும் கூட்டம் கூட்டமாகவும் அந்த இளைஞர்களுக்கு அடைக்கலம் கொடுத்த குகையை நோக்கிப் புறப்படலாயினர். அவர் களைத் தரிசிப்பதைப் பாக்கியமாகக் கருதலானார்கள்.

ஆனால் குர்ஆன் தனது வழக்கத்திற்கேற்ப இந்த இடத்திலும் -அந்த இளைஞர்களுக்குக் கிடைத்த மக்களின் வரவேற்பு, கௌரவம், கண்ணியம் ஆகிய விவரங்களைக் குறிப்பிடுவதை நிறுத் திக் கொள்கிறது. ஆனால் குர்ஆன் அழுத்தமாகக் குறிப்பிடுவது இதுதான்:

وَكَذَلِكَ أَعْثَرْنَا عَلَيْهِمْ لِيَعْلَمُوْا أَنَّ وَعْدَ اللهِ حَقٌّ وَّ اَنَّ السَّاعَةَ لاَ رَيْبَ فِيْهَا

இவ்வாறே அவர்களின் நிலைமையை ஊர் மக்களுக்கு நாம் தெரியப்படுத்தினோம்., அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானது என்பதையும் மறுமை நாள் நிச்சயம் வந்தே தீரும் என்பதையும் மக்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக " [34]

அரசாங்கத்திலும் மக்களிடத்திலும் ஏற்பட்டிருந்த இந்த மாற்றமும், இவ்வளவு நீண்ட காலம் காணாமல் போன பின்னர் அந்த இளைஞர்களை மக்கள் தெரிந்து கொண்டதும் -

அல்லாஹ் தனது வாக்குறுதியை அதாவது, அந்த இளைஞர்களின் புகழை உயர்த்துவதாகவும் அவர்களின் பதியங்களை நிலைக்கச்செய்வதாகவும் அவர்களின் எதிரிகளை அடக்குவதாகவும் அளித்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றுவதாக அமைந்துள்ளன. மேலும் அல்லாஹ்தான் இரவையும் பகலையும் மாற்றிக் கொண்டி ருக்கிறான் என்பதற்குப் பெரும் ஆதாரமாகவும் அவை திகழ்கின் றன. அத்துடன் -

மறுமை நாள் வந்தே தீரும். அதில் எவ்வித ஐயமும் இல்லை., மண்ணறையில் உள்ளவர்களை (மரணித்த வர்களை) திண்ணமாக அல்லாஹ் எழுப்பியே தீருவான் " [35] என்பதற்கும் பெரும் சன்றாகத் திகழ்கின்றன!

அடக்குமுறையைக் கையாண்ட முந்தைய அரசு இவ்விதம் அடிச்சுவடின்றி அழிந்தொழிந்துபோகும் என்றும் அடக்கி ஒடுக்கப் பட்ட கிறிஸ்தவ மதம் மீண்டும் கிளர்ந்தெழும் என்றும் குகைத் தோழர்கள் இவ்வளவு நீண்ட காலத்திற்குப் பிறகு பெரியதொரு 'மண்ணறை' போன்றிருந்த குகையிலிருந்து எழுவார்கள்., கண்ணியமும் கௌரவமும் பெறுவார்கள் என்றும் அரசாங்கம் இரு கைகளையும் விரித்து அவர்களை வரவேற்கும் என்றும்

---

[34] **சூரத்துல் கஹ்பு 21**

[35] **சூரத்துல் ஹஜ் வசனம் 7**

ஊர் மக்கள் அனைவரும் ஓடோடிவந்து அவர்களை ஆரத்தழுவிக் கொள்வார்கள் என்றும் எதிர்பார்க்கப் பட்டதா,என்ன? இதில் குறைஷிகுலத் தலைவர்களுக்கும் மக்கத்துப் பிரமுகர்களுக்கும் படிப்பினையும் ஒடுக்கப் பட்ட, பலவீனமான முஸ்லிம்களுக்கு ஆறுதலும் உண்டல்லவா?

பிறகு அந்த இளைஞர்கள் அல்லாஹ்வின் நாட்டம் உள்ளவரை அங்கு தங்கியிருந்தார்கள். பிறகு நித்திய மரணம் அவர்களை தழுவிக் கொண்டது. அப்பொழுது அவர்கள் மீது அன்பும் மரியாதையும் வைத்தவர்கள் மத்தியில் கருத்து வேறுபாட்டுக்கும் சர்ச்சைக்கும் உரிய பெரும் பிரச்னையாய் அவர்கள் ஆனார்கள். அவர்கள் விஷயத்தில் மக்களிடையே பல கருத்துகள் எழுந்தன. அவர்களின் புகழை நிலைக்கச் செய்வது எப்படி? அவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்புவது எப்படி என்பது பற்றி பல்வேறு கருத்துகள் தோன்றின!

اِذْ يَتَنَازَعُوْنَ بَيْنَهُمْ أَمْرَهُمْ فَقَالُوْا ابْنُوْا عَلَيْهِمْ بُنْيَانًا ، رَبُّهُمْ أَعْلَمُ بِهِمْ ، قَالَ الَّذِيْنَ غَلَبُوْا عَلَى اَمْــرِهِمْ لَنَتَّخِــذَنَّ عَلَــيْهِمْ مَسْجِدًا

அந்நேரத்தில் (அவர்கள் விஷயத்தில்) மக்கள் தங்களுக்கிடையே தர்க்கம் புரியலானார்கள். ‘அவர்களின் நினைவாக (குகைமீது) ஒரு கட்டிடம் எழுப்புங்கள்.,(அதற்கு மேல் எதுவும் செய்ய வேண்டாம்) இவர்களைப் பற்றி இவர்களின் இறைவன்தான் நன்கு அறிந்தவன்’ என்று சிலர் கூறினர்! ஆனால் அவர்களின் விவகாரத் தில் எவர்களின் கருத்து மேலோங்கியிருந்ததோ அவர்கள் கூறினார்கள்: ‘நாங்கள் இவர்கள் (தூங்கிய இடத்தின்) மீது ஒரு வணக்கத்தலம் எழுப்புவோம்” [36]

இத்தகைய ஆர்வநிலை, அவர்களின் காலத்தோடு -அவர்களின் அந்தஸ்துக்கு மதிப்பளித்ததோடு-அவர்களின் நினைவை நிலைக்கச் செய்ததோடு முடிந்துவிடவில்லை. மாறாக அந்த இளைஞர்கள் வரலாற்று நாயகர் களாக, சமயத் தலைவர்களாக என்றென்றும் மதிக்கப்படலானார்கள். அவர்கள் விஷயத்தில் பலவிதப் பிரிவு களும் குழுவினரும் தோன்றினார்கள். ஒவ்வொரு பிரிவினர்க்கும் பல ஆதரவாளர்களும் உருவானார்கள்.

سَيَقُوْلُوْنَ ثَلاَثَةٌ رَابِعُهُمْ كَلْبُهُمْ وَيَقُوْلُوْنَ خَمْسَةٌ سَادِسُهُمْ كَلْبُهُمْ رَجْمًا بِالْغَيْبِ وَيَقُوْلُوْنَ سَبْعَةٌ وَثَامِنُهُمْ كَلْبُهُمْ قَلْ رَبِّى أَعْلَمُ بِعِدَّتِهِمْ ، مَا يَعْلَمُ اِلاَّ قَلِيْلٌ فَلاَ تُمَارِ فِيْهِمْ اِلاَّ مِرَاءً ظَاهِرًا وَلاَ تَسْتَفْتِ فِيْهِمْ أَحَدًا

அவர்கள் மூவர்., நாலாவது அவர்களது நாய் என்று சிலர் கூறுவர். ஐவர்., ஆறாவது அவர்களின் நாய் என்று வேறு சிலர் குருட்டாம்போக்கில் ஏதேதோ கூறுவர். ஏழுபேர்., அவர்களில் எட்டாவது அவர்களின் நாய் என்று இன்னும் சிலர் சொல்வர். (நபியே) நீர் கூறும்: அவர்களின் எண்ணிக்கையை என் இறைவன் தான் நன்கு அறிந்தவன். அவர்களைப் பற்றி சிலரே அறிவார்கள். (நிலைமை இவ்வாறு இருப்பதால்) அவர்களின்

---

[36] **சூரத்துல் கஹ்ஃப் 21 - இந்த வசனத்தின் விரிவுரையில் அல்லாமா ஆலூசி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: மகான்களின் மண்ணறைகள் மீது தங்குவதும் அவற்றின் மீது வணக்கத் தலம் (மஸ்ஜித்) எழுப்புவதும் அதில் தொழுவதும் கூடும் என்பதற்கு இந்த வசனத்தில் ஆதாரம் உள்ளது என்று சிலர் வாதிடு கிறார்கள். இது முறையற்ற, வீணான கருத்தாகும்., கேடுகெட்ட, செல்லு படியாகாத கூற்றாகும். ஆயிஷா (ரலி) அவர்களிடம் இருந்து புகாரியும் முஸ்லிமும் நஸாஈயும் மேலும் அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் இருந்து முஸ்லிமும் அறிவித்திருக்கிறர்கள்:**

عن النبى ﷺ ا نه قال: لعن الله ا ليهود والنصارى ، اتخذوا قبور أنبيائهم مساجد

**“யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக.அவர்கள் தங்கள் நபிமார்களின் மண்ணறைகளை மஸ்ஜித்களாக ஆக்கிவிட்டார்கள்”புகாரி, முஸ்லிம், நஸாஈ ஆகியோரின் மற்றோர் அறிவிப்பில் இவ்வாறு வந்துள்ளது:**

ان أولئك شرار الخلق يوم القيامة

**“இப்படிப்பட்டவர்களே மக்கள் அனைவரினும் மறுமை நாளில் மிகக் கெட்டவர்களாக இருப்பார்கள்”**

**மேலும் இந்த வசனத்தில் எடுத்துரைக்கப்பட்டது அவ்வாறு செய்வோம் என்று உறுதிகொண்ட ஒரு குழுவினரின் கருத்துதானே தவிர வேறொன்றும் இல்லை. மட்டுமல்ல அவர்களைப் புகழும் வகையிலோ அவர்களை ஒரு முன்மாதிரியாகக் கருதுமாறு தூண்டும் வகையிலோகூட இந்த வசனம் இடம் பெறவில்லை. மேலும் அவ்வாறு சொன்னவர்கள் பாவக்கறையிலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள் என்று நிரூபிக்கப்படாத வரையில் - அவர்களது நாட்டம் ஒருபுறம் இருக்கட்டும் - அவர்களது செயலேகூட ஆதாரம் ஆகாது, அவர்கள் எந்தச் செயலைச் செய்ய நாடினார்களோ அந்தச் செயல் ஷரீஅத்தின் நடைமுறையே என்பதற்கு! மேலும் அவ்வாறு வணக்கத்தலம் எழுப்புவதாகச் சொன்னது தலைவர்களும் அரசர்களும்தான் என்று ஒரு கருத்தும் - கதாதா (ரலி) போன்றோரிடம் இருந்து - அறிவிக்கப்பட்டுள்ளது. இதுவும் அவர்களின் செயல் மீது அதிக அளவு உறுதி கொள்ள முடியாது என்பதற்குத்தான் வலுசேர்க்கிறது! (ரூஹு ல் மஆனி பாகம் 5 பக்கம் 21 - 32)**

எண்ணிக்கை விஷயத்தில் மேலோட்டமான முறையிலே தவிர நீர் தர்க்கம் செய்யாதீர். மேலும் அவர்களைப் பற்றி எவரிடமும் எதுவும் கேட்காதீர் "[37]

## உலகாயதக் கொள்கையை இஸ்லாம் வென்றது!

குகைஅத்தியாயத்தின் நான்கு சரிதைகளில் முதல் சரிதையாகிய நிலையான இந்தச் சரிதை இவ்வாறு நிறைவடைகிறது. அதாவது இஸ்லாத்திற்கும் உலகாயதத்திற்கும் போராட்டம் அல்லது இயற்கைக் காரணி களை நம்புவதற்கும் இறைவனை நம்புவதற்கும் மத்தியிலான போராட்டம் எனும் சரிதை இங்கே நிறைவு பெறு கிறது. இறைநம்பிக்கைக் கொள்கை உலகாதயம் என்கிற சடத்துவ வாதக்கொள்கை மீது வெற்றி கொள்கி றது. ஆம், இயற்கைக் காரணிகளைப் படைத்த இறைவன் மீது உறுதியாக நம்பிக்கை கொள்வதோடு கதை முடிகிறது!

இறைநம்பிக்கையாளர்களான அந்த இளைஞர்கள் உலகாயதப் போக்கை விடுத்து இறைநம்பிக்கையுடன் வாழ்வதற்கே முன்னுரிமை கொடுத்தார்கள். இம்மைப் பலன்களைவிட மறுமைப் பேறுகளுக்கே முதலிடம் கொடுத்தார்கள். ஏழ்மையும் வறுமையும் உடைய வாழ்வாயினும் இறைநம்பிக்கையுடன் வாழ வேண்டும் என்றே விரும்பினார்கள். பிறந்த ஊரையும் உற்றார் உறவினர்கள் -நண்பர்கள் யாவரையும் விட்டுத்தூரமாக வாழ்வதை யும் வாழ்க்கைச் சாதனங்கள், சுகபோகம், அரசு மரியாதை ஆகியவற்றில் எந்தப் பாக்கியமும் தங்களுக்கு இல்லாத நிலையையும் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் இறைவனோடு பிறபொருட்களை இணையாக்கிக் கடவு ளாகக் கருதி வணங்குவதற்கும் மனஇச்சையைப் பின்பற்றி வாழ்வதற்கும் பாவத்திலும் வரம்பு மீறலிலும் எவருக்கும் துணைபோவதற்கும் அவர்கள் முன்வரவில்லை! மனஇச்சையின் தூண்டுதலில் இருந்து விலகி ஆன்மாவின் தேட்டத்திற்கு வந்தார்கள். அறிவின் தேட்டத்தை விட்டும் விலகி இறைநம்பிக்கையின் அழைப்பின் பக்கம் விரைந்து வந்தார்கள்.

இறுதியில் அந்த இளைஞர்களே ஆழமான அறிவும் தூரநோக்கும் உடையவர்கள் என்பதும் இறுதி வெற்றி இறைபக்தர்களுக்கே என்பதும் உறுதியானது!

எந்த இயற்கைக் காரணிகளை விட்டும் விலகி இறைவன் பக்கம் ஓடினார்களோ அந்தக் காரணிகள் - உலகத்தை விட்டும் அவர்கள் பிரியும் நேரத்தில் அவர்களுக்கு அடிபணிந்தன. நேற்று எந்த அரசாங்கத்தின் தண்டனைக்குப் பயந்து ஓடினார்களோ அந்த அரசாங்கம் அவர்களுக்குக் கீழ்படிந்தது!

குகைத் தோழர்களின் இந்தச் சரிதை - ஈமான், வீரம், உறு திப்பாடு, அர்ப்பணித்தல், ஜிஹாத் (இறைவழிப் போர்) ஆகிய வற்றின் சரிதையாகும். மனித வரலாற்றில் - சத்திய மார்க்கத்தின், நேரிய கொள்கையின் வரலாற்றில் மீண்டும் மீண்டும் நிகழ்ந்து கொண்டிருக்கும் சரிதையாகும். இயற்கைக் காரணிகள் இறைநாட் டத்திற்குக் கட்டுப்பட்டவைதான் என்பதற்கும் அவை இறைநம்பிக்கைக்கும் நற்செயல்களுக்கும் உற்றதுணை தான் என்பதற்கும் ஆதாரமாகத் திகழும் சரிதையாகும் இது!

எனவே ஓர் இறைநம்பிக்கையாளன் மேற்கொள்ள வேண்டிய ஒரே மார்க்கம் யாதெனில், இறைநம்பிக்கை மற்றும் நற்செயல்கள் ஆகியவற்றின் மூலம் அந்த இறைநாட்டத்தை தன் பக்கம் ஈர்ப்பதுதான்! அதன் மூலம் அல்லாஹ்வின் உதவிக்கும் அவனது மறைமுக ஒத்துழைப்புக்கும் தகுதியானவனாகத் திகழ்வதுதான்!

இரண்டாம் சரிதையாகிய இரு தோட்டங்கள் உடைய செல்வந்தனின் சரிதையை குர்ஆன் தொடங்கு வதற்கு முன்னால் நபி (ஸல்) அவர்களுக்கு இவ்வாறு அறிவுரை வழங்குகிறது:

"அல்லாஹ்வின் கயிற்றை, அதிக சக்திவாய்ந்த மிகப்பெரிய காரணியை, உறுதியான பற்றுக்கோட்டை உறுதியாகப் பற்றிக் கொள்ளுங்கள். இதுவே இறைநம்பிக்கை மற்றும் குர்ஆனின் பாதை "

மேலும் நபியவர்களுக்கு நல்லுரை பகர்கிறது: இறைநம்பிக்கை, இறைவனைப் பற்றிய நிறைஞானம், உறுதிப்பாடு, தியானம், துஆ (பிரார்த்தனை) ஆகியவற்றின் மூலம் நற்பாக்கியம் பெற்று வாழ்கின்ற இறை நம்பிக்கையாளர்களோடு நட்புகொண்டு வாழுங்கள். உலக இன்பங்களையும் அதன் அலங்காரங்களையும் அவர்கள் குறைவாகப் பெற்றிருந்தாலும் சரியே! ஆனால் எவர்கள் இறைநம்பிக்கையிழந்து வாழ்கிறார்களோ - இறைவனைப் பற்றிய ஞானம், உறுதிப்பாடு, இறைநினைவு, பிரார்த்தனை ஆகிய பாக்கியங்களை இழந்து வாழ்கிறார்களோ அத்தகைய அறிவிலிகளுடன் எந்த நட்பும் வைத்துக் கொள்ளாதீர்கள்., வசதி வாய்ப்புகளை யும் வாழ்க்கைச் சாதனங்களையும் சுகபோகங்களையும் பெரும் அளவு அவர்கள் பெற்றிருந்தாலும் சரியே!

உண்மையில் இது ஒரு பொதுவான அறிவுரையே ஆகும். குர்ஆனை ஓதி அதனைப் பின்பற்றி வாழக் கூடியவர்கள், குர்ஆனை நம்பக்கூடியவர்கள் என எல்லோருக்கும் உரிய நல்லுரையே இது. இன்னும் சொல்லப்

---

[37] **சூரத்துல் கஹ்ஃப் 22**

போனால் இந்த அறிவுரைப்படி அமல் செய்வதற்கும் அதனைத் தமது வாழ்வில் மலரச் செய்வதற்கும் அதிகம் தேவை உடையவர்கள் இவர்களே ஆவர்!

وَاصْبِرْ نَفْسَكَ مَعَ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدَاةِ وَ الْعَشِيِّ ، يُرِيْدُوْنَ وَجْهَهُ وَلاَ تَعْدُوْ عَيْنَاكَ عَنْهُمْ تُرِيْدُ زِيْنَةَ الْحَيَاةِ الـــدُّنْيَا وَلاَ تُطِعْ مَنْ أَغْفَلْنَا قَلْبَهُ عَنْ ذِكْرِنَا وَ اتَّبَعَ هَوَاهُ وَ كَانَ أَمْرُهُ فُرُطًا

"எவர்கள் தம் இறைவனின் உவப்பை நாடி காலையிலும் மாலையிலும் அவனை அழைக்கிறார்களோ அவர்களுடன் சேர்ந்து இருப்பதில் உமது மனத்தைத் திருப்திக்கொள்ளச் செய்வாயாக. ஒருபோதும் உமது பார்வையை அவர்களை விட்டும் திருப்பவேண்டாம். இவ்வுல வாழக்கையின் அலங்காரத்தை நீர் விரும்புகிறீரா என்ன? நம்மை நினைவு கூர்வதை விட்டும் எவனது இதயத்தைப் நாம் பராமுகமாக்கி விட்டோமோ - எவன் தன் இச்சைப்படி வாழும் போக்கை மேற்கொண்டிருக்கிறானோ -எவன் தன்னுடைய செயல் முறைகளில் வரம்பு மீறிப்போய் கொண்டிருக்கிறானோ அவனுக்கு நீர் கட்டுப்படாதீர்" [38]

இதுவே - அதாவது, வாழ்க்கை வசதிகளைப் பெருக்கும் சாதனங்கள் மற்றும் வெளிரங்க சக்திகள் ஆகியவற்றைக் காட்டிலும் இறைநம்பிக்கைக்குக்கும் நற்செயல்களுக்கும் அல்லாஹ்வுடனான ஆன்மீகத் தொடர்புக்கும் முன்னுரிமை கொடுப்பதுதான் - வாழ்க்கை வசதிகளைப் பெருக்கும் சாதனங்கள் மற்றும் வெளிரங்க சக்திகளுக்கு எதிராகவும் உலகாதயம் எனும் சடத்துவக்கொள்கைக்கும் அதன் முன்னோடிகளுக்கும் எதிராகவும் போராடுவதுதான் - உலக வாழ்க்கையின் அலங்காரங்களையும் அதன் சுகபோகங்களையும் தாழ் வாகக் கருதுவதுதான், குகைத்தோழர்களுக்கு மட்டுமல்ல ஒவ்வொரு காலத்திலும் வாழும் இறைநம்பிக்கையும் ஞானமும் பெற்று வாழும் மக்கள் அனைவருடையவும் செயல்திட்டமாக இருந்து வருகிறது. இதுதான் சூரத்துல் கஹ்ஃபின் அழைப்பு! குர்ஆனின் அறைகூவல்!

وَلاَ تَمُدَّنَّ عَيْنَيْكَ اِلى مَا مَتَّعْنَا بِهِ أَزْوَاجًا مِنْهُمْ زَهْرَةَ الْحَيَاةِ الدُّنْيَا لِنَفْتِنَهُمْ فِيْهِ، وَرِزْقُ رَبِّكَ خَيْرٌ وَ اَبْقَى

"மேலும் நாம் அவர்களின் பல்வேறு பிரிவினர்க்கு வழங்கியிருக்கும் உலக வாழ்க்கையின் சுகபோகங்களை நீர் ஏறிட்டும் பார்க்காதீர். அவர்களைச் சோதிப்பதற்காகவே அவற்றை நாம் அவர்களுக்கு வழங்கியுள்ளோம். உம் இறைவன் வழங்கும் வாழ்வாதாரமே சிறந்ததும் நிலையானதும் ஆகும்" [39]

இந்த இலக்கை மையமாகக்கொண்டுதான் இந்தக் குகை அத்தியாயம் சுழன்று வருகிறது. ஒவ்வொரு திருப்பத்திலும் அதன் பக்கமே சுட்டிக்காட்டுகிறது!

## உலகாயதத் தலைவர்களுக்கே
## கண்ணியம் அளிக்கும் கலாச்சாரம்

மேலே சொன்ன இந்தக் கருத்தையும் இந்த உயிரோட்டத்தையும் உலகாயதக் கலாச்சாரம் (இதன் தற்போதைய தெளிவான பெரும் வடிவத்திற்கு தஜ்ஜாலியக் கலாச்சாரம் என்றும் சொல்லலாம்) நேருக்கு நேர் எதிர்க்கிறது. முற்றிலும் நேர் முரணான திசையிலேயே செல்கிறது.

ஆம், இந்த தஜ்ஜாலியக் கலாச்சாரம் நிலைகொண்டிருப்பதே உலகாயதம் எனும் சடத்துவக்கொள்கையையும் அதன் தலைவர்களையும் புனிதப்படுத்துவதன் மீதுதான்! அவர்களுக்குக் கண்ணியமும் கௌரவமும் அளிப்பதன் மீதுதான்!

இந்தக் கலாச்சாரத்தின் தத்துவமும் இலக்கியமும் - கவிதை, கட்டுரை, நாவல், நாடகம், வரலாறு, செய்தித்துறை உள்ளிட்ட இலக்கிய வகைகள் அனைத்தும் அளவு கடந்து புகழ்ந்து கொண்டிருப்பது, பெரும் பெரும் முதலாளிகளையும் கோடீஸ்வரர்களையும் உலகாயதச் செல்வாக்கு உடையவர்களையும்தான்! அரசியல் மற்றும் பொருளாதார சக்திகளை கைவசப்படுத்தியிருக்கும் தலைவர்களைத்தான் அளவு கடந்து புகழ்ந்து கொண்டிருக்கிறது! அத்தகைய தலைவர்களைக் கடவுளாக்குவதற்கும் தன்னிகரற்ற - உயர் அந்தஸ்துக்கும் மேலே அவர்களை உயர்த்துவதற்கும் முயன்று கொண்டிருக்கின்றது. அவர்களைப் பின்பற்றுமாறும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடிமைப்பட்டிருக்குமாறும் மக்களைத் தூண்டுகிறது இந்த உலகாயதக் கலாச்சாரம்!

---

[38] **சூரத்துல் கஹ்ஃப் 28**

[39] **சூரதத்துல் கஹ்ஃப் 131**

# இந்தக் கலாச்சாரத்தின் அடையாளம் மிகைப்படுத்தலும் தீவிரவாதமும்!

இறுதிக் கதி குறித்து அலட்சியப்போக்கு கொண்ட இந்தக் கலாச்சாரத்தைப் பற்றியும் அதனை முழுமையாக ஏற்றுக்கொண்டு அதன் கட்டளைக்கேற்ப செயல்படும் மனிதனைப் பற்றியும் பின்வரும் இந்த வசனத்தை விட அழகாகவும் தெளிவாகவும் எவரும் எடுத்துரைக்க முடியாது:

وَلاَ تُطِعْ مَنْ أَغْفَلْنَا قَلْبَهُ عَنْ ذِكْرِنَا وَ اتَّبَعَ هَوَاهُ وَكَانَ أَمْرُهُ فُرُطًا

"மேலும் நம்மை நினைவு கூர்வதை விட்டும் எவனது இதயத்தை நாம் பராமுகமாக்கினோமோ - எவன் தன் மனஇச்சைப்படி வாழும்போக்கை மேற்கொண்டிருக்கிறானோ -எவன் தன்னுடைய செயல்முறைகளில் வரம்பு மீறிப்போய்க் கொண்டிருக்கிறானோ அத்தகைய ஒருவனுக்கு நீர் கட்டுப்படாதீர்" [40]

வீண்விரயம், வீணாக்குதல், மிகைப்படுத்தல், தீவிரவாதம் ஆகியவை, இந்தக் கலாச்சாரத்தின் அடையாளமாகவும் அதனையும் அதனைப் பின்பற்றும் மனிதனையும் இனங்காட்டும் சின்னமாகவும் ஆகிவிட்டன. சம்பாத்தியத்தில் வீண்விரயம்! உற்பத்தியில் வீண்விரயம்! விளையாட்டிலும் பொழுதுபோக்கிலும் வரம்பு மீறல்! செலவு செய்வதிலும் வரம்புமீறல்! அரசியல் ரீதியான கருத்துகளிலும் நடுநிலை இழத்தல்! பொருளாதாரக் கருத்துகளிலும் நடுநிலை இழத்தல்!

ஒன்று, ஜனநாயகத்தில் மிகைப்படுத்தல்! அல்லது சர்வாதிகாரத்தில் மிகைப்படுத்தல்! அல்லது கம்யூனிஸத்தில் மிகைப்படுத்தல்! அல்லது தன்னால் அல்லது சக மனிதர்களால் உருவாக்கப்பட்ட சட்டங்கள், மரபுகள், அமைப்புகள், விழுமங்கள் ஆகியவற்றை அளவு கடந்து புனிதப்படுத்தல்! -எந்த அளவுக்கெனில், அவற்றில் இருந்து ரோமக்கால் அளவுகூட யாரும் விலகிச் செல்லக்கூடாது. அவ்வாறு விலகிச்செல்பவன் எவ்வளவு பெரிய குற்றவாளியாகக் கருதப்படுவான் எனில், அதற்குப் பிறகு அவன் எவ்விதச் சிறப்பிற்கும் மரியாதைக்கும் தகுதியுடையவனாகக் கருதப்படமாட்டான்!

இல்லையெனில், பேதமைமிக்க, குழப்பம் நிறைந்த ஒருவிதமான மனக்கிளர்ச்சி! சீரான அறிவுக்கும் நேரிய இயல்புணர்வுக்கும் முரணான, இயற்கையான மனித இயல்புக்கும் எதிரான ஒருவிதமான மனக்கிலேசம்! - ஒரு மனிதன் இத்தகைய மனநிலைக்குப் பலியாகிவிட்ட பிறகு நாகரிக மனிதர்களின் அணியிலிருந்து விலகி மிருகங்கள் மற்றும் கால்நடைகளின் அணியில் சேர்ந்து விடுகிறான்! [41]

அல்லது முதலாளித்துவத்தில் தீவிரமான போக்கு! இவ்வாறாக இந்த உலகாயதவாதியின் நிலை, ஒவ்வொரு விவகாரத்திலும் வரம்பு மீறியதாக ஆகிவிட்டது. அவன் தேர்ந்தெடுக்கும்-முன்னுரிமை கொடுக்கும் ஒவ்வொன்றிலும் அவன் ஈடுபடுகிற இயக்கங்கள்- அழைப்புகள் எல்லாவற்றிலும் அவனது நடைமுறை வரம்புமீறியதாகவே ஆகிவிட்டது! எந்த அளவுக்கெனில், நேர்மை, நடுநிலை, இருவிஷயங்களில் நடுநிலை வகித்தல் ஆகிய தன்மைகளுடன் மிகத் தூரமான தொடர்புகூட இந்த உலகாயதவாதியிடம் இருப்பதில்லை. இந்த அம்சங்கள் அனைத்தும் மக்கள் அனைவரினும் மிகக் குறைவாவே அவனிடம் இருக்கும்!

---

[40] **சூரத்துல் கஹ்ஃப் 28**

[41] **மிருகத்தனமான சுதந்திரம், ஆடைகளைக் களைதல், ஆண்களும் பெண்களும் கட்டுப்பாடின்றிப் பழகுதல் ஆகியவற்றின் பக்கம் அழைக்கக்கூடிய இயக்கங்கள் அமெரிக்கா மற்றும் ஐரோப்பா போன்ற நாடுகளில் உள்ளன. மேலே சொன்ன இந்தப் புதிய மனப்போக்கு அந்த இயக்கங்களிடம் மிகவும் வெளிப்படையாகக் காணப்படுகிறது. இறுதியாக இந்தப் போக்கு -நூலாசிரியர்கள் சிலர் ஹிப்பிகள் (Hippies) எனப் பெயரிடுகின்ற ஐரோப்பிய இளைஞர்களிடம் வெளிப்படையாக உள்ளது. உண்மையாதெனில், உலகாயத வாந்திப் பேதி, அமைதியின்மை, சிந்தனைத் தடுமாற்றம், மனக்கலக்கம், நிராசை ஆகியவற்றினால் பீடிக்கப்பட்ட ஒவ்வொரு கலாச்சாரத்திடமும் இந்தப் புதிய மனக்கிலேசம் எடுப்பாகக் காணப்படு கிறது! இதுபோன்ற மனக்கிலேசம் ஒரு காலத்தில் கிரேக்க நாட்டிலும் ரோமா புரியிலும் இருந்துள்ளது. மேலும் விவரத்திற்கு- அஃப்லாத்தூன் எழுதிய ஜனநாயகம் எனும் நூலைப் பார்க்கவும். அதில் அவர் தனது காலத்திய ஐரோப்பிய இளைஞனின் நிலை குறித்து அழகாகப் படம் பிடித்துக்காட்டுகிறார். மேலும் முஸ்லிம்களின் வீழ்ச்சியினால் இவ்வுலகம் இழந்தது என்ன? என்ற நமது நூலில் அஃப்லாத்தூன் என்னும் தலைப்பைப் பார்க்கவும். (பக்கம் 177 பதிப்பு 8)**

# இஸ்லாமியக் கலாச்சாரத்தின் தனித்தன்மை நேர்மையும் நடுநிலையுமே!

நபித்துவப் போதனைகளில் இருந்து எந்த ஒருவாழ்க்கைமுறை வார்க்கப்படுகிறதோ அந்த வாழ்க்கை முறை, நேர்மை மற்றும் நடுநிலை உடையது என்றே வர்ணிக்கப்படுகிறது.

وَالَّذِيْنَ اِذَا أَنْفَقُوْا لَمْ يُسْرِفُوْا وَلَمْ يَقْتُرُوْا وَكَانَ بَيْنَ ذَلِكَ قَوَامًا

“மேலும் அவர்கள் செலவுசெய்தால் வீண்விரயமும் கஞ்சத்தனமும் செய்யமாட்டார்கள். அவர்கள் செலவு செய்வது, அவ்விரண்டுக்கும் மத்தியில் - நடுநிலையாக இருக்கும்” [42]

இந்த குர்ஆனிய சமுதாயத்தினரை நடுநிலையாளர்கள் என்றே அல்லாஹ் வர்ணிக்கிறான்.

وَكَذَلِكَ جَعَلْنَاكُمْ أُمَّةً وَسَطًا لِتَكُوْنُوْا شُهَدَاءَ عَلَى النَّاسِ وَيَكُوْنَ الرَّسُوْلُ شَهِيْدًا عَلَيْكُمْ

“மேலும் இவ்வாறே நாம் உங்களை எல்லாவிதத்திலும் நடுநிலையான சமுதாயமாக ஆக்கினோம். நீங்கள் மக்கள் மீது சாட்சியம் அளிப்பவர்களாய்த் திகழ்ந்திட வேண்டும்., மேலும் இறைத்தூதர் உங்கள் மீதுசாட்சியம் அளிப்பவராய்த் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக” [43]

நபி (ஸல்) அவர்கள் நடுநிலைப் பண்பில் முழுமையான முன்மாதிரியாக வாழ்ந்து சென்றுள்ளார்கள். [44]

மேலும் இந்த இஸ்லாமிய சன்மார்க்கத்தைக் குறித்து சத்தியத்தில் நிலைத்திருத்தல் மற்றும் நடுநிலையைக் கடைப்பிடித்தல் ஆகியவற்றைக்கொண்டும் மேலும் குறைபாடு - மிகைபாடு இரண்டை விட்டும் தூரமாகும் தன்மையைக் கொண்டும் வர்ணிக்கிறான். ஓரிடத்தில் **கய்யிம்,** மற்றோரிடத்தில் **கியம்** எனும் வார்த்தைகளைப் பயன்படுத்தியுள்ளான். நபியவர்களை அழைத்து ஓரிடத்தில் கூறுகிறான்:

قُلْ اِنَّنِى هَدَانِى رَبِّى اِلَى صِرَاطٍ مُسْتَقِيْمٍ دِيْنًا قِيَمًا مِلَّةَ اِبْرَاهِيْمَ حَنِيْفًا وَمَا كَانَ مِنَ الْمُشْرِكِيْنَ

“(நபியே) கூறுவீராக: நிச்சயமாக என் இறைவன் எனக்கு நேரான வழியைக் காண்பித்துவிட்டான். அது கோணல் இல்லாத - முற்றிலும் சீரான மார்க்கம். ஒருமனப்பட்டவரான இப்ராஹீம் கடைப்பிடித்து வந்தவழி. அவர் ஒருபோதும் இறைவனுக்கு இணை வைத்து வணங்குவோரில் ஒருவராக இருக்கவில்லை” [45]

வேறோர் இடத்தில்,

ذَلِكَ الدِّيْنُ الْقَيِّمُ

“இதுதான் சீரான - செம்மையான மார்க்கமாகும்” [46] இன்னோர் இடத்தில்,

فَأَقِمْ وَجْهَكَ لِلدِّيْنِ الْقَيِّمِ

---

[42] **சூரத்துல் ஃபுர்கான் 67**

[43] **சூரத்துல் பகறா 143 – அல் மதாரிக் எனும் தஃப்ஸீரில் உள்ளது: தொழுகையில் நீங்கள் முன்னோக்கும் கிப்லா – திசையை கிழக்கிற்கும் மேற்குக்கும் நடுநிலைப்பட்டதாக நாம் ஆக்கியிருப்பதைப் போன்று உங்களை மிகைப்பாடும் குறைப்பாடும் இல்லாத நடுநிலையான சமுதாயமாக ஆக்கியுள்ளோம். பக்கம் 47**

**அல் ஃகாஸின் தஃப்ஸீரில் உள்ளது: இதன் பொருள், மிகைப்பாடும் குறைப்பாடும் இல்லாத நடுநிலையானதொரு மார்க்கத்தைப் பெற்றவர்கள் என்பதாகும். பாகம் 1 பக்கம் 108**

[44] **நபி(ஸல்) அவர்களின் பண்பாட்டை நபிமொழித் தொகுப்புகளிலும் நபிவரலாற்று ஏடுகளிலும் படியுங்கள். எல்லா விவகாரங்களிலும் நடுநிலையைத் தேர்ந்தெடுக்குமாறு அவர்கள் நவின்ற அறிவுரைகளையும் போதனைகளையும் படியுங்கள். அலீ (ரலி) அவர்களும் ஏனைய தோழர்களும் அறிவித்துள்ளார்கள்:**

عن علي ابن ابي طالب وغيره : كان النبي ﷺ معتدل ألأمر غير مختلف لا يقصر عن الحق ولا يجاوزه وقال: ما خير بين أمرين الا ا ختار أيسرهما

**“நபி(ஸல்) அவர்கள் எப்பொழுதும் நடுநிலைப் பண்பினராகவே திகழ்ந்தார்கள். உண்மையைக் குறைவு செய்யவும் மாட்டார்கள். அதனை மீறவும் மாட்டார்கள். மேலும் சொன்னார்கள்: நபி (ஸல்) அவர்களிடம் இரு விஷயங்களில் ஒன்றைத் தேர்வு செய்யுமாறு சொல்லப்பட்டால் இலகுவானதையே தேர்வு செய்வார்கள்!” (நூல்: திர்மிதி இமாம் அவர்களின் ஜு ஸ்வுஷ் ஷமாயில்)**

[45] **சூரத்துல் அன்ஆம் 161**

[46] **சூரத்துத் தௌபா 36 சூரத் யூசுப் 40 சூரத்துர் ரூம் 30**

"(நபியே) உமது முகத்தை இந்த நேரிய மார்க்கத்தின் பக்கம் நிலைப்படுத்தி வைப்பீராக"[47]

இவ்வாறே தனது வேதத்தை செம்மையானது என்றும் கோணலோ வழிபிறழலோ இல்லாதது என்றும் அல்லாஹ் வர்ணிக்கிறான். இந்த குகை அத்தியாயத்தின் தொடக்கத்தில் அல்லாஹ் கூறுகிறான்:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَنْزَلَ عَلَي عَبْدِهِ الْكِتَابَ وَلَمْ يَجْعَلْ لَهُ عِوَجًا، قَيِّمًا لِّيُنْذِرَ بَأْسًا شَدِيْدًا مِّنْ لَّدُنْهُ وَيُبَشِّرَ الْمُؤْمِنِيْنَ الَّذِيْنَ يَعْمَلُــوْنَ الصّٰلِحَاتِ اَنَّ لَهُمْ اَجْرًا حَسَنًا مَاكِثِيْنَ فِيْهِ أَبَدًا .وَ يُنْذِرَ الَّذِيْنَ قَالُوْا اتَّخَذَ اللهُ وَلَدًا. مَالَهُمْ بِهِ مِنْ عِلْمٍ وَلاَ لآبَائِهِمْ .كَبُرَتْ كَلِمَةً تَخْرُجُ مِنْ أَفْوَاهِهِمْ اِنْ يَّقُوْلُوْنَ اِلاَّ كَذِبًا

"புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே. அவனே தன் அடியார் மீது இந்த வேதத்தை இறக்கி யருளினான். இதில் எவ்விதக் கோணலையும் அவன் வைக்கவில்லை. இது முற்றிலும் செம்மையானது. (இதை இறக்கியருளியது) எதற்காகவெனில், அல்லாஹ்விடம் இருந்து கடுமையான வேதனை குறித்து எச்சரிக்கை செய்வதற்காகவும் இறைநம்பிக்கையுடன் நற்செயல்கள் புரிவோருக்குத் திண்ணமாக நற்கூலி உண்டென்றும் அதில் அவர்கள் என்றென்றும் தங்கியிருப்பார்கள் என்றும் நற்செய்தி அறிவிப்பதற்காகவும்தான்! மேலும் 'அல்லாஹ் மகனை ஏற்படுத்திக்கொண்டான்' என்று கூறியவர்களை எச்சரிக்கை செய்வதற்காகவும்தான்! அது பற்றி எவ்வித ஞானமும் அவர்களிடமும் இல்லை., அவர்களின் மூதாதையர்களிடமும் இல்லை. அவர்களது வாயிலிருந்து வெளிப்படுகிற வார்த்தை எத்துணை கொடியது! அவர்கள் கூறுவது பொய்யே அன்றி வேறில்லை" மற்றோர் இடத்தில்,

رَسُوْلٌ مِنَ اللهِ يَتْلُوْ صُحُفًا مُطَهَّرَةً ، فِيْهَا كُتُبٌ قَيِّمَةً

"அல்லாஹ்விடம் இருந்து வந்த ஒரு தூதர்., அவர் தூய்மையான வேத நூல்களை ஓதிக்காண்பிக்கிறார். அவற்றில் முற்றிலும் நேர்மையான - நிலையான சட்டங்கள் எழுதப்பட்டுள்ளன"[48] - பிறிதோர் இடத்தில்,

قُرْآنًا عَرَبِّيًا غَيْرَ ذِیْ عِوَجٍ لَعَلَّهُمْ يَتَّقُوْنَ

"(அந்த வேதம் எப்படிப்பட்டதெனில்) அது அரபி மொழியிலுள்ள குர்ஆன்., எவ்விதக் கோணலும் இல்லா தது. (இதனை நாம் இறக்கியருளியது) தீய கதியிலிருந்து இவர்கள் தப்பித்துக் கொள்வதற்காகத்தான் "[49]

ஆக, சத்தியத்தில் நிலைத்திருத்தலின் ஜீவன் - நேர்மையின் உயிரோட்டம் இந்த இறைமார்க்கத்தில் ஊடுருவி நிற்கிறது. அதன் நாடிநரம்புகள் வரையில் பாய்ந்திருக்கிறது. அதன் நெறிமுறைகள், சட்டங்கள், அதன் நாகரிம், பண்பாடு அனைத்தின் மீதும் ஆட் கொண்டுள்ளது என்பதில் எவ்வித ஐயமும் இல்லை!

இதற்கு நேர்மாறாக, எந்த உலகாயத நாகரிகம் ஐரோப்பாவில் தோன்றியதோ -சமயங்கள், ஒழுக்கங்கள், நெறிமுறைகள் ஆகிய வற்றிற்கு எதிராக கிளர்ச்சி மேற்கொள்ளப்பட்ட காலகட்டத்தில் ஐரோப்பா ஈன்றெடுத் ததோ அந்த நாகரிகம், தோன்றிய நாள் முதலே நடுநிலைப்பண்பை இழந்துள்ளது. அதன் நெறிமுறைகளி லும் வாழ்க்கைத் திட்டங்களிலும் மிகைப்பாடு! தீவிரம்! அதன் தத்துவத்திலும் சிந்தனையோட்டத்திலும் வழிபிறழ்தல்! கோணல்! அது அளிக்கும் கல்விகளில்-பண்பாட்டில் நெடியபோக்கு! மிகையான நிலை! அதன் அனைத்து விதமான கருத்துகளிலும் சிரமமான, நீளமான போக்கிற்கு முன்னுரிமை கொடுக்கும் அவலம்!

இதேபோன்றதொரு கலாச்சாரத்தில் இயல்புகள் சீர்கெட்டுப் போய் விடுகின்றன., அறிவு சத்தியத்தின் மீது நிலைத் திருப்பதை இழந்து விடுகிறது., மனித வாழ்க்கை தாராள நிலையையும் இலகுவையும் தொலைத்து விடுகிறது., மனித சமுதாயங்கள் ஒற்று மையையும் நேசபாசத்தையும் பறிகொடுத்து விடுகின்றன என்றால் அதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை!

## இரு தோட்டங்கள் உடைய செல்வந்தனின் கதை

இப்பொழுது இரு தோட்டங்கள் உடைய செல்வந்தனின் கதையைத் தொடங்குகிறோம். இது நமது அன்றாட வாழ்வில் முந்தைய கதையைவிட அதிகம் நிகழக்கூடியதாகும். 'குகைத் தோழர்களின் சரிதை' பல

[47] **சூரத்துர் ரூம் 43**

[48] **சூரத்துல் பய்யினா 2 -3**

[49] **சூரத்துஸ் ஸு மர் 28**

நூறு ஆண்டுகளுக்குப் பிறகுதான் மீண்டும் ஒருமுறை நிகழலாம். ஆனால் இந்தச் செல்வந்தனின் கதையோ எல்லாக் காலங்களிலும் - எல்லா இடங்களிலும் நடைபெற்று வருவதைக் காணலாம்.

எல்லா விதத்திலும் நற்பாக்கியம் பெற்று வாழ்ந்து கொண்டிருந்த ஒரு மனிதனின் கதை இது. இன்பத்திற்கும் மகிழ்வுக்கும் உரிய அனைத்துச் சாதனங்களும் அவனிடம் நிறைந்திருந்தன. இனிமையான, சுவை மிகுந்த இருதிராட்சை தோட்டங்கள். அவற்றைச் சுற்றிலும் அடர்த்தியாய் வளர்ந்திருந்த பேரீட்சை மரங்கள். நடுவில் அழகாகக் காட்சி அளித்துக்கொண்டிருந்த கழனிகள்! இவையாவும் அவனுக்குச் சொந்தம்! நடுநிலையான வாழ்க்கைத் தரத்திலேயே மிக உச்சபட்சமான அருட்பேறுகளும் மகிழ்வும் நிறைந்து வழியும் நிலையாகும் இது. நடுநிலையான வாழ்க்கையே உலகின் எல்லா விஷயங்களிலும் ஓர் உரைகல்லாகத் திகழ்கிறது!

இந்தச் செல்வந்தன் பெற்றிருந்த நற்பேறுகள் இவ்விரு தோட்டங்கள் மட்டுமல்ல. எல்லா விதமான வாழ்க்கைச் சாதனங்களும் அவனது கைவசம் இருந்தன. மேலும் அவ்விரு தோட்டங்களும் மிகச் சிறந்த விளைச்சலையும் பலன்களையும் அவனுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தன.

كِلْتَا الْجَنَّتَيْنِ آتَتْ اُكُلَهَا وَ لَمْ تَظْلِمْ مِنْهُ شَيْئًا وَ فَجَّرْنَا خِلاَلَهُمَا نَهْرًا

“அவ்விரு தோட்டங்களும் நல்ல விளைச்சலைக் கொடுத்துக் கொண்டிருந்தன. அதில் எவ்விதக் குறையும் வைக்கவில்லை. மேலும் அவ்விருதோட்டங்களின் நடுவே (தண்ணீர் வசதிக்காக) நாம் ஒரு நதியையும் ஓடச் செய்திருந்தோம்” [50]

இவ்வாறு அவனிடம் நற்பேறுகள் நிறைந்திருந்தன. செழிப்புக்கும் மகிழ்ச்சிக்கும் உரிய அனைத்துச் சாதனங்களும் குவிந்திருந்தன!

## உலகாயதத்தின் இயல்பும் அதன் குறுகிய பார்வையும்

இந்தச் சூழ்நிலையில்தான் அந்தச் செல்வந்தனின் உள்ளத்தில் உலகாயதக் கண்ணோட்டம் பீரிட்டெழுகிறது. எத்தகைய கண்ணோட்டம்? ஆட்சியாளர்கள், அதிகார வர்க்கத்தினர், பணமுதலாளிகள், நிலஉடைமையாளர்கள், சமுதாயத் தலைமை மற்றும் உயர்பதவி வகிப்பவர்கள், கைவினைஞர்கள், தொழிலதிபர்கள், புதிய கண்டுபிடிப்பாளர்கள், யுத்தக் கப்பல்களையும் அழிவிலாழ்த்தும் ஆயுதங்களையும் வைத்திருப்பவர்கள் ஆகியோரின் உள்ளத்தில் பொங்கியெழுகின்ற அதே உலகாயதக் கண்ணோட்டம் அவனிடம் தோன்றியது. ஆம், இறைநம்பிக்கையாலும் சீரான விஷயஞானத்தாலும் அடக்க இயலாத - ஒழுக்கப் பயிற்சியாலும் கட்டுப்படுத்த முடியாத உலகாயத கண்ணோட்டம் அவனிடம் தலைதூக்கியது.

அந்தச் செல்வச்சீமான் தனக்குக் கிடைத்த இந்த நற்பேறுகள் -தனது கல்வி, விடாமுயற்சி, தனது திறமை மற்றும் விவேகத்தின் மூலம்தான் கிடைத்தன என்றே கருதினான். முன்பு மூஸா நபியின் பகைவன் காரூனும் இப்படித்தான் எண்ணினான். அவன் கூறினான்:

اِنَّمَا أُوْتِيْتُهُ عَلَى عِلْمٍ عِنْدِى

“இவை அனைத்தும் என்னிடமுள்ள அறிவினால்தான் எனக் குக் கிடைத்திருக்கின்றன” [51]

அந்தச் செல்வந்தனுக்கு ஒரு நண்பன் இருந்தான். அவன் ஓர்ஏழை. இதுபோன்ற நற்பேறுகள் அவனுக்கு இல்லை. அவனிடத்தில்தான் அந்தச்செல்வந்தன் பெருமை பேசினான். சிறிதும் கூச்சம் இன்றி வெளிப்படையாக இவ்வாறு கூறினான்:

أَنَا أَكْثَرُ مِنْكَ مَالاً وَ أَعَزُّ نَفَرًا

“நான் உன்னை விட அதிகச் செல்வமுடையவன்., ஆள் பலமும் என்னிடம் அதிகம்” [52]

ஒருதடவை அந்தச் சீமான் தனது செல்வச் செழிப்பின் பிறப்பிட மான, அதிகார பலத்தின் உறைவிடமாய்த் திகழ்ந்த தன்னுடைய இரு தோட்டங்களைக் கண்டு களிப்புறச் சென்றான். தன்னையும் மறந்து, தன்

---

[50] சூரத்துல் கஹ்ஃப் 33
[51] சூரத்துல் கஹ்ஃப் 78
[52] சூரத்துல் கஹ்ஃப் 34

இறைவனையும் மறந்து, மறைமுகமான காரணிகளையும் மறந்து, ஏழு வானங்களுக்கு அப்பாலிருந்து ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கும் இறைநாட்டத்தையும் மறந்து -

மனிதனுக்கும் அவனது உடைமைக்கும் மத்தியில், ஏன் அவனுக்கும் அவனது இதயத்திற்கும் மத்தியில் கூட குறுக்கீடு செய்யும் அளவு ஆற்றல் நிறைந்த அந்த இறைநாட்டத்தை ஒருகணம்கூட நினைத்துப் பார்க்காமல், அதிக ஆணவத்துடன் தனது தோட்டத்தினுள் நுழைகிறான். தனது நடத்தைக்கும் ஞானத்திற்கும் தனது பண்பாட்டுக்கும் ஆன்மாவுக்கும் அநீதி இழைத்துக்கொண்டு அங்கே செல்கிறான். அப்பொழுது குருட்டுத்தனமான இந்த உலகாயதச் சிந்தனை அறியாமைமிக்க அந்தச் சீமானின் நாவிலிருந்து வெளிப்படலாயிற்று.

நான் ஆண்டாண்டுகாலம் நிலைத்திருப்பேன்., என்னுடைய இரு தோட்டங்களும் நீடித்திருக்கும் என்று பிதற்றுகிறான். மரணத்திற்குப் பின் மனிதர்கள் எழுப்பப்படுவதை மறுக்கிறான். தனது நீடித்த நிலையான இன்ப வாழ்வு இவ்வுலகில் நிலைத்திருப்பது போன்று - மறுமை என்றோர் உலகம் இருந்தால் அங்கேயும் அது நீடிக்கவே செய்யும் என்று ஆணவத்துடனும் அறியாமையுடனும் கூறினான். அதனையே குர்ஆன் இவ்வாறு சுட்டிக்காட்டுகிறது:

وَدَخَلَ جَنَّتَهُ وَهُوَ ظَالِمٌ لِنَفْسِهِ قَالَ مَا أَظُنُّ أَنْ تَبِيْدَ هَذِهِ أَبَدًا وَمَا أَظُنُّ السَّاعَةَ قَائِمَةً

“பின்னர் அவன் தனது ஆன்மாவுக்கே அநீதி இழைத்தவாறு தனது தோட்டத்தினுள் நுழைந்தான். இத்தகைய வளமான தோட்டம் எப்பொழுதேனும் அழிந்துபோகும் என்று நான் எண்ண வில்லை., மேலும் மறுமை நாள் ஏற்படும் என்றும் நான் கருத வில்லை என்று கூறினான்” [53]

உலகில் எந்த மனிதர்கள் பாக்கியத்துடனும் அந்தஸ்துடனும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்களோ அத்தகைய மனிதர்களுள் நானும் ஒருவன் என்றும் நற்கதி எப்பொழுதும் எங்களுக்கு நம்பிக்கை துரோகம் செய்திடாது., விதியும் எங்கள் விஷயத்தில் வாக்கு மாறாது என்றும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் பாக்கியத்தின் உச்ச நிலையில்தான் - உயர் அந்தஸ்தில்தான் நாங்கள் இருப்போம் என்றும் அவன் கருதலானான். அவன் கூறியதை குர்ஆன் இவ்வாறு சுட்டிக்காட்டுகிறது:

وَلَئِنْ رُدِدْتُّ اِلَى رَبِّى لَاَجِدَنَّ خَيْرًا مِنْهَا مُنْقَلَبًا

“ஒருவேளை நான் என் இறைவனின் பக்கம் திரும்பக் கொண்டு செல்லப்பட்டாலும்(எனக்கு என்ன ஏற்பட்டுவிடப்போகிறது? அங்கேயும்) இதனை விடச் சிறந்த இருப்பிடமே கிடைக்கப் பெறுவேன்” [54]

ஆம், இவனைப் போன்றவர்கள் நினைத்துக் கொண்டிருப்பது என்ன தெரியுமா? ஈமான் - இறைநம்பிக்கை, நல்லமல் புரிதல், கஷ்டப்பட்டு உழைத்தல் என எதுவும் தேவை இல்லை. இயற்கையான நற்பாக்கியங்கள்தான் நம்மிடம் உள்ளன. அவை எல்லாக் காலங்களிலும் இன்ப வாழ்வையும் மகிழ்வையும் தங்களுக்குத் தயார் செய்து கொடுக்கின்றன என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்!

## ஈமானியச் சிந்தனை!

இந்தச் செல்வந்தனின் நண்பனுடைய இதயத்தில் இறை நம்பிக்கையையும் சத்திய ஞானத்தையும் அல்லாஹ் அருளியிருந்தான். அவன் ஏழ்மையில்தான் வாழ்ந்தான் என்றாலும் இறைவனைப் பற்றிய ஞானம் எனும்-அவனுடைய தன்மைகள், செயல்கள் பற்றிய ஞானம் எனும் நீங்காத செல்வம் அவனிடம் இருந்தது.

அந்த இறைவன்தான் இந்தப் பேரண்டத்தை நிர்வகிப்பவன். அவனே இயற்கைக் காரணிகளைப் படைத்தவன். தனது விருப்பப்படி காரியங்களை மாற்றி அமைப்பவன் எனும் உண்மையை அந்த நண்பன் புரிந்திருந்தான். அதனால்தான் அந்தச்செல்வந்தனின் விவேகமற்ற பேச்சையும் உலகாயதச் சிந்தனையையும் ஆட்சேபிக்கலானான். ஆரம்பத்தில் எதிலிருந்து அவன் படைக்கப்பட்டான் எனும் உண்மை நிலையை அவனுக்கு உணர்த்தினான்.

இது மிகவும் கசப்பான ஓர் உண்மை. வெளித்தோற்றத்தை நம்பி ஏமாந்து தங்களைப் பெரும் பாக்கியசாலிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கும் உலகாயதவாதிகள் இவ்வுண்மையை முற்றிலும் மறந்திடவே விரும்புகிறார்கள். அதனை நினைத்துப் பார்ப்பதை விட்டும் ஓடுகிறார்கள்! அவனுடைய நண்பன் கூறியதை குர்ஆன் சுட்டிக்காட்டுகிறது:

---

[53] சூரத்துல் கஹ்ஃப் 35 -36

[54] சூரத்துல் கஹ்ஃப் 36

قَالَ لَهُ صَاحِبُهُ وَهُوَ يُحَاوِرُهُ أَكَفَرْتَ بِالَّذِى خَلَقَكَ مِنْ تُرَابٍ ثُمَّ مِنْ نُطْفَةٍ ثُمَّ سَوَّاكَ رَجُلاً

"அவனுடைய நண்பன் அவனோடு தர்க்கம் செய்தவாறு கூறினான்: உன்னை முதலில் மண்ணிலிருந்து, பின்னர் விந்தில் இருந்து படைத்து பிறகு உன்னை முழு மனிதனாக ஆக்கினானே அந்த இறைவனையா நீ நிராகரிக்கிறாய்?" [55]

- ஆம்! மனிதன் படைக்கப்பட்டதன் இந்த ஆரம்பநிலை செவியில் விழுவதென்பது - தற்பெருமை பிடித்துத் திரியும் முரடர்களுக்கு எவ்வளவு கசப்பாக உள்ளது!

அந்த ஏழை நண்பனோ, நான் இத்தகைய உலகாயதச் சிந்தனைக்கு நேர் எதிரான ஈமானியச் சிந்தனையில் சென்று கொண்டிருப்பதாக அந்தச் சீமானிடம் கூறினான்:

لَكِنَّا هُوَ اللهُ رَبِّى وَلاَ أُشْرِكُ بِرَبِّى أَحَدًا

"எனினும் அல்லாஹ்தான் என் இரட்சகன் (என்று நான் உறுதி கொள்கிறேன்) என் இரட்சகனுக்கு யாரையும் - எதனையும் நான் இணையாக்க மாட்டேன்" [56]

பின்னர் ஓர் அடிப்படை உண்மையை அவனுக்கு எடுத்துக் கூறினான். அதுவே இந்தக் குகைஅத்தியாயம் சுழன்று வரக்கூடிய மைய இலக்கு! அது தொடும் வீணைக் கம்பி!

அந்த உண்மை இதுதான்: இயற்கைக் காரணிகளுக்கு எந்த முக்கியமும் இல்லை. அவற்றைப் படைத்தவனும் - அவற்றின் உரிமையாளனுமாகிய இறைவன்தான் முக்கியம்! இன்ப வாழ்வையும் மகிழ்வையும் வழங்கிக் கொண்டிருக்கும் எந்த வாழ்க்கைச் சாதனங்களை அந்தச் செல்வச் சீமான் பெற்றுள்ளானோ - அவனுக்குப் பெருமிதம் ஊட்டுகின்றனவோ அவை அனைத்தும் இயற்கைக் காரணிகளால் உருவாக்கப்பட்டவை அல்ல. அல்லது அந்தச் செல்வந்தனின் கைகளால், அவனது அறிவாற்றலால் உருவாக்கப்பட்டவையும் அல்ல. அவை அனைத்தும் அல்லாஹ்வின் படைப்புகள். அவனே ஒவ்வொரு பொருளையும் மிக உறுதியான முறையில் படைத்தவன்!

இந்த உண்மையை அவனுக்கு எடுத்துரைத்து, அல்லாஹ் வின் படைப்புகளையும் அவனது ஆற்றலையும் ஏற்றுக்கொள்வதன் பக்கம் அவனது கவனத்தைத் திருப்பினான்., நன்றியும் புகழும் அவனுக்கே செலுத்த வேண்டும் என்று விவேகத்துடனும் மென்மை மயாகவும் அவனது கவனத்தை இவ்வாறு ஈர்த்தான் அந்த ஏழை நண்பன்!

وَلَوْ لاَ اِذْ دَخَلْتَ جَنَّتَكَ قُلْتَ مَا شَاءَ اللهُ لاَ قُوَّةَ اِلاَّ بِاللهِ

"நீ உனது தோட்டத்தினுள் நுழைந்தபொழுது மாஷா அல்லாஹ், லா குவ்வத்த இல்லா பில்லாஹ் (அல்லாஹ் நாடியதே நடைபெறும். அவனது துணைகொண்டே தவிர யாரும் எதுவும் செய்ய முடியாது) என்று ஏன் சொல்லவில்லை" [57]

## அத்தியாயத்தின் ஜீவனும்
## சரிதையின் திறவுகோலும்

அல்லாஹ் நாடியது நடைபெறும். அவனது துணை கொண்டே தவிர யாரும் - எதுவும் செய்ய முடியாது எனும் இந்த வசனம்தான் இந்த அத்தியாயத்தின் ஜீவன்! இந்தச் சரிதையின் திறவு கோல்!

இதற்கு முந்தைய வசனங்களில் - தன்னுடைய தூதருக்கும் குர்ஆனை ஓதுகிற ஒவ்வொருவருக்கும் அல்லாஹ் அறிவுரை வழங்கியிருந்தான். அதாவது, எதிர் காலத்தில் நடக்கும் எல்லா நடவடிக்கைகளையும் எல்லா ஆற்றல்களையும் - எதிர் காலத்தில் செய்ய நாடும் ஒவ்வொன்றையும் அல்லாஹ்விடம் ஒப்படைக்க வேண்டும்., மேலும் ஒவ்வொரு நாட்டத்தையும் உறுதியையும் அல்லாஹ்வின் நாட்டத்துடன் இணைத்தே சொல்ல வேண்டும் என்று கூறியிருந்தான். அந்த வசனம் இதுதான்:

وَلاَ تَقُوْلَنَّ لِشَيْءٍ اِنِّى فَاعِلٌ ذَلِكَ غَدًا اِلاَّ أَنْ يَشَاءَ اللهُ وَاذْكُرْ رَبَّكَ اِذَا نَسِيْتَ وَقُلْ عَسَى أَنْ يَهْدِيَنِ رَبِّى لِأَقْرَبَ مَنْ هَذَا رَشَدًا

---

[55] **சூரத்துல் கஹ்ஃப் 37**
[56] **சூரத்துல் கஹ்ஃப் 38**
[57] **சூரத்துல் கஹ்ஃப் 39**

“எந்தச் செயலைக் குறித்தும் நாளை அதனை நான் செய்து விடுவேன் என்று எப்பொழுதும் நீர் கூற வேண்டாம். (கூறியபடி எதுவும் உம்மால் செய்ய முடியாது) ஆனால் அல்லாஹ் நாடுவதே நடைபெறும். எனவே எப்போதாவது மறந்து நீர் அவ்வாறு சொல்லி விட்டால் உடனே உம் இறைவனை நினைவு கூரு வீராக. மேலும் - இது விஷயத்தில் இதனை விட நேர்மைக்கு நெருக்கமானவற்றின் பக்கம் என் இறைவன் எனக்கு வழிகாட்டலாம் என்றும் சொல்வீராக”[58]

இதன் அடிப்படையில் - நிகழும் அனைத்துக் காரியங்களின் சிறப்புகளையும், நாடும் அனைத்துக் காரியங் களின் நிறைவுகளையும் அல்லாஹ்வின் பக்கம் மட்டுமே சேர்க்கிற மனிதர் யாரோ - அல்லாஹ் நாடியதுதான் நடைபெறும்.,அவன் நாடினால்தான் நடைபெறும் என்று கூறுகிறவர் யாரோ - தான் நாடக்கூடிய - முக்கிய மாகக் கருதக்கூடிய ஒவ்வொறு விஷயத்திலும் இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்தான் நடைபெறும்) என்று கூறுகிறவர் யாரோ அப்படிப்பட்டவர் வெளிரங்க சக்திகளுக்கு எவ்வாறு அடிபணிவார்? எப்படி அவற்றைக் கடவுளாகக் கருதி வணங்குவார்? ‘பொருளுக்கும்’ அதை வசப்படுத்தி வைத்திருப்பவர்களுக்கும் எப்படி முக்கியத்துவம் கொடுப்பார்? தனது கடிவாளத்தை மனஇச்சையின் கையில் எப்படி ஒப்படைப்பார்?

மாஷா அல்லாஹ் - இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடி யதுதான் நடைபெறும். அல்லாஹ் நாடினால் தான் நடைபெறும்) என்கிற இந்த இரு வார்த்தைகளும் நாவுக்கு இலகுவானவைதான். எவ்வித உணர்வும் சிந்தனையுமின்றியே நாவு அவற்றை உச்சரிக்கும் அளவு எளிதானவைதான். ஆனாலும் இவை இரண்டும் கனமான, அர்த்தமுள்ள, பொருட்செறிவான வார்த்தைகளாகும். குருட்டுத்தனமான உலகாயதப் போக்கை எதிர்க்கக்கூடிய, மனதையும் மனஇச்சையையும் பின்பற்றுகிற கீழான போக்கை முறிக்கக்கூடிய வார்த்தை களாகும்.

## வெளிரங்க சக்திகள் மீது அதிக நம்பிக்கை வைக்கும் உலகாயதம்!

ஆனால் இந்த உலகாயத நாகரிகத்தின் தனித்தன்மையே தன்னிடமுள்ள வெளிரங்க சக்திகள் மீதும் சாதனங்கள் மீதும் அளவு கடந்து நம்பிக்கை வைப்பதுதான். இதோ! உலகாயதக் கொள்கையின் அடிப்படை யில் நிறுவப்படும் அரசுகள்,சமூக -நாகரிகப் பொருளாதாரத் திட்டங்களைத்[59] தீட்டவும் அறிவிக்கவும் செய்கின் றன. அவற்றில், இயற்கையின் ஒத்துழைப்புடனும் பருவகாலச் சமநிலை அமைப்புடனும் தொடர்புடைய திட்டங் கள் எவை என ஆராய்ந்து அவற்றைக்கூட எவ்வித ஐயமும் தங்குதடையுமின்றி - காலக் குறியீட்டுடன் பிரகட னப்படுத்துகின்றன. இந்தத் திட்டங்களின் மூலம் இத்தனை ஆண்டுகளுக்குள் இன்னின்ன நல்விளைவு களும் லாபங்களும் கிடைக்கும் என்றும் தங்களின் நாடுகள் தன்னிறைவு பெற்றுத்திகழும்., வெளி உதவியை எதிர்பார்த்திருக்க வேண்டிய தேவை இல்லை என்றும் உலகாயத அரசுகள் அறிவிக்கின்றன.

ஆனால் இறைநாட்டம் இத்தகைய திட்டங்களை தவிடு பொடியாக்கி விடுகிறது. திடீர் ஆபத்துகள் வந்து சூழ்கின்றன. உடைமைகளுக்கும் உயிர்களுக்கும் விளைச்சல்களுக்கும் பேரிழப்பு ஏற்படுகிறது. சில பொழுது பஞ்சம் வந்து வாட்டுகிறது. கற்பனையில்கூட உதித்திருக்காத இயற்கைச் சீற்றங்கள் திடீரென வந்து தாக்கு கின்றன. சில நேரத்தில், ஓரிடத்தில் மழை அடியோடு நின்றுவிடுகிறது! வேறிடத்தில் மழை கொட்டோ கொட் டெனக்கொட்டி வெள்ளப்பெருக்கு ஏற்படுகிறது! அணைகள் உடைகின்றன! இவ்வாறாக உலகாயத வாதிகளின் அனைத்து மதிப்பீடுகளும் தவறாகி விடுகின்றன. எல்லாத் திட்டங்களும் தோல்வியைத் தழுவுகின்றன!

## இறைவனை நம்புவதும் அவனையே சார்ந்திருப்பதும்

இந்த <u>இன்ஷா அல்லாஹ்வும்</u> அதை உச்சரிக்க வேண்டுமெனும் அறிவுரையும் - வாழ்க்கையின் சாதாரண மான பணிகளுக்காக மட்டும் அன்றாடம் நிகழும் சிறுசிறு நிகழ்ச்சிகளுக்காக மட்டும் உரியதல்ல. அதாவது நேர்முகங்கள், சந்திப்புகள், நேரம் குறித்தல்கள், பயணங்கள் போன்றவற்றிற்கு மட்டுமே பயன்படக் கூடியவை

---

[58] **சூரத்துல் கஹ்ஃப் 23 - 24**

[59] **திட்டங்கள் தீட்ட வேண்டியதில்லை., கல்விச் சாதனங்களின் அடிப்படையில் உற்பத்திப் பெருக்கத்திற்கான ஆய்வுகளை மேற்கொள்ள வேண்டியதில்லை என்ப தல்ல இதன் கருத்து. மாறாக நாம் சொல்ல வரும் கருத்து இதுதான்: உலகாயத சக்திகளின் பெருக்கமும் ஆய்வுகளும் நம்மை வரம்பு மீறுவோராய் ஆக்கி விடக்கூடாது. காரணங்களையும் அவற்றால் விளையும் காரியங்களையும் படைத்த எல்லாம் வல்ல அல்லாஹ்வின் கண்ணியமும் மகத்துவமும் நம் உள்ளத்திலிருந்து விடை பெற்றுச் சென்று விடக்கூடாது என்பதுதான்!**

அல்ல. மாறாக பெரும் பெரும் சமூகப் பணிகள், பிரமாண்டமான திட்டங்கள், தீர்க்கமான கடமைகள் போன்ற - முழுச் சமுதாய வாழ்விலும் தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய காரியங்களையும் இவை உள்ளடக்கும்.

எனவே இந்த அனைத்துக் காரியங்களும் எவ்வாறு அமைவது கடமையெனில், இறைநாட்டமே தீர்க்கமான தீர்ப்பை நல்கக்கூடியது., உறுதியான முடிவைத் தரக்கூடியது எனும் நம்பிக்கையின் கீழ் அமைவது கடமை. அதே நேரத்தில் திருக்குர்ஆன் -நபிமொழிகள் மற்றும் நபியவர்களின் வாழ்க்கை முன்மாதிரி, நபித் தோழர்கள் வாழ்ந்து காட்டிய வழிமுறை ஆகியவற்றின் அடிப்படை யில் நல்ல முயற்சிகளும் உழைப்புகளும் மேற்கொள்வது அவசியம். உறுதியான திட்டங்கள் தீட்டிச் செயல்படுவதும் அவசியம்.

وَلاَ تَقُوْلَنَّ لِشَيْءٍ اِنِّى فَاعِلٌ ذَلِكَ غَدًا اِلاَّ أَنْ يَشَاءَ اللهُ

“எந்தச் செயலைக் குறித்தும் நாளை அதனை நான் செய்து விடுவேன் என்று எப்பொழுதும் நீர் கூற வேண்டாம். (கூறியபடி எதுவும் உம்மால் செய்ய முடியாது) ஆனால் அல்லாஹ் நாடுவதே நடைபெறும்” - எனும் வசனம் தனி நபரை நோக்கி மட்டும் உரையாடக் கூடியதல்ல. மாறாக ஒவ்வொரு காலத்தின் சமூகங் கள், அரசுகள், அமைப்புகள் மற்றும் நிறுவனங்கள் ஆகிய அனைவரையும் நோக்கி உரையாடுகிறது. ‘இன்ஷா அல்லாஹ்’வைக் கடைப்பிடிக்குமாறு அனைவரையும் வேண்டுகிறது. இதுதான் ஈமான் எனும் இறைநம்பிக்கை ஊடுருவிப் பாய்ந்துள்ள இஸ்லாமியச் சமுதாயத்தின் ஜீவன்! மறைவான உண்மைகளை நம்புதல் எனும் கொள்கையின் மீது அமையப் பெற்ற கலாச்சாரத்தின் அடிப்படை! இதுதான் ஈமானியக் கலாச்சாரத்தையும் உலகாயதக் கலாச்சாரத்தையும் வேறுபடுத்திக் காட்டும் எல்லைக்கோடு!

ஒருதடவை அந்தச் செல்வந்தனிடம் - இறைநம்பிக்கையாளனாகிய அவனுடைய ஏழை நண்பன் இந்த உண்மையை உணர்த்து கிறான். அதாவது நற்பேறுகள் - நல்வாய்ப்புகளின் இந்த ஏற்ற தாழ்வுகள் நிரந்தர மானவை அல்ல. ஒருசிலருக்கு அதிகமாகவும் வேறு சிலருக்குக் குறைவாகவும் பகிர்ந்தளிக்கப்பட்ட இந்தப் பங்கீடு மாறாத ஒன்றல்ல., நிரந்தரமானதல்ல. இயற்கைக் காரணிகளின் கடிவாளமும் இவ்வுலகை ஆளுகிற அதிகாரமும் ஏக இறைவனின் கையிலிருந்து ஒருபோதும் நழுவக்கூடியதல்ல., என்றைக்கும் அவனது கையிலே தான் இருந்து கொண்டிருக்கும். துர்ப்பாக்கியசாலி சிலபொழுது நற்பாக்கியவானாக ஆகலாம். நற்பாக்கியசாலி சிலபொழுது துர்ப்பாக்கியவானாக ஆகலாம். பணக்காரன் ஏழையாகலாம். ஏழை, பணக்காரன் ஆகலாம். இவ்வாறு நிலைமைகள் மாற்றம் அடைவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அந்த ஏழை நண்பன் கூறினான்:

اِنْ تَرَنِ اَنَا أَقَلَّ مِنْكَ مَالاً وَ وَلَدًا فَعَسَى رَبِّى أَنْ يُؤْتِيَنِى خَيْرًا مِنْ جَنَّتِكَ وَ يُرْسِلَ عَلَيْهَا حُسْبَانًا مِنَ السَّمَاءِ فَتُصْبِحَ صَعِيْدًا زَلَقًا اَوْ يُصْبِحَ مَاءُهَا غَوْرًا فَلَنْ تَسْتَطِيْعَ لَهُ طَلَبًا

“நான் பொருட்செல்வத்திலும் மக்கட் செல்வத்திலும் உன்னை விடக் குறைந்தவனாக இருக்கிறேன் என்று நீ கருதினால்- என் இறைவன் உனது தோட்டத்தை விடச் சிறந்ததை எனக்கு அளித்திடக் கூடும். மேலும் உனது தோட்டத்தின் மீது வானத்திலிருந்து ஏதேனும் ஆபத்தை அனுப்பக்கூடும். அல்லது எந்த விதத்திலும் உன்னால் வெளிக் கொணர முடியாத அளவுக்கு அதன் தண்ணீர் வற்றிப்போய்விடக் கூடும்” [60]

- இறுதியில் அவ்விதமே ஆயிற்று! பசுமை நிறைந்து காட்சி அளித்த அவ்விரு தோட்டங்களையும் -அல்லாஹ் விடம் இருந்து அனுப்பப்பட்ட ஒரு புயற்காற்று தாக்கியது. எல்லாமே ஒரே வெட்டவெளியாகி விட்டது. அப்பொழுதுதான் ‘போதையில்’ ஆழ்ந்திருந்த அந்தச் செல்வச் சீமான் தெளிந்தான். குர்ஆன் சுட்டிக்காட்டுகிறது:

وَاُحِيْطَ بِثَمَرِهِ فَاصْبَحَ يُقَلِّبُ كَفَّيْهِ عَلَى مَا أَنْفَقَ فِيْهَا وَهِيَ خَاوِيَةٌ عَلَى عُرُوْشِهَا وَيُقُوْلُ يَا لَيْتَنِى لَمْ اُشْرِكْ بِرَبِّى أَحَدًا وَلَمْ تَكُنْ لَهُ فِيَةٌ يَنْصُرُوْنَهُ مِنْ دُوْنِ اللهِ وَمَا كَانَ مُنْتَصِرًا هُنَالِكَ الْوَلاَيَةُ للهِ الْحَقِّ هُوَ خَيْرٌ ثَوَابًا وَ خَيْرٌ عُقْبًا

“இறுதியில் அவனுடைய விளைபொருட்கள் எல்லாம் அழிக்கப்பட்டு விட்டன. அவனது திராட்சைத்தோட்டம் அதன் பந்தலில் குப்புற விழுந்து கிடந்ததைக்கண்டு, தான் அதில் முதலீடு செய்த தெல்லாம் வீணாகிவிட்டதே என்ற வருத்தத்துடன் தன் கைகளைப் பிசைந்து கொண்டு அவன் கூறலானான்: அந்தோ! நான் என் இறைவனுடன் எவரையும் இணைவைக்காமல் இருந்திருக்கக் கூடாதா என்று! - அல்லாஹ்வை விடுத்து அவ னுக்கு உதவி செய்வதற்கு எந்தக் கூட்டத்தாரும் இருக்கவில்லை. தானாகவே அந்த ஆபத்தைச் சமாளிப் பதற்கும் அவனால் இயலவில்லை. (அப்போதுதான் புரிந்தது:)காரியங்களை நிறைவேற்றிக்கொடுக்கும் அதிகா

---

[60] சூரத்துல் கஹ்ஃப் 39 - 40 - 41

ரம், உண்மையாளனாகிய அல்லாஹ்வுக்கே உரியது., அவனே சிறந்த பிரதிபலன் வழங்குபவன்., அவனிடமே சிறந்த முடிவு உள்ளது (என்பது)" [61]

## அந்தச் செல்வந்தனின் ஷிர்க் - இணைவைப்பு

இரு தோட்டங்களை உடைய இந்தச் செல்வந்தன், ஏனைய இணைவைப்பாளர்களைப் போல் ஒருவனாக இருக்கவில்லை. அதாவது சிலைவழிபாடு செய்பவன் அல்லன். அப்படி அறிவிக்கும் நேரடி வசனமோ சமிக்ஞையோ திருக்குர்ஆனில்இல்லை. மாறாக அவன் அல்லாஹ்வை ஏற்றுக்கொண்டிருந்தான். அல்லாஹ்வின் மீது ஒருவகையில் நம்பிக்கை வைத்திருந்தான் என்றே குர்ஆனின் கருத்துப் பாங்கு அறிவிக்கிறது. அவன் கூறுவதாக குர்ஆன் குறிப்பிடுவது இதுதான்:

وَلَئِنْ رُدِدْتُّ اِلَى رَبِّى لأَجِدَنَّ خَيْرًا مِنهَا مُنْقَلَبًا

"ஒருவேளை நான் என் இறைவனின் பக்கம் திரும்பக் கொண்டு செல்லப்பட்டாலும் (எனக்கு என்ன ஏற்பட்டு விடப்போகிறது? அங்கேயும்) இதனை விடச் சிறந்த இருப்பிடமே கிடைக்கப் பெறுவேன்" [62]

பிறகு என் இறைவனோடு எவரையும் இணைவைக்காமல் இருந்தேன் இல்லையே என்று கைகளைப் பிசைந்துகொண்டு அவன் கூறிய ஷிர்க் - இணைவைப்பு எது?

எவ்வித மறைவுமின்றி மிக வெளிப்படையாகத் தெரிவது என்ன வெனில், அவன் இயற்கைக் காரணிகளை இறைவனுடன் இணைவைத்துக் கொண்டிருந்தான். அவைதான் இவ்வுலகை ஆளுகிற சக்திகள் என்று நம்பிக் கொண்டிருந்தான். தன் செல்வச்செழிப்புக்கும் சுக வாழ்வுக்கும் உரிய சிறப்புகள் அனைத்தும் அவற்றையே சாரும் என்றும் கருதினான். அத்தகைய சக்திகளையே முழுமையாக அவன் சார்ந்திருந்தானே தவிர அல்லாஹ்வை மறந்தான். அவனது ஆற்றலையும் அதிகாரத்தையும் நிராகரித்தான்.

## இக்காலத்து இணைவைப்பு

இதுவே இன்றைய உலகாயதக் கலாச்சாரம் மேற்கொண்டிருக்கும் ஷிர்க். இந்தக் கலாச்சாரம் அல்லாஹ்வை நிராகரித்து விட்டு இயற்கைக் காரணிகளையும் உலகாயத சக்திகளையும் கலைச்சாதனங்களையும் கடவுளர் ஆக்கி விட்டது. கலைவல்லுனர்கள் எனும் **Specialists** - ஸ்பெஷலிஸ்டுகளை கடவுளின் அந்தஸ் துக்கு உயர்த்தி விட்டது. அவர்களின் செயலாட்சியின் கீழ்தான் இன்றைய மனிதன் தனது முழுவாழ்வையும் அமைத்துள்ளான். வாழ்வும் மரணமும் நற்பேறும் துர்ப்பேறும் முன்னேற்றமும் பின்னடைவும் அவர்களின் கை களில்தான் உள்ளன என நம்புகிறான்.

இவ்வாறு காரணிகளை வணங்குவதும் உலகாயதக் கொள்கைகளை - உலகிலுள்ள மறைமுக சக்திகளை வணங்குவதும் இயற்கையை வணங்குவதும் தனித்திறமை பெற்றுள்ள வல்லுனர்களை முழுக்க முழுக்க நம்புவதும் அல்லாஹ்வை விடுத்து அந்தத் திறமையாளர்களைக் 'கடவுளர்' ஆக்குவதும்தான் புதிய சிலைவழி பாட்டுக் கொள்கையாக - ஷிர்க்காக ஆகிவிட்டது. ஆம்! சிலையில்லாச் சிலைவணக்கம்! உலகில் தொன்று தொட்டு இருந்து வரும் சிலைவணக்கத்துடன் - எந்தச் சிலைவணக்கத்திடம் இன்றும்கூட மரபு வழிச்சொத்து கள், சின்னங்கள், அனுதாபிகள், ஆதரவாளர்கள் மற்றும் பிரச்சாரகர் என ஏராளம் உள்ளனரோ அத்தகைய பண்டைய சிலைவணக்கத்தோடு புதிதாகச் சேர்க்கப்பட்ட ஷிர்க்தான் - உலகாயதச் சக்தியை இறைவனோடு இணைவைக்கும் ஷிர்க்! இறைவனை நம்பும் கொள்கைக்கு எதிரான - அவனுக்கு அடிபணிந்து வாழ்வதற்கு முரணான வழிதவறிய ஷிர்க்கில் இது ஒரு புதுவகையான ஷிர்க்! குகைஅத்தியாயம் இத்தகைய ஷிர்க்கை - இணைவைப்பை எதிர்த்துத்தான் சவால் விடுகிறது., போராடுகிறது., கடுமையாகச் சாடுகிறது!

(உலகாயத வாதிகள் நிரந்தரமெனக் கருதிக்கொண்டிருக்கும்) இந்த உலக வாழ்க்கையை விரைவில் காய்ந்து பதராகிப் போகும் பயிராகச் சித்தரிக்கிறது குர்ஆன்:

وَاضْرِبْ لَهُمْ مَثَلَ الْحَيَاةِ الدُّنْيَا كَمَاءٍ أَنْزَلْنَاهُ مِنَ السَّمَاءِ فَاخْتَلَطَ بِهِ نَبَاتُ الأَرْضِ فَأَصْبَحَ هَشِيْمًا تَذْرُوْهُ الرِّيَاحُ وَكَانَ اللهُ عَلَى كُلِّ شَيْءٍ مُقْتَدِرًا

---

[61] சூரத்துல் கஹ்ஃப் 42 - 43 - 44

[62] சூரத்துல் கஹ்ஃப் 36

“(நபியே) இவர்களுக்கு உலக வாழ்க்கையின் உவமையை எடுத்துரைப்பீராக. இதன் உவமை (பூமியின் தாவரங்களைப் போன்றாகும்) எவ்வாறெனில், வானத்திலிருந்து நாம் மழையை இறக்கினோம். அதன் மூலம் பூமியின் தாவரங்கள் நன்கு அடர்த்தியாக வளர்ந்தன. பின்னர் எல்லாம் காய்ந்து, காற்றடித்துச் செல்லும் பதராகி விட்டது. இவ்வாறு எல்லாவற்றின் மீதும் அல்லாஹ் ஆற்றல் மிக்கவனாக இருக்கிறான்” [63]

அற்ப ஆயுசு உடைய -விரைவாக அழியக்கூடிய இவ்வுல வாழ்வை குர்ஆன் இவ்வாறே சித்தரித்துக் காட்டு கிறது மேலும் பல இடங்களில்:

إِنَّمَا مَثَلُ الْحَيَاةِ الدُّنْيَا كَمَاءٍ أَنْزَلْنَاهُ مِنَ السَّمَاءِ فَاخْتَلَطَ بِهِ نَبَاتُ الأَرْضِ مِمَّا يَأْكُلُ النَّاسُ وَالأَنْعَامُ حَتَّى إِذَا أَخَذَتِ الأَرْضُ زُخْرُفَهَا وَ ازَّيَنَتْ وَ ظَنَّ أَهْلُهَا أَنَّهُمْ قَادِرُوْنَ عَلَيْهَا أَتَاهَا أَمْرُنَا لَيْلاً أَوْ نَهَارًا فَجَعَلْنَاهَا حَصِيْدًا كَأَنْ لَمْ تَغْنَ بِالأَمْسِ كَذَلِكَ نُفَصِّلُ الآيَاتِ لِقَوْمٍ يَتَفَكَّرُوْنَ

“ (எந்த உலக வாழ்க்கையின் போதையில் மதி மயங்கி நமது சான்றுகள் குறித்து நீங்கள் அலட்சியமாக இருக்கிறீர்களோ) அந்த உலக வாழ்க்கையின் உதாரணம் இவ்வாறாகும். நாம் வானத்தில் இருந்து மழை நீரை இறக்கினோம். பின்னர் அதன் மூலம் மனிதர்களும் கால்நடைகளும் உண்ணக்கூடிய பூமியின் விளை பொருள்கள் அடர்த்தியாக வளர்ந்தன. இவ்வாறாக பூமி தன் அலங்காரத்தைப் பெற்றுக்கொள்ளத் தொடங்கி அழகுற காட்சி அளித்தது. அந்த விளைபொருள்கள் மீது தாம் சக்தி பெற்றுள்ளோம் என்று அவற்றின் உரிமையாளர்கள் எண்ணியிருந்தார்கள். இந்நேரத்தில் இரவிலோ பகலிலோ அவற்றின் மீது நமது கட்டளை வந்து அவற்றை அழித்தது. நேற்றைய தினம் எதுவும் அங்கு இருக்கவில்லை என்பது போல் அவற்றை வெறும் சருகுகளாய் நாம் ஆக்கிவிட்டோம். இவ்வாறு சிந்தித்துணரும் மக்களுக்கு நாம் அத்தாட்சிகளைத் தெளிவாக விளக்குகிறோம்” [64]

- இவ்வாறாக உலக வாழ்க்கையை - எந்த வாழ்க்கையை உலகாயத வாதிகள் நிரந்தரமெனக் கருது கிறார்களோ, உல்லாச விரும்பிகளும் சிற்றின்ப நேயர்களும் **(Epilureans)** எந்த வாழ்க்கையை வணங்கி வழிபடு கிறார்களோ அந்த வாழ்க்கையை குர்ஆன் இவ்வாறாகச் சித்தரித்துக் காட்டுகிறது! மேலும் குறுகிய கண் ணோட்டம் உடையவர்களும் வெளிரங்க சக்திகளுக்கு அடிமைப் பட்டிருப்பவர்களும்,வாழ்க்கைக்குரிய அளவு கோலாக- உரைகல்லாக எவற்றை நம்பி மதித்து, அவற்றிடம் பெரியபெரிய எதிர்பார்ப்புகளை எல்லாம் வைத்திருக்கிறார்களோ அவை தவறான அளவுகோல் எனக் திருக்குர்ஆன் கூறுகிறது. அத்தகைய அளவு கோலைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு ஈமானிய உரைகல்லுக்கே - இறைநம்பிக்கையின் அளவுகோலுக்கே முன்னு ரிமை கொடுக்கிறது!

الْمَالُ وَ الْبَنُوْنَ زِيْنَةُ الْحَيَاةِ الدُّنْيَا وَ الْبَاقِيَاتُ الصَّالِحَاتُ خَيْرٌ عِنْدَ رَبِّكَ ثَوَابًا وَ خَيْرٌ أَمَلاً

“இந்தச் செல்வங்களும் பிள்ளைகளும் உலக வாழ்க்கையின் (நிலையற்ற)அலங்காரமேயாகும். நீடித்து நிற்கும் நல்ல அமல்கள்தான் உம் இறைவனிடம் பலனைப் பொறுத்தும் சிறந்தவையாகும். நல்ல எதிர்பார்ப் பைப் பொறுத்தும் சிறந்தவையாகும்” [65]

## இறைமறையின் பார்வையில் இவ்வுலக வாழ்க்கை

இவ்விடத்தில் சற்று நேரம் நாம் தாமதிப்போம். இவ்வுலக வாழ்க்கை குறித்து குர்ஆனின் கண்ணோட்டம் என்ன என்று ஆராய்வோம். இந்த விஷயத்தில் குர்ஆனை முன்னிறுத்துவதும் அதனிடம் கருத்து கேட்பதும் தான் நமக்கு நல்லது. ஏனெனில் இவ்வுல வாழ்வு குறித்து முஸ்லிம்களின் அறிவுகளும் சிந்தனைகளும் தடுமாறிப்போய் உள்ளன. இந்த வாழ்க்கையின் உண்மையான மதிப்பு என்ன, அந்தஸ்து என்ன என்பதில் ஆய்வாளர்களின் கருத்துகளும் சிதறிப்போய் உள்ளன!

குர்ஆன் மிகத் தெளிவாகவும் உறுதியுடனும் வெளிப்படையாகவும் அறிவித்துவிடுகிறது.,இவ்வுலக வாழ்வின் தற்காலிகத்தையும் தாழ்வு நிலையையும் - மறு உலகத்திற்கு எதிரில் அதன் மதிப்பின்மையையும்!

---

[63] **சூரத்துல் கஹ்பு 45**

[64] **சூரத்து யூனுஸ் 24**

[65] **சூரத்துல் கஹ்பு 46**

فَمَا مَتَاعُ الْحَيَاةِ الدُّنْيَا فِى الآخِرَةِ اِلاَّ قَلِيْلٌ

“உலக வாழ்க்கையின் இன்பங்கள் அனைத்தும் மறுமைக்கு எதிரில் எதுவுமே இல்லை., மிகச் சொற்பமே” [66]

وَمَا الْحَيَاةُ الدُّنْيَا اِلاَّ لَهْوٌ وَ لَعِبٌ وَاِنَّ الدَّارَ الآخِرَةَ لَهِيَ الْحَيَوَانُ لَوْ كَانُوْا يَعْلَمُوْنَ

“மேலும் இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும் வேடிக்கையுமே அன்றி வேறில்லை. நிலையாக வாழ்வதற்கான இல்லம் மறுமை இல்லம்தான்! அந்தோ! இவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமே” [67] இன்னோர் இடத்தில்,

اِعْلَمُوْا اَنَّمَا الْحَيَاةُ الدُّنْيَا لَعِبٌ وَلَهْوٌ وَ زِيْنَةٌ وَ تَفَاخُرٌ بَيْنَكُمْ وَ تَكَاثُرٌ فِى الأَمْوَالِ وَ الأَوْلاَدِ كَمَثَلِ غَيْثٍ أَعْجَبَ الْكُفَّارَ نَبَاتُهُ ثُـمَّ يَهِيْجُ فَتَرَاهُ مُصْفَرًّا ثُمَّ يَكُوْنُ حُطَامًا وَفِى الآخِرَةِ عَذَابٌ شَدِيْدٌ وِمَغْفِرَةٌ مِنَ اللهِ وَ رِضْوَانٌ وَ مَا الْحَيَاةُ الدُّنْيَا الاَّ مَتَاعُ الْغُرُوْرِ

“நன்கு அறிந்துகொள்ளுங்கள்: இவ்வுலக வாழ்க்கை (மறுமைக்கு எதிரில்) விளையாட்டும் வேடிக்கையும் வெளிப்பகட்டும் மற்றும் உங்களுக்கிடையே ஒருவருக்கொருவர் பெருமையடித்துக் கொள்வதும், செல்வங்கள் - குழந்தைகள் ஆகியவற்றில் ஒருவரை ஒருவர் முந்திட முற்படுவதுமே அன்றி வேறில்லை. (இதன் உவமை) எவ்வாறெனில் மழை பொழிந்து, அதன் மூலம் விளைகிற தாவரங்களைப் பார்த்து விவசாயிகள் மகிழ்ச்சி அடைவது போன்றது! பின்னர் அவை உலர்ந்து விடுகின்றன. அவை மஞ்சணித்துப் பதராகிப் போவதையும் நீர் காண்கிறீர். (இதற்கு மாறாக) மறுமையி (ன்நிலை யாதெனி)ல் கடும் தண்டனை உண்டு. இறைவனின் மன் னிப்பும் உவப்பும் உண்டு. ஆனால் உலக வாழ்க்கை வெறும் ஏமாற்றுச் சாதனமே அன்றி வேறில்லை” [68]

மேலும் குர்ஆன் இவ்வாறே தெளிவாகவும் உறுதியுடனும் - இவ்வுலக வாழ்வு மறுமைக்கான பாலம் என்றும் பணியாற்றும் கால அவகாசம் என்றும் அறிவிக்கிறது., மேலும் பல இடங்களில்!

اِنَّا جَعَلْنَا مَا عَلى الأَرْضِ زِيْنَةً لَّهَا لِنَبْلُوَهُمْ أَيُّهُمْ أَحْسَنُ عَمَلاً

“திண்ணமாக நாம் இப்பூமியின் மீதுள்ள அனைத்தையும் இப்புவி (வாழ்வு)க்கு அலங்காரமாக ஆக்கியுள் ளோம்., இவர்களில் யார் மிகச் சிறந்த செயலைச்செய்பவர் என்று சோதித்துப் பார்ப்பதற்காக ” [69] வேறோர் இடத்தில்,

اَلَّذِى خَلَقَ الْمَوْتَ وَالْحَيَاةَ لِيَبْلُوَكُمْ أَيُّكُمْ أَحْسَنُ عَمَلاً وَهُوَ الْعَزِيْزُ الْغَفُوْرُ

“அவனே மரணத்தையும் வாழ்கையும் படைத்தான்., உங்களில் யார் நல்லமல் புரியக்கூடியவர் என்று உங்களைச் சோதித் துப் பார்ப்பதற்காக! மேலும் அவன் யாவரையும் மிகைத்தவன். பெரும் மன்னிப்பாளன்” [70]

மேலும் மறு உலக வாழ்க்கையே சிறந்தது., நிலையானது என்று கூறுகிறது குர்ஆன்:

وَمَا الْحَيَاةُ الدُّنْيَا اِلاَّ لَعِبٌ وَ لَهْوٌ وَلَلدَّارُ الآخِرَةُ خَيْرٌ لِّلَّذِيْنَ يَتَّقُوْنَ اَفَلاَ تَعْقِلُوْنَ

“உலக வாழ்க்கை என்பது விளையாட்டும் வேடிக்கையுமே தவிர வேறில்லை. உண்மையில் எவர்கள் தீய நடத்தையைத் தவிர்க்க விரும்புகிறார்களோ அவர்களுக்கு மறு உலக இல்லைமே மிகச் சிறந்தது. (என்னே பரிதாபம்! இவ்வளவுகூட) நீங்கள் அறிந்து கொள்ளமாட்டீர்களா?” [71] மற்றோரிடத்தில்,

وَمَا اُوْتِيْتُمْ مِنْ شَيْءٍ فَمَتَاعُ الْحَيَاةِ الدُّنْيَا وَ زِيْنَتُهَا وَ مَا عِنْدَ اللهِ خَيْرٌ وَ أَبْقَى أَفَلاَ تَعْقِلُوْنَ

---

[66] **சூரத்துல் பராஆ 38**
[67] **சூரத்துல் அன்கபூத் 64**
[68] **சூரத்துல் ஹதீத் 20**
[69] **சூரத்துல் கஹ்ஃப் 7**
[70] **சூரத்துல் முல்க் 2**
[71] **சூரத்துல் அன்ஆம் 32**

“உங்களுக்கு வழங்கப்பட்டிருப்பவை யாவும் உலக வாழ்வின் இன்பச் சாதனங்களும் அலங்காரமும்தான். ஆனால் அல்லாஹ் விடம் உள்ளதே மிகச் சிறந்ததும் நிலையானதுமாகும். (இதனைக்கூட) நீங்கள் சிந்தித் துணர மாட்டீர்களா?” [72]

ஆகையால்தான் என்றென்றும் நிலையான, விரிவான, அசுத்தங்களை விட்டும் தூய்மையான, அபாயங்கள் இல்லாத மறுமை வாழ்க்கையைப் புறந்தள்ளிவிட்டு - அழியுந்தன்மைகொண்ட, தற்காலிகமான, நிம்மதியில்லாத, நிலைபாடற்ற இவ்வுலக வாழ்வுக்கு முன்னுரிமை கொடுப்பவர்களை இகழ்கிறது., இழித்துரைக்கிறது குர்ஆன்!

اِنَّ الَّذِيْنَ لاَ يَرْجُوْنَ لِقَاءَ نَا وَ رَضُوْا بِالْحَيَاةِ الدُّنْيَا وَاطْمَأَنُّوْا بِهَا وَالَّذِيْنَ عَنْ آيَاتِنَا غَافِلُوْنَ اُولئِكَ مَأوَاهُمُ النَّارُ بِمَا كَانُوْا يَكْسِبُوْنَ

“எவர்கள் நமது சந்திப்பை எதிர்பார்ப்பதில்லையோ மேலும் உலக வாழ்க்கையில் திருப்தி கொண்டு அதில் முழு நிம்மதியும் அடைந்தார்களோ மற்றும் எவர்கள் நமது சான்றுகள் குறித்து பராமுகமாக இருக்கி றார்களோ அத்தகையவர்களுக்கு (அவர்களின் தவறான கொள்கை - நடைமுறை மூலம்) அவர்கள் சம்பாதித் துக் கொண்டிருந்த தீமைகளின் காரணமாக நரகம்தான் புகலிட (மாகக்கிடைக்)கும்” [73] வேறோர் இடத்தில்,

مَنْ كَانَ يُرِيْدُ الْحَيَاةَ الدُّنْيَا وَزِيْنَتَهَا نُوَفِّ اِلَيْهِمْ أعْمَالَهُمْ فِيْهَا وَهُمْ لاَ يُبْخَسُوْنَ أُولَئِكَ الَّذِيْنَ لَيْسَ لَهُمْ فِى الآخِــرَةِ اِلاَّ النَّــارُ وَحَبِطَ مَا صَنَعُوْا فِيْهَا وَ بَاطِلٌ مَا كَانُوْا يَعْمَلُوْنَ

“எவர்கள் இவ்வுலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் விரும்புகிறார்களோ அவர்களுக்கு, அவர்களின் செயல்களுக்கேற்ற கூலியை இங்கேயே நாம் நிறைவாக அளித்து விடுகிறோம். அதில் அவர்களுக்கு எவ்விதக் குறைவும் செய்யப்பட மாட்டாது. ஆனால் இத்தகையவர்களுக்கு மறுமையில் நரக நெருப்பைத் தவிர வேறெதுவும் இல்லை. உலகில் அவர்கள் உருவாக்கியவை அனைத்தும் அடியோடு அழிந்து போய் விட்டன (என்பதும்) அவர்கள் செய்துகொண்டிருந்த செயல்கள் அனைத்தும் வீணானவையே (என்பதும் அங்கு அவர்களுக்குப் புரிந்துவிடும்)” [74] – வேறோர் இடத்தில்,

وَوَيْلٌ لِلْكَافِرِيْنَ مِنْ عَذَابٍ شَدِيْدٍ ، الَّذِيْنَ يَسْتَحِبُّوْنَ الْحَيَاةَ الدُّنْيَا عَلَى الآخِرَةِ وَ يَصُدُّوْنَ عَنْ سَبِيْلِ اللهِ وَ يَبْغُوْنَهَا عِوَجًا ، اُولَئِكَ فِى ضَلاَلٍ بَعِيْدٍ

“சத்தியத்தை நிராகரித்தவர்களுக்குக் கடுமையான தண்டனையினால் அழிவு உள்ளது. அவர்கள் மறுவுலகத்தை விட இவ்வுலக வாழ்க்கைக்கு முன்னுரிமை கொடுக்கிறார்கள். மேலும் அல்லாஹ்வின் பாதை யில் செல்லவிடாமல் (மக்களைத்) தடுக்கிறார்கள். அது (அவர்களின் விருப்பத்திற்கேற்ப) கோணலாகிவிட வேண்டும் என்றும் விரும்புகிறார்கள். இப்படிப்பட்டவர்கள் வழிகோட்டில் வெகுதூரம் சென்று விட்டார்கள்” [75] - மற்றோர் இடத்தில்,

يَعْلَمُوْنَ ظَاهِرًا مِنَ الْحَيَاةِ الدُّنْيَا وَهُمْ عَنِ الآخِرَةِ هَمْ غَافِلُوْنَ

“இவர்கள் உலக வாழ்க்கையின் புறத்தோற்றத்தை மட்டுமே அறிகின்றனர்., மறுவுலகத்தைப் பற்றி அலட்சிய மாக உள்ளனர்” [76] - வேறோர் இடத்தில்,

فَأعْرِضْ عَمَّنْ تَوَلَّى عَنْ ذِكْرِنَا وَ لَمْ يُرِدْ اِلاَّ الْحَيَاةَ الدُّنْيَا ذَلِكَ مَبْلَغُهُمْ مِنَ الْعِلْمِ اِنَّ رَبَّكَ هُوْ أَعْلَمُ بِمِنْ ضَلَّ عِنْ سَبِيْلِهِ وَهُوَ أعْلَمُ بِمَنِ اهْتَدَى

“எவன் நமது அறிவுரையைப் புறக்கணித்தானோ மேலும் உலக வாழ்க்கையைத் தவிர வேறெந்தக் குறிக்கோளும் அவனுக்கு இல்லையோ அவனை அதே நிலையிலேயே விட்டுவிடுவீராக! - இப்படிப்பட்டவர்

---

[72] **சூரத்தல் கஸஸ் 60**
[73] **சூரத்து யூனுஸ் 7 - 8**
[74] **சூரத்து ஹூத் 15 -16**
[75] **சூரத்து இப்றாஹீம் 2 - 3**
[76] **சூரத்துர் ரூம் 7**

களுடைய அறிவின் எல்லை அவ்வளவுதான்! உம் இறைவனே நன்கு அறிபவன் - தனது பாதையைவிட்டு வழி பிறழ்ந் தவர் யார், நேர் வழியில் செல்பவர் யார் என்பதை!" [77]- இன்னோர் இடத்தில்,

اِنَّ هَؤُلَاءِ يُحِبُّوْنَ الْعَاجِلَةَ وَ يَذَرُوْنَ وَرَائَهُمْ يَوْمًا ثَقِيْلاً

"திண்ணமாக இவர்கள் உடனடியாகக் கிடைக்கக் கூடிய (உலகத்)தை நேசிக்கிறார்கள். ஆனால் அவர் களுக்குப் பின்னால் வர விருக்கும் ஒரு கடினமான நாளை (மறுமையை) அலட்சியமாக விட்டு விடுகிறார்கள்" [78] - வேறோர் இடத்தில்,

فَأَمَّا مَنْ طَغَى وَ آثَرَ الْحَيَاةَ الدُّنْيَا فَإِنَّ الْجَحِيْمَ هِيَ الْمَأْوَى

"எவன் வரம்பு மீறினானோ மேலும் உலக வாழ்க்கைக்கு முன்னுரிமை கொடுத்தானோ அவனுக்குத் திண்ணமாக நரகம் தான் புகலிடமாகும்" [79]

ஆனால் இவ்வுலகின் நலன், மறுவுலகின் நலன் இரண்டையும் கருத்தில்கொண்டு அதே நேரத்தில் மறுவுலக வாழ்வுக்கு முக்கி யத்துவம் கொடுத்து, அதன் உயர்வையும் சிறப்பையும் அந்தஸ்தை யும் உணர்ந்து அதை அடைவதற்கு ஆர்வம் கொண்டு வாழ்பவர்கள் யாரோ அவர்களை குர்ஆன் புகழ்கிறது!

فَمِنَ النَّاسِ مَنْ يَقُوْلُ رَبَّنَا آتِنَا فِى الدُّنِيَا وَمَا لَهُ فِى الآخِرَةِ مِنْ خَلَاقٍ وَمِنْهُمْ مَنْ يَقُوْلُ رَبَّنَا آتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَفِى الآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

"மக்களில் இவ்வாறு பிரார்த்தனை செய்வோரும் உள்ளனர்: எங்கள் இறைவனே! எங்களுக்கு உலகத் திலேயே எல்லாம் வழங்கிவிடு என்று! -இத்தகையவருக்கு மறுமையில் யாதொரு பாக்கியமும் இல்லை. ஆனால் எங்கள் இறைவனே! எங்களுக்கு இவ்வுலகிலும் நன்மையைக் கொடு. மறுவுலகிலும் நன்மையைக் கொடு. மேலும் நரக வேதனையில் இருந்து எங்களைக் காப்பாற்று என்று கூறும் சிலரும் மக்களில் உள்ளனர்!" [80]

ஓரிடத்தில் மூஸா (அலை)அவர்கள் இவ்வாறு பிரார்த்தனை செய்ததாகச் சொல்லிக் காட்டுகிறது குர்ஆன்:

وَاكْتُبْ لَنَا فِى هَذِهِ الدُّنْيَا حَسَنَةً وَ فِى الآخِرَةِ، اِنَّا هُدْنَا اِلَيْكَ

" (இறைவா!) இவ்வுலகிலும் எங்களுக்கு நன்மையை எழுதிவைப்பாயாக. மறுமையிலும் நன்மையை அருள்வாயாக! திண்ண மாக நாங்கள் உன் பக்கமே திரும்பி விட்டோம்" [81]

ஓரிடத்தில் இப்ராஹீம் (அலை)அவர்களைப் புகழ்ந்துரைத்து அதன் மூலம் வழிகாட்டுகிறது:

وَآتَيْنَاهُ فِى الدُّنْيَا حَسَنَةً وَاِنَّهُ فِى الآخِرَةِ لَمِنَ الصَّالِحِيْنَ

"மேலும் இவ்வுலகிலும் அவருக்கு நன்மையை வழங்கினோம். திண்ணமாக அவர் மறுவுலகிலும் நல்லோர் களில் ஒருவராக இருப்பார்" [82]

## இறைமார்க்கத்திற்கும் உலகாயதச் சிந்தனைக்கும் வேறுபாடு

இங்குதான் இறைமார்க்கம், நபித்துவ அறிவுரைகள் அல்லது நபித்துவப் பள்ளிக்கூடம் ஆகியவை (இந்தச் சொல்வழக்கில் தவறில்லை என்று கருதுகிறேன்)- உலகாயதத் தத்துவங்களுக்கும் உலகாயதச் சிந்தனைப் போக்கிற்கும் முற்றிலும் மாறுபடுகின்றன. நேருக்குநேர் மோதுகின்றன. எல்லாமே இவ்வுலக வாழ்க்கைதான். அத்துடன் எல்லாம் முடிந்து விடுகிறது என்பதில்தானே உலகாயதம் பிடிவாதமாக இருக்கிறது! உலக வாழ்க் கையை உயர்வாக மதித்து அதற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதிலும் புகழ் வதிலும்தானே வரம்பு மீறிச்

---

[77] சூரத்துந் நஜ்ம் 29 -30
[78] சூரத்தல் இன்ஸான் 27
[79] சூரத்துந் நாஸியாத் 37 - 39
[80] சூரத்துல் பகறா 200 - 201
[81] சூரத்துல் அஃராஃப் 156
[82] சூரத்துந் நஹ்ல் 122

செல்கிறது! உலக வாழ்க்கையை அலங்கரிப்பதிலும் அழகுபடுத்துவதிலும் உல்லாச வாழ்வை உருவாக்குவதி லும்தானே ஈடுபடுகிறது!

உலக வாழ்வு குறித்து குர்ஆன் ஏற்படுத்த விரும்புகிற கருத் தோட்டம் அல்லது கோட்பாடு நபிகளார் (ஸல்) அவர்களின் அருள்மொழிகளில் மிகத் தெளிவாக வெளிப்பட்டுள்ளது. நபி(ஸல்) அவர்கள் அடிக்கடி இப்படிக் கூறுபவர்களாய் இருந்தார்கள்:

اللّٰهُمَّ لاَ عَيْشَ اِلاَّ عَيْشُ الآخِرَةِ

"யா அல்லாஹ்! மறுமை வாழ்க்கையைத் தவிர வேறு வாழ்க்கை என்பதில்லை" (நூல்: புகாரி) – நபியவர் களின் பிரார்த்தனை இவ்வாறு வந்துள்ளது:

اللّٰهُمَّ اجْعَلْ رِزْقَ آلِ مَحَمَّدٍ قُوْتًا وفى رِوَايَةٍ كَفَافًا

"யா அல்லாஹ்! முஹம்மதுடைய குடும்பத்தாரின் ரிஜ்க் வாழ் வாதாரத்தை - உயிர்வாழத் தேவையான அளவுக்கு ஆக்கு! மற்றோர் அறிவிப்பில்: போதுமாக்கிக் கொள்ளும் அளவு ஆக்கு - என்று உள்ளது"

முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறக்கேட்டுள்ளேன்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மறுவுலகத்திற்கு எதிரில் இவ்வுலகத்தின் நிலை - உங்களில் ஒருவர் தனது விரலைக் கடலினுள் விடுவதுபோன்றே தவிர வேறில்லை. (அதனை வெளியே எடுத்து) அதில் எவ்வளவு தண்ணீர் உள்ளது என்று அவர் பார்த்துக் கொள்ளட்டும்" [85]

நபி (ஸல்) அவர்களின் பரிசுத்தமான வாழ்க்கை இத்தகைய கோட்பாட்டை மெய்ப்படுத்தக்கூடிய கண்ணாடி யாகவே திகழ்ந்தது.

இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படுகிறது: ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் ஒரு பாயின் மீது படுத் திருந்தார்கள், நான் கேட்டேன்: அல்லாஹ்வின் தூதரே! இதன் மீது ஏதாவது விரிப்பு விரிக்குமாறு நீங்கள் எங்களுக்குக் கட்டளை இட்டால் நாங்கள் இதன் மீது ஏதாவது விரிப்போமே. அதற்கு நபியவர்கள் சொன்னார்கள்: இந்த உலகின் பக்கம் எனக்கு என்ன தேவை இருக்கிறது? எனக்கும் இந்த உலகத்திற்கும் உவமை, ஒரு மரத்தின் கீழ் சிறிது ஓய்வெடுத்து விட்டுப் பின்னர் அங்கிருந்து சென்றுவிடுகிற ஒரு பயணியைப் போன்றதாகும்" [86]

ஈலா* (ايلاء) பற்றிய ஒரு ஹதீஸில் உமர்(ரலி) அவர்கள் அறிவிக் கிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்களின் சமூகம் சென்றேன். முடையப்பட்ட ஒருபாயின் மீது அவர்கள் படுத்திருந்தார்கள். அதன் மீது விரிப்பு எதுவும் விரிக்கப்படவில்லை. பாயின் கோரைகள் நபியவர்களின் இரு விலாப்புறங்களிலும் பதிவை ஏற்படுத்தியிருந்தது. உமி நிரப்பப்பட்ட தோல்தலையணை மீது அவர்கள் சாய்ந் திருந்தார்கள். நான் அவர்களுக்கு ஸலாம் கூறினேன்... (மேலும் சில விவரங்களுக்குப் பின் உமர் அவர்கள் தொடர்ந்து சொல்கிறார்கள்) நபிவர்களின் வீட்டில் பார்வை செலுத்தினேன். அல்லாஹ்வின்மீது சத்தியமாக! மூன்று தோல் பாத்திரங்களைத் தவிர பார்வையை ஈர்க்கிற வேறெந்தப் பொருட்களையும் நான் காணவில்லை. நான் கேட்டேன்: அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யுங்கள். உங்கள் சமுதாயத்தினருக்கு அதிக செல்வத்தை அவன் வழங்கட்டும். பாரசீகர்களுக்கும் ரோமானியர்களுக்கும் எவ்வளவு அதிக செல்வம் வழங்கப்பட்டுள் ளது. அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதும் இல்லையே!

இதனைக் கேட்டதும் சாய்ந்து படுத்திருந்த நபியவர்கள் எழுந்து இருந்து கொண்டு கூறினார்கள்: கத்தாபின் மகனாரே! நீருமா இவ்வாறு சிந்திக்கிறீர்! அந்தச் சமுதாயத்தினருக்கு - அவர்களுக்குரிய நற்பேறு கள் உலக வாழ்க்கையிலேயே வழங்கப்பட்டு விட்டன" [87]

---

[85] ஸஹீஹ் முஸ்லிம்

[86] நூல்: அஹ்மத், திர்மிதி, இப்னு மாஜா

* ஒரு மனிதன் தன் மனைவியை (தாம்பத்திய உறவுக்காக) குறிப்பிட்ட காலம் வரை நெருங்க மாட்டேன் என்று சத்தியம் செய்வதற்கு அரபியில் ஈலா எனப்படும். நபி (ஸல்) அவர்கள் ஒரு மாத காலம் வரை தம் மனைவியரை நெருங்கப்போவ தில்லை என்று சத்தியம் செய்தது பற்றி கூறப்பட்டுள்ள ஹதீஸ் ஆகும் இது. (மொழி பெயர்த்தோன்)

[87] ஸஹீஹு ல் புகாரி பாகம்: திருமணம்

# நபித்துவப் பள்ளிக்கூடத்து
# மாணவர்களும் அவர்களின் பண்பாடும்

இந்த நபித்துவப் பள்ளிக்கூடத்தில் கல்வி ஒழுக்கப் பயிற்சி பெற்ற அல்லது முழுமையாகக் கற்றுத்தேரிய அல்லது அதன் மாணவர்களில் ஒரு மாணவராக இருந்த ஒவ்வொருவரும் இந்த வர்ணத்தைப் பெற்றிருந்தனர். மறுமைச் சிந்தனை அவர்களை ஆட்கொண்டிருந்தது. அது அவர்களின் உதிரத்தோடு உதிரமாய் - உயிரோடு உயிராய் - அவர்களின் நரம்பு நாளங்களில் எல்லாம் ஊடுருவி இருந்தது! ஆகையால் மறு உலகம் குறித்து சிறிது நேரம்கூட அவர்கள் அலட்சியமாக இருந்ததில்லை. அதற்கு மாற்றெதையும் அவர்கள் விரும்பவில்லை. அதை விட வேறெதற்கும் அவர்கள் முன்னுரிமை கொடுக்கவில்லை.

நபித்துவப் பள்ளிக்கூடத்தின் மாணவர்களிடம் குடிகொண் டிருந்த இத்தகைய உயிரோட்டத்தை நீங்கள் நேரடியாகப் பார்க்க விரும்பினால் அலீ (ரலி)அவர்களின் பண்பாடுகளைப் படித்தாலே போதும்! அந்தப் பள்ளிக் கூடத்தில் முழுமையாகப் படித்துத் தேரிய - நபியவர்களின் அரவணைப்பில் வளர்ந்து வந்த ஒரு மனிதரின் பண்பாட்டை எடுத்துரைக்கும் சித்திரமாகும் அது.

அபூ ஸாலிஹ் என்பாரிடம் இருந்து அறிவிக்கப்படுகிறது: ளிறார் இப்னு ளமிறா (ரலி) அவர்களிடம், அலீ (ரலி) அவர்களின் பண்பு நலன்களை எனக்கு எடுத்ரைப்பீராக என்று முஆவியா (ரலி)அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர், இயலாது.,என்னை நீங்கள் மன்னிப்பீர்களா? என்றார். இல்லை., அவர்களைப் பற்றி நீர் கூறத் தான் வேண்டும் என்று மீண்டும் கோரினார் முஆவியா அவர்கள். அதற்கு அவர், இயலாது., என்னை நீங்கள் மன்னிப்பீர்களா? என்றுதான் மீண்டும் பதில் சொன்னார். நான் உம்மை மன்னிக்கவே மாட்டேன் என்று முஆவியா அவர்கள் வற்புறுத்தவே ளிறார் என்பார் கூறினார்:

சரி, அவ்வாறாயின் கேளுங்கள். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அலீ (ரலி) அவர்கள் தூர நோக்கு உடையவர்கள். ஊக்கமும் வலிமையும் நிறைந்தவர்கள். தீர்க்கமாகவும் தெளிவாகவும் பேசுவார்கள். நீதிமிக்க தீர்ப்பு வழங்குவார்கள். அவர்களின் நாவிலும் சிந்தையிலும் கல்விஞானம் பெருக்கெடுத்து ஓடும். ஒவ்வொரு வார்த்தையிலும் விவேகம் வெளிப்படும்.

அலீ (ரலி) அவர்கள் உலகையும் அதன் அலங்காரத்தையும் வெறுப்பார்கள். இரவில் - அதன் இருளில் மகிழ்வுடன் வழிபாட்டில் ஈடுபட்டிருப்பார்கள்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அலீ (ரலி) அவர்கள் அதிகமாகக் கண்ணீர் உகுப்பார்கள். ஆழ்ந்த சிந்தனையுடன் இருப்பார்கள். தவறுகளை எண்ணித் துயருறுவார்கள்., தம்மைத்தாமே விமர்சனம் செய்து கொள்வார்கள். முரட்டுத் துணி ஆடைகளை விரும்பி அணிவார்கள். சாதாரணமான, எளிய உணவை விரும்பி உண்பார்கள்.

அலீ (ரலி)அவர்கள் எங்களில் ஒருவராக எங்களுடன் பழகுவார்கள். நாங்கள் கேள்வி கேட்டால் உடனே பதிலளிப்பார்கள். நாங்கள் அவர்களைச் சந்திக்கும்பொழுது ஸலாம் சொல்வதில் அவர்களே முந்திக் கொள் வார்கள். நாங்கள் அவர்களை அழைத்தால் எங்கள் அழைப்பை ஏற்று எங்களிடம் வருகை தருவார்கள்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் இந்த அளவு எங்களுடன் சமமாக நெருங்கிப் பழகியும்கூட அச்சம் மேலிட்டு விடுவதால் அவர்களிடம் எங்களால் பேச இயலாது. அவர்களது கண்ணி யத்தின் காரணமாக அவர்களை முந்திக்கொண்டு பேச எங்களால் முடியாது. அவர்கள் புன்னகை பூத்தால் பற்கள் முத்துச்சரம் போல் ஒளிரும்!

தீன் -இறைமார்க்கத்தைக் கடைப்பிடித்து வாழ்பவர்களை அலீ (ரலி) அவர்கள் கண்ணியப்படுத்துவார்கள். ஏழை எளியவர்களை நேசிப்பார்கள். (இவ்வளவு எளிமையாக இருந்ததுடன்) வலிமையானவர் யாரும் அவர் களிடம் தவறான தீர்ப்பைப் பெற்றிட முடியாது. அவர்களின் நீதியில் பலவீனமானவர் நம்பிக்கை இழந்திட மாட்டார்.

அல்லாஹ்வைச் சாட்சியாக்கிக் கூறுகிறேன்: சில முக்கியமான நேரங்களில் அவர்களைப் பார்த்திருக்கி றேன். இரவு தனது இருட்போர்வையைத் தொங்கவிட்டிருக்க - நட்சத்திரங்கள் எல்லாம் மறைந்து விட்டிருந்த நேரத்தில் அவர்கள் தங்களது தொழும் அறையில் நின்று கொண்டிருந்தார்கள். தாடியைக் கையால் பிடித்தி ருந்தார்கள். பாம்பு கடித்தவர் துடிப்பதுபோல் துடித்துக் கொண்டிருந்தார்கள். துயறுற்றவர் அழுவதுபோல் அழுதுகொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் கூறிய வார்த்தைகள் இன்னும் என் காதுகளில் எதிரொலித் துக் கொண்டிருக்கிறது:

'உலகமே! என்னை நீ சோதிக்கவா வந்து விட்டாய்? என்னை வழிகெடுக்கவா திட்டமிட்டுள்ளாய்? நிராசை அடைந்திடு. என்னை விட்டுவிட்டு வேறு எவரையேனும் ஏமாற்று. நான்தான் உன்னை முத்தலாக்-முழு மண

விலக்கு செய்து விட்டேனே., உன்னைத் திரும்ப அழைக்கும் பேச்சே இல்லையே. உன் வயதோ குறைவு. வாழ்வோ போலியானது. ஆனால் உன்னால் விளையும் அபாயமோ மிகவும் விபரீதமானது. அய்யகோ! வழித் துணைச் சாதனம் மிகக் குறைவு! பயணம் எவ்வளவு நீளம்! பாதையும் எத்துணை பயங்கரம்!" [88]

உங்களுக்கு இன்னோர் எடுத்துக்காட்டு தருகிறேன். அது, இஸ்லாமியப் பேரரசின் தலைநகரில் அதன் ஆளுநரான நபித் தோழர் ஆற்றிய உரையாகும்.

காலித் பின் உமைர் அல் -அதவி (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படுகிறது. பஸராவின் ஆளுநர் உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்கள் ஒருதடவை எங்களிடையே உரை ஆற்றினார்கள். அல்லாஹ்வுக்குப் புகழும் புகழாரமும் சாற்றிய பிறகு அவர்கள் கூறியதாவது,

அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக இந்த உலகம் முடியும் தருவாய்க்கு வந்து விட்டது. விரைவாக கடந்து சென்று கொண்டிருக்கிறது. கவிழ்க்கப்பட்ட பானையில் எவ்வளவு குறைந்த நீர் எஞ்சியிருக்குமோ அவ்வளவு குறுகிய காலம்தான் உலகிற்கு உள்ளது. நீங்கள் இங்கிருந்து நிலையான ஓர் இல்லத்திற்குச் செல்ல இருக்கிறீர்கள். ஆகையால் சிறிது நன்மைகளையேனும் கையோடு கொண்டுசெல்லுங்கள். ஏனெனில் (நரகத்தின் பயங்கரம் பற்றி) எங்களுக்குச் சொல்லப்பட்டுள்ளது. அதாவது நரகின் விளிம்பில் இருந்து எறியப் படும் கல் ஒன்று எழுபது ஆண்டுகள் வரை நரகினுள் சென்று கொண்டே இருக்கும். அப்பொழுதுகூட அதற்கு ஆழம் தட்டாது. அவ்வளவு ஆழமான நரகம்கூட ஒருநாள் நிரப்பப்பட்டேதீரும். இது உங்களுக்கு ஆச்சரிய மாக உள்ளதா, என்ன?

இவ்வாறு சுவனம் பற்றி எங்களுக்குச் சொல்லப்பட்டுள்ளது. அதன் இரு மருங்கிற்கும் இடையே நாற்பது ஆண்டு கால நடை தூரம் உள்ளது. ஒருநாள் வரும்., அந்தச் சுவனத்தில் மனிதர்கள் நிரப்பப்படுவார்கள்.

(அன்றைய ஆரம்ப காலத்தில்) நபியவர்களைப் பின்பற்றியிருந்த தோழர்கள் மொத்தம் ஏழு பேர்தான். அவர்களில் நானும் ஒருவன். (சில நாட்களாக) இலைதழைகளைத் தவிர வேறு உணவு எங்களுக்கு இல்லை. அவற்றை மென்று மென்றே எங்கள் வாய் கொப்பளமாகி விடும்! நான் ஒரு போர்வையைக் கண்டெடுத்தேன். அதனை இரண்டாகக் கிழித்து ஒரு பாகத்தை ஸயீத் பின் மாலிக்-குக் கொடுத்தேன். அதனை அவர் உடுத் திக் கொண்டார். மறு பாகத்தை நான் உடுத்திக் கொண்டேன்.

ஆனால் இன்றோ நாம் ஒவ்வொருவரும் பெரும்பெரும் நகரங்களுக்கு ஆளுநராக இருக்கிறோம். - எனது பார்வையில் நான் பெரியவனாக - இறைவனிடம் சிறியவனாக ஆகுவதில் இருந்து என்னைக் காப்பாற்றுமாறு இறைவனிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

எந்த (நபியின்) நபித்துவமும், அதன் பாதிப்பு (உலகில் சிறிது காலத்தில்) மாற்றம் அடையாமல் நிரந்தர மாக இருந்ததில்லை. (படிப்படியாக மாற்றம் அடைந்து) இறுதியில் அதன் நிலை அதிகாரமாகவே முடிந்தது. எனவே அத்தகைய நிலையை விரைவில் நீங்களும் பெற்றுக் கொள்வீர்கள்., எங்களுக்குப் பின்னர் வரும் அமீர்களின் அனுகு முறையை நீங்கள் அனுபவிப்பீர்கள். (நபித்துவத்தின் விளைவான மேலான மார்க்க நடை முறைகள் அவர்களிடம் இருக்காது. முற்றிலும் பதவி மோகம் உடையோராய் ஆகிவிடுவார்கள்) [89]

## நவீன சிந்தனைகளும் மறுமைக் கொள்கையும்

எந்தெந்த நவீன சிந்தனைகள் - இயக்கங்கள், ஈமானின் உயி ரோட்டத்தை முழுமையாக அடைந்திட வில்லையோ, நபித்துவப் பள்ளிக்கூடத்தின் வழிகாட்டலையும் ஒழுக்கப்பயிற்சியையும் நேடியாக பெற்றிடவில் லையோ அவற்றால் இந்த மறுமைச் சிந்தனையை - மறுமைக் கொள்கையை முழுமையாக ஜீரணிக்க முடிவ தில்லை., அதில் ஒருபிரியம் அவற்றிற்கு ஏற்படுவதில்லை. அந்த நவீன சிந்தனைகள் மறுமைக்கொள்கை யோடு தொடர்ந்து மோதிக்கொண்டே இருக்கின்றன. அல்லது அதனால் சங்கடம் அடைகின்றன. அதை விட்டும் தூரமாக விலகிச்செல்லவே விரும்புகின்றன. அல்லது மறுமைக் கொள்கைக்கு இப்படி ஒரு தவறான விளக் கத்தை அதாவது, இந்த மறுமைக்கொள்கை குறிப்பிட்டதொரு காலத்தில் குறிப்பிட்ட சூழ்நிலையில் இருந்தது. அதற்கெனப் பிரத்தியேக கால நிலைகள், காரணங்கள் இருந்தன என்று தவறான விளக்கம் அளிக்கின்றன.

---

[88] **நூல்: இப்னு கையிமில் ஜெளஸி (ரஹ்) அவர்களின் ஸஃப்வத்துஸ் ஸஃப்வா**

[89] **நூல்: முஸ்லிம் பாகம் 2 பகுதி: உலகப் பற்றின்மை**

ஆனால் திருக்குர்ஆனிலும் திருநபியவர்களின் வாழ்விலும் வாக்கிலும் மறுமைச்சிந்தனை எனும் உயிரோட்டம் நிறைவாக உள்ளது என்பதும் இதுவே நபித்துவக் கல்வி ஒழுக்கப் பயிற்சியினால் அமையும் இஸ்லாமிய இயல்பு., இஸ்லாமியச் சிந்தனை என்பதும் எவ்வித ஒளிவுமறைவுமில்லாத உண்மையாகும்!

தன்னுடைய திட்டமுறைகளைச் சுதந்திரமாகச் செயல்படுத்தும் வாய்ப்பு குர்ஆனுக்கும் நபிமொழிக்கும் கிடைத்தால் - இஸ்லாமியப் பண்பாடுகளில் ஊறித்திளைத்த, புறத்தாக்குதல்களில் இருந்து பாதுகாக்கப்பட்ட ஒரு புதிய தலைமுறையை வார்த்தெடுக்கும் சந்தர்ப்பம் குர்ஆனுக்கும் நபிமொழிக்கும் கிடைத்தால் - அந்தப் புதிய தலைமுறையின் இயல்பும் பண்பாடும் சிந்தனையும் இவ்வாறே அமையும்:

அவர்கள் உலகில் பற்றற்ற நிலையை மேற்கொள்வார்கள், அதன் அலங்காரங்களில் இருந்தும் அபரிமிதமான வாழ்க்கைச் சாதனங்களில் இருந்தும் விலகியிருப்பார்கள். தேவையான குறைந்த வாழ்வாதாரத்தில் நிறைவு காண்பார்கள். மறுமையையும் அங்கு பயனளிக்கும் அமல்களையும்தான் அதிகம் நாடுவார்கள். இறைவனின் சந்திப்பில் அதிக ஆர்வம் கொள்வார்கள். உலகின் சாதனங்களை விட அல்லாஹ்விடம் உள்ள அருட்பேறுகளுக்கே முன்னுரிமை கொடுப்பார்கள். ஈமானுடன் மரணம் அடைவதற்கும் இறைவழியில் உயிர்த்தியாகம் செய்வதற்கும் முதலிடம் அளிப்பார்கள்.

-இத்தகைய பண்பாட்டின்படி வாழும் ஓர் இறைநம்பிக்கை யாளனின் நாவில் ஆரம்பகால முஸ்லிம்களாகிய நபித்தோழர்கள் மொழிந்த வார்த்தைகள்தாம் அதிகம் வெளிப்பட்டுக்கொண்டிருக்கும்: நாளை என் அன்பர்களைச் சந்திப்பேன். முஹம்மத் (ஸல்) அவர்களையும் அவர்களின் தோழர்களையும் பார்ப்பேன்" [90]

## நபித்துவ அழைப்புக்கும் சீர்திருத்த இயக்கத்திற்கும் வேறுபாடு

சில இயக்கங்களும் அழைப்புப்பணியில் ஈடுபட்டுள்ள அமைப்புகளும் மறுமைக் கொள்கையை முழுமை யாக எடுத்துக் கூறுகின்றன. அதற்கு அழகிய முறையில் விளக்கம் தருகின்றன. மறுமை நம்பிக்கையின் தத்துவத்தையும் வாழ்க்கையில் அது ஏற்படுத்தும் தாக்கங்களையும் ஒழுக்கரீதியில் அதற்குள்ள முக்கியத்துவத்தை யும் விரிவாகவும் நயமாகவும் எடுத்துரைக்கின்றன. ஆனால் அதனைப் படிக்கும் புத்திகூர்மையுள்ள ஒவ்வொருவரும் இதனைப் புரிந்து கொள்வார்: அதாவது -

மறுமையின் மீது நம்பிக்கை கொள்வது ஒழுக்க ரீதியில் இன்றியமையாத ஒன்று., சீர்திருத்தத்திற்குத் தேவையான அம்சம்., மறுமைக் கொள்கையின்றி சிறந்ததொரு சமுதாயத்தை, சீர்மிகுப் பண்பாட்டு நெறியைக் கட்டியெழுப்ப முடியாது., குறிப்பாக இஸ்லாமியச் சமுதாயம் சிறந்தோங்க வேண்டுமெனில் மறுமைக் கொள்கை மிகவும் அவசியம் என்று உணர்ந்து கொள்வார்.

இது ஒரு விதத்தில் பாராட்டுக்கும் வரவேற்புக்கும் உரியதுதான். ஆயினும் இது நபிமார்களின் செயல் முறைக்கும் சிந்தனைக்கும் அவர்களின் பண்பாடுகளுக்கும் தெளிவாக மாறுபடுகிறது. கலீஃபாக்கள் எனும் அவர்களின் பிரதிநிதிகளின் வாழ்க்கை முறைக்கும் தெளிவாக இது வேறுபடுகிறது. இரண்டுக்கும் உள்ள வேறுபாடு இதுதான்: நபிமார்களின் செயல்முறையில் -

ஈமான் எனும் இறைநம்பிக்கை, ஆழமாக உணர்தல், புரிதல், மனோபாவம், கொள்கை இவை அனைத்தும் எவ்வளவு அழுத்தமாகப் பதிந்திருந்தன என்றால். இவை அனைத்தும் மனிதனின் உணர்வுகளையும் சிந்தனையையும் செயல்முறைகளையும் முழுமையாக ஆட்கொண்டிருந்தன!

ஆனால் இந்த அமைப்புகள், இயக்கங்களின் நிலை என்ன வெனில், ஏற்றுமொழிதல், மதிப்பளித்தல், சட்டரீதியாக ஏற்றல் எனும் வெளித் தோற்றமாகவே இருக்கிறது.

நபிமார்களும் கலீஃபாக்களும் மறுமை பற்றி மெய்யுருக, இன்பம் பொங்கப் பேசினார்கள். அதன் பக்கம் ஊக்கத்துடனும் உறுதியுடனும் மக்களை அழைத்தார்கள்!

ஆனால் இந்த இயக்க வாதிகளோ, மறுமை பற்றி பேசும்பொழுது அது, ஒழுக்க ரீதியில் இன்றியமையாத ஒன்று எனும் அளவுக்குத்தான் அல்லது சமூக வாழ்வுக்குத் தேவை என்ற அடிப்படையில்தான் அல்லது சீர் திருத்தத் தேட்டம் மற்றும் ஒழுக்க ரீதியான தூண்டுதல் எனும் அளவுக்குத்தான் அதைப்பற்றிப் பேசுகிறார்கள்.

ஆழமான உணர்வு, உரத்த மனோபாவம் என்பது எங்கே? சூழ்நிலையின் தத்துவம், சமூக நலன்கள் என்பது எங்கே? இரண்டுக்கும்தான் எவ்வளவு பெரிய இடைவெளி!

---

[90] செய்யிதுனா பிலால் (ரலி) அவர்கள் மொழிந்த வார்த்தை. நூல்: இப்னு அபித் துன்யாவின் அறிவிப்பின் படி இஹ்யா உலூமித்தீன்

## வலிமை - முன்னேற்றத்தின் தூண்டுதல்கள்!

நபி (ஸல்) அவர்களிடமும் நபித்தோழர்களிடமும் அமைந் திருந்த இத்தகைய ஆழமான, அழுத்தமான மறுமை நம்பிக்கையும் இவ்வுலகத்தை விட மறுமையைத் தேர்ந்தெடுக்கும் திண்மையும் மற்றும் உலக அலங் காரங்களிலும் அபரிமிதமான வசதி வாய்ப்புகளிலும் பற்றில்லாப் போக்கும் -

✡ அவர்களைத் தனிமையில் ஒதுக்கி வைத்திடவில்லை. உலகை வழிநடத்திச் செல்வதை விட்டும் மனித குலத்திற்கு வழிகாட்டுவதை விட்டும் முடக்கிவைத்திடவில்லை. வாழ்க்கை வட்டத்தை விட்டும் விலகி இருக்கச் செய்திடவில்லை.

✡ பொருளாதாரக் காரணிகளையெல்லாம் தூக்கி எறிந்திட வேண்டும் என அவர்களைத் தூண்டிடவில்லை. உண்மைக்காகவும் நன்மைக்காகவும் போராடாமல் உட்கார்ந்துவிடும் எண்ணத்தை அவர்களிடம் வளர்த்திட வில்லை.

✡ பிந்தைய நூற்றாண்டுகளில் காண்பதுபோன்று -பலவீனத்திற்கும் கீழடங்கலுக்கும் தூண்டுகோலாய் அமைந் திடவில்லை!

மாறாக வலிமை, முன்னேற்றம் ஆகியவற்றின் தூண்டுதல்களுள் ஒரு தூண்டுதலாகவே அது இருந்தது! தீய சக்திகளுக்கு எதிராக அவர்களை வெகுண்டெழச் செய்தது. வீரம், ஆற்றல், வெற்றி ஆகியவற்றின் ஒரு பின்பலமாகத் திகழ்ந்தது!

உண்மையாதெனில், மக்கள் அனைவரினும் அதிகமாக இவ்வுலக வாழ்க்கையில் பற்றில்லாதவர் எவரோ, மறுமை மீது அதிக நம்பிக்கையும் ஆர்வமும் உடையவர் எவரோ, இறைவனைச் சந்திப்பதில் அதிகத் தேட்ட மும் இறைவழியில் உயிர்த்தியாகம் செய்வதில் அதிக ஆர்வமும் உடையவர் எவரோ அப்படிப்பட்டவர்கள்தாம் -

உலகில் மிகப் பெரிய வீரர்களாய் திகழ்ந்துள்ளார்கள். சத்தியத்திற்காகப் போராடுவதில் அதிக உற்சாகம் உடைவர்களாய் வாழ்ந்துள்ளார்கள். ஜிஹாத் எனும் இறைவழிப் போர்களிலும் இஸ்லாத்திற்கு வெற்றிகளைக் குவிப்பதிலும் எல்லோரையும் விட அதிகப் பங்களிப்பை நல்கியுள்ளார்கள்!

இதுவே இந்த மறுமைக்கொள்கையின் சிறப்புக்குணம். இது இயற்கையாகவே வீரம், திறமை, முன்னேற்றம், உலக வாழ்வைத் துச்சமாகக் கருதுவது, மனஇச்சைகளை அடக்குவது போன்ற தன்மைகளை மனிதனிடம் உருவாக்கி விடுகிறது! இந்த மறுமைக் கொள்கையின் பின்னணியில்தான் இஸ்லாத்தின் வளர்ச்சியும் வெற்றி யும் எழுச்சியும் அமைந்துள்ளது என்பதில் ஐயமில்லை!

## மறுமை நம்பிக்கைக்கும்
## துறவறத்துக்கும் தொடர்பில்லை!

எனவே மறுமை நம்பிக்கை என்கிற இந்தக் கொள்கைக்கு- உலக வாழ்வு பற்றிய குர்ஆனின் இந்தக் கண்ணோட்டத்திற்கு, வெறுத்து ஒதுக்கப்பட்ட துறவறக் கொள்கையோடு எந்தத் தொடர்பும் இல்லை.

திருக் குர்ஆனால் மறுத்துரைக்கப்படுவதுதான், நிராகரித்துத் தள்ளப்படுவதுதான் இந்தத் துறவறம்! இஸ்லாமியப் போதனைகள் பலவீனம் அடைந்த பின்னர் தோன்றியதுதான் - பொற்காலமெனச் நற்சான்று வழங்கப்பட்ட ஆரம்ப நூற்றாண்டுகளுக்குப் பிறகு இஸ்லாமிய உலகில் தலையெடுத்ததுதான் இந்தத் துறவறப் போக்கு! கிறிஸ்துவம், புத்தமதம், பிராமணியம், **New Pilatonism** ✡ போன்ற அந்நிய கருத்துகள் மற்றும் புறத் தத்துத்துவங்கள் ஆகியவற்றின் தாக்கத்தினால் உருவானதுதான் இந்தத் துறவறம்! இதனோடு மறுமைக் கொள்கைக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை.

மறுமைக் கொள்கை என்பது, இவ்வுலக வாழ்க்கையின் உரிமையைப் பாழ்படுத்தாமலும் அதன் சரியான மதிப்பை நிராகரிக்காமலும் மறுவுலகத்திற்கு முன்னுரிமை கொடுப்பதன் மீது நிலைகொண்டதாகும். மறுவுல கத்தின் வழியில் உண்மைக்காகவும் நன்மைக்காகவும் போராடுவதன் மீது அமைந்ததாகும். நிலையான மறுமைப்பேறுகளை அடையும் பொருட்டு தற்காலிகமான - அழியும் தன்மை கொண்ட இன்பங்களைத் தியாகம் செய்வதன் மீதும் அல்லாஹ்வின் உவப்பைத் தேடுவதன் மீதும் அமையப் பெற்றதாகும்.

முஸ்லிம்கள் இந்தக் கோட்பாட்டில் பலவீனப்பட்ட காரணத்தால்தான் இன்று அவர்களிடம் எத்தனையோ பலவீனங்கள் தோன்றியுள்ளன என்பதில் ஐயமில்லை. மன இச்சைகளுக்கும் அபிலாசைகளுக்கும் இரையாகி விட்டிருக்கும் இன்றைய புதிய தலைமுறை யினரிடம் மறுமை நம்பிக்கை எனும் கோட்பாட்டை மீண்டும் புதுப்

---

✡ பிளாட்டோ என்ற பண்டைய கிரேக்க அறிஞனின் ஆன்ம நேயம் தழுவிய புதிய கோட்பாடு (மொழிபெயர்த்தோன்)

பிப்பது மிகவும் தேவையாகும். ஏன் அனைத்து முஸ்லிம்களிடமும் பிரச்சாரம் செய்து மீண்டும் அக்கொள்கையை அவர்களின் உள்ளத் தில் பசுமைப் படுத்துவது மிகமிக இன்றியமையாததாகும்.

முஸ்லிம்கள் இவ்வுல வாழ்க்கையை குர்ஆனின் கண்ணோட்டத்தின்படி மதிப்பிட்டு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாத வரையில் அவர்களின் தராசு சமமாகாது. அவர்களின் ஈமான் - இறைநம்பிக்கை முழுமை பெறாது!

- மறுமை பற்றிய இத்தகைய கருத்தைத்தான் உலகாயதச் சிந்தனை மறுக்கிறது. 'வாழ்க்கையைக்' கடவு ளெனக் கருதி வணங்கி வழிபடக்கூடிய -அதன் இன்பங்களுக்கும் சுக போகங்களுக்கும் பின்னால் சுற்றித் திரியக்கூடிய -வாழ்க்கையை உல்லாசமாக சொகுசாக ஆடம்பரமாக அமைத்துக்கொண்டால்போதும்., அதற்கு அப்பால் எதுவுமில்லை என்று கருதக்கூடிய உலகாயதத் தத்துவங்கள் இந்த மறுமைக் கொள்கையுடன் கடுமையாக முரண்படுகிறது., மோதுகிறது!

இத்தகைய உலகாயதச் சிந்தனையைத்தான் குகைஅத்தி யாயம் மறுத்துரைக்கிறது. இந்த உலகாயதப் போக்கையும் அதை வழிநடத்திச் செல்லும் தலைவர்களையும் கடுமையாகக் கண்டிக்கிறது. உலக வாழ்க்கை யின் யதார்த்த நிலையை எவரது விருப்பையும் வெறுப்பையும் பொருட்படுத்தாமல் உள்ளது உள்ளபடி மிகச் சரியாகப் படம்பிடித்துக் காட்டுகிறது!

## மூஸா - கிள்ர் சரிதை

இப்பொழுது மூன்றாவது சரிதையாகிய மூஸா - கிள்ர் சரிதையைத் தொடங்குகிறோம். இது நாம் வாழும் உலகம், உலக வாழ்வு பற்றிய கதை! இந்தக்கதை செயல்வடிவில் - மிகத் தெளிவான முறையில் இந்த உண்மைகளை உறுதிப்படுத்துகிறது: அதாவது,

இந்த உலகில் அறிந்து கொள்ளப்பட்ட-இந்த வாழ்க்கையில் புரிந்துகொள்ளப்பட்ட விஷயங்களுக்கு அப்பால் அறியப்படாத விஷயங்கள் ஏராளம். மனிதன் - தற்காலத்தில் வாழும் எவ்வளவு பெரிய மனிதன் என்றாலும் சரியே, அவன் அறிந்திருக்கும் விஷயங்களை விடவும் அறியாத விஷயங்கள்தான் அதிகம்!

தான் காண்கிற, உணர்கிற விஷயங்களின் அடிப்படையில்தான் தனது தீர்ப்பை மனிதன் அமைத்துக் கொள்கிறான். அதனால்தான் அதிக அளவு தவறுகிறான். தடம் புரளுகிறான்! வாழ்க்கையின் யதார்த்த நிலைகள் அவனுக்குப் புரியவந்தால் - இரகசியங்களும் அந்தரங்க நிலைகளும் அவனுக்குத் தெரியவந்தால் அவனுடைய கருத்துகள் பெரும் அளவு மாறிவிடும். தனது தீர்ப்புகளையே அவன் மாற்றிக்கொள்ள நேரிடும்!

இந்தக் கதையின் மூலம் மேலும் நிரூபிக்கப்படுகிறது: மனித னின் கருத்துகள், தீர்ப்புகள், அவனுடைய விருப்பங்கள், மன நிறைவுகள் ஆகிய எதன் மீதும் எவ்வித உறுதியும் கொள்ள முடியாது. மேலும் பரந்து விரிந்த இந்தப் பேரண்டத்தை முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாது. எனவே எதனைப் பற்றித் தீர்ப்பு அளிப் பதானாலும் அதில் அவசரம் ஆகாது. கருத்துகளில் பிடிவாதம் கூடாது!

இந்த வாழ்க்கை தெளிவற்றது., ஒன்றுக்குள் ஒன்றாகப் பின்னிப் பிணைந்தது., ஆழமானது! இந்தப் பேரண்டம் பரந்து விரிந்தது. அந்தரங்கத்திற்கும் வெளிரங்கத்திற்கும் அதிக வேறுபாடு உள்ளது. முடிவுக்கும் தொடக்கத்திற்கும் பெரிய முரண்பாடு உள்ளது!

இந்த வாழ்க்கை புதிர்கள் நிறைந்தது. மனிதன் எவ்வளவுதான் புத்திக்கூர்மை உடையவனாக - விஷய ஞானமும் அறிவுத் திறனும் மிக்கவனாக இருந்தாலும் அவனால் இந்தப் புதிர்களை விடுவிக்க முடிவதில்லை!

இதேபோல் இந்தப் பேரண்டத்தில் பற்பல முடிச்சுகளும் சிக்கல்களும் உள்ளன. மனித அறிவு எவ்வளவுதான் பெருகியிருந்தாலும் உச்சநிலை அடைந்திருந்தாலும் மனிதனால் இந்த முடிச்சுகளுக்கும் சிக்கல்களுக்கும் தெளிவு காணமுடிவதில்லை.

நமது அன்றாட சாதாரண வாழ்க்கையை எடுத்துக்கொண்டால் அங்கே வெளிப்படையான தவறுகள் நிறைய உள்ளன. அவசர கோலத்தில் அள்ளித்தெளிக்கப்படும் தீர்ப்புகள் அடர்ந்துள்ளன! எண்ணாது எடுத்துவைக் கும் எட்டுகளும் அவசர கோலத்தில் அள்ளித் தெளிக்கப்படும் கருத்துகளும் அதிகம் உள்ளன!

பரந்து விரிந்த இவ்வுலகத்தை நிர்வகிக்கும் பொறுப்பு மனித அறிவிடம் ஒப்படைக்கப்பட்டால் -முழுமையான சுதந்திரமும் எல்லையில்லா அதிகாரமும் மனித அறிவுக்கு வழங்கப்பட்டால் அகிலம் முழுவதையும் மனிதன் சீரழித்து விடுவான். விளைநிலங்களையும் உயிரினங்களையும் அழித்தொழித்து விடுவான். ஏனெனில், அவனது சிந்தனை குறுகியது. அவனது செயல்த்திறன் வரையறைக்கு உட்பட்டது! மனிதன் அவசரக்காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். அவசரமும் பொறுமைக் குறைவுமே அவனது இயல்பாக உள்ளது!

# இந்த உண்மையை நிரூபிக்கவே...!

இந்த மகத்தான உண்மையை நிரூபிப்பதற்காக - எல்லா மதங்களுக்கும் அடிப்படையான, ஈமான் பில் ஃகைப் ❋ எனும் மறைவான ஞானங்களை நம்புதல் எனும் கோட்பாட்டுக்கும் அடித்தளமாகத் திகழக்கூடிய இந்தப் பேருண்மையை நிரூபிப்பதற்காக அல்லாஹ் ஒருமாமனிதரைத் தேர்வுசெய்தான். அவருக்கு அறிவு ஞானமும் அதிகம் வழங்கப்பட்டிருந்தது. நற்பாக்கியங்களும் நலன்களும் அதிகம் அருளப்பட்டிருந்தன. அவர் தாம் மனத் திண்மைமிக்க இறைத்தூதர்களுள் ஒருவரான நபி மூஸா(அலை) அவர்கள்!

மூஸா நபியவர்கள் ஒருதடவை பனூ இஸ்ராயீல்கள் மத்தியில் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அப்பொழுது, மனிதர்களிலேயே அதிகம் அறிந்தவர் யார்? என்று அவரிடம் வினவப்பட்டது. அதற்கு மூஸா 'நான்' என்று பதில் அளித்தார்கள். 'அல்லாஹ் மிக அறிந்த வன்' என்று பதில் அளிக்காததால் அல்லாஹ் மூஸா நபியைக் கண்டித்தான். இரு கடல்கள் சங்கமிக்கும் ஓர் இடத்தில் உம்மை விடவும் அதிகம் அறிந்த ஓர் அடியார் இருக்கிறார் என்று மூஸாவுக்கு அல்லாஹ் வஹி அனுப்பினான்.[91]

# திகைக்க வைத்த செயல்கள்

அந்த அடியாருடன் மூஸா நபியின் பயணம் தொடங்கியது. அவருக்கு அல்லாஹ் தனது பிரத்தியேக அருளை வழங்கியிருந்தான். ஞானத்தையும் அவருக்குக் கற்றுக் கொடுத்திருந்தான். அந்தப் பயணத்தில் மூஸா நபியின் அறிவும் புலமையும் சிந்தனையும், தெளிவானதோர் உண்மையுடன் முரண்படுகிறது. வெளிரங்கத்தின் துணை யுடன் அமைந்த அவர்களின் கருத்து, அவர்கள் அறியாதிருந்த எதார்த்த நிலையோடு மோதும் நிலை மூன்று தடவை ஏற்படுகிறது:

அவர்கள் இருவரையும் சுமந்து சென்ற கப்பலை கிள்ர் திடீரெனத் துளைபோடத் தொடங்கினார். அதன் உரிமையாளரோ அவ்விருவரையும் கட்டணமின்றி பயணம் செய்ய அனுமதித்திருந்தார். அதற்காக அவருக்கு கைமாறு செய்வதற்கு நேர் எதிரான செயலில் கிள்ர் இறங்கினார். அவரது செயல், கப்பலில் அமைதியாகப் பயணம் செய்து கொண்டிருந்த மக்களை மூழ்கச் செய்யக் காரணமாகிவிடுமோ என்று மூஸாவுக்குத் தோன்று கிறது!

பரிசுத்தமான சிறுவன் ஒருவனை கிள்ர் கொலை செய்கிறார். அவனோ அவனுடைய தாய் தந்தையரோ மூஸாவுக்கும் கிள்ருக்கும் எவ்விதத் தீங்கும் செய்யவில்லை.

அதற்கு நேர்மாறாக- கீழே விழயிருந்த சுவர் ஒன்றை கிள்ர் சரி செய்து நிறுத்துகிறார். அதற்குக் கூலி எதுவும் வாங்கவில்லை. அந்நிகழ்ச்சி ஓர் ஊரில் நடந்தது. அவ்வூர் மக்கள் அவ்விருவருக்கும் விருந்து அளித்து உபசரிக்கவில்லை. அவர்களின் தகுதி அறிந்து நடந்து கொள்ளவில்லை.

இவை அனைத்தும் கிள்ர் மூலம் வெளிப்பட்ட நூதனமான செயல்களாகும். இவைதாம் மூஸா நபிக்கு ஆச்சரியத்தையும் திகிலையும் ஏற்படுத்துகின்றன. ஒருமுறைக்குப் பலமுறை ஆட்சேபிக்கவும் கேள்வி கேட்கவும் அவர்களைத் தூண்டுகின்றன.

அவ்விருவரையும் சுமந்து வந்த கப்பல் தொடர்பாக செய்திருக்க வேண்டிய முறை என்ன? அதனைப் பாது காக்க வேண்டும்., அதன் நலனில் அக்கரை கொண்டிருக்க வேண்டும். அதேபோல கப்பலின் உரிமையாளர் அவ்விருவருக்கும் உதவி செய்தார். அதற்குக் கைமாறாக அவரது நலனைப் பேணியிருந்திருக்க வேண்டும். நன்றி செலுத்தப்பட்டிருக்க வேண்டும்.

பரிசுத்தமான அழகிய அந்தச் சிறுவனிடம் நடந்து கொண்டிருக்க வேண்டிய முறை என்ன? அவன் மீது அன்பு செலுத்தியிருக்க வேண்டும். அவனுக்குக் கல்வியும் ஒழுக்கமும் அளித்து அவனைப் பாதுகாத்திருக்க வேண்டும்.

ஆனால் அந்தக் கிராமத்து மக்களுக்குத்தான் எவ்வித உதவியும் செய்திருக்கக் கூடாது. அவர்களின் உடைமைகளைப் பாதுகாக்க ஆவல் கொள்ளாமல் இருந்திருக்கவேண்டும். ஏனெனில் அவர்கள்தாம் மூஸா - கிள்ரிடம் மிகக்கடுமையாக மனிதப் பண்பாடின்றி கரடுமுரடாக நடந்துகொண்டார்கள். மீதமான உணவுப் பொருட்களைக்கூட அவர்களுக்குக் கொடுத்து உதவாமல் கஞ்சத்தனம் செய்தார்கள்.

---

❋ ஃகைப் எனும் சொல் பொதுவாக மனிதப் புலன்களை விட்டு மறைவாக நிற்கிற, மனிதனின் அனுபவத்திற்கும் ஆராய்ச்சிக்கும் உட்படாத சில உண்மைகளைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. எடுத்துக்காட்டாக, இறைவனின் உள்ளமை, அவனுடைய குணங்கள், மலக்குகள், வஹி எனும் இறையருட் செய்தி, சுவனம், நரகம் போன்றவை. (மொழிபெயர்த்தோன்)

[91] நூல்: புகாரி பாகம் 2 பகுதி: தஃப்சீர்

ஆனால் கிள்ரோ, அறிவார்ந்த - அனைவராலும் எதிர்பார்க்கப்படுகிற இந்த செயல்முறைக்கு மாற்றமாக நடக்கிறார்கள். இந்த மூன்று சூழ்நிலைகளிலும் அவர்கள் எடுத்த நிலைப்பாட்டை அறிவும் ஏற்றுக் கொள்வ தில்லை. தத்துவ இயலும் அதற்கு துணைவருவ தில்லை. இயல்புணர்வும் அதைச் சரிகாண்பதில்லை.

நபியும் ரஸூ லுமாகிய ரோஷமிக்கவரான மூஸா நபி அவர்களால் இந்த நூதனமிக்க நடவடிக்கைகளைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. தாம் அளித்த வாக்குறுதியை மறந்து விடுகிறார். மறுப்பையும் ஆட்சேபனையையும் வெளிப்படுத்துவதில் விரைகிறார். அவசர அவசரமாக அது பற்றி வினாத்தொடுக்கிறார்:

لَقَدْ جِئْتَ شَيْئًا نُكْرًا

"மிகவும் தீயதொரு செயலை நீர் செய்துவிட்டீரே!" [92]

## ஆச்சரியமான தத்துவங்கள்!

மூஸா நபியின் வினாக்களுக்கு பதில் அளித்து மனநிறைவு ஏற்படுத்துவதை கிள்ர் தள்ளிப்போடுகிறார். அமைதியுடனும் நிதானத்துடனும் தமது திட்டப் பணியிலேயே தொடர்கிறார். இறுதியில் பயணம் தனது நிர்ணய இலக்கை அடைந்து நிறைவடைகிறது. அதன் பிறகுதான் அம்மூன்று பிரச்னைகளுக்கு - மூஸா நபிக்கும் குர்ஆனின் இந்தக் கதையை ஒருமுறை படிக்கும் ஒவ்வொருவருக்கும் திகைப்பையும் ஆச்சரியத்தையும் ஏற்படுத்தும் அந்தப் பிரச்னைகளுக்கு கிள்ர் விளக்கம் அளிக்கிறார்!

தெளிவாகத் தெரியவரும் உண்மை இதுதான்: கிள்ர் அனைத்தையும் சரியாகச் செய்பவராகவே உபகாரி யாகவே இருந்தார். அம்மூன்று நடவடிக்கைகளிலும் நுண்ணறிவோடுதான் செயல்பட்டுள்ளார். உபகாரம் செய்ய வேண்டிய இடத்தில் உபத்திரம் செய்யவில்லை. உபத்திரத்திற்குப் பதில் உபகாரம் செய்திடவில்லை.

கப்பலில் துளைபோட்டு அதன் மூலம் கப்பலின் உரிமையாளருக்கு உபகாரம்தான் செய்தார்கள். அபகரிக் கப்படுவதில் இருந்து கப்பலைப் பாதுகாத்தார்கள். ஏனெனில் அந்தக் கப்பலுக்கு அப்பால் - அந்தக் கரையில் ஓர் அரசன் இருந்தான். குறையேதுமில்லாத நல்ல கப்பல்களையெல்லாம் அபகரித்துக் கொண்டிருந்தான். அதனால்தான் (கப்பலைத் துளைபோட்டுக் குறைப்படுத்தி அபகரிக்கப்படாமல் பாதுகாத்து) அதன் உரிமை யாளரின் உபகாரத்திற்கும் உதவிக்கும் கைமாறு செய்தார்கள் கிள்ர் அவர்கள்!

சிறுவனைக் கொலை செய்ததன் மூலம் அவனுடைய தாய் தந்தையருக்கு உபகாரம் செய்தார்கள். ஏனெ னில் அந்தச் சிறுவன் அவ்விருவருக்கும் பெரும்சோதனையாக அமைந்திடுவானோ - இருவரையும் நிராகரிப்பிலும் அழிச்சாட்டியத்திலும் ஆழ்திவிடுவானோ என்று அஞ்சப்பட்டது!

கிள்ர் சிந்தித்தார்கள்: சிறிது நேரத்திற்கு அழுவது வாழ்நாள் முழுவதும் அதன் பிறகும் அழுது கொண்டி ருப்பதை விட எவ்வளவோ சிறந்தது. மேலும் சிறுவனின் இழப்புக்கு ஈடு உண்டு. இறைநம்பிக்கைக் கும் நல்ல முடிவுக்கும் ஈடேதுவும் கிடையாது. குர்ஆன் இதனை இவ்வாறு குறிப்பிடுகிறது:

وَ أَمَّا الْغُلاَمُ فَكَانَ اَبَوَاهُ مُؤْمِنَيْنِ فَخَشِيْنَا أَنْ يُّرْهِقَهُمَا طُغْيَانًا وَ كُفْرًا فَارَدْنَا اَنْ يُّبْدِلَهُمَا رَبُّهُمَا خَيْرًا مِنْهُ زَكَاةً وَ أَقْرَبَ رُحْمًا

"(கிள்ர் கூறினார்) அந்தச் சிறுவனின் விஷயம் என்னவெனில், அவனுடைய தாய் தந்தையர் இருவரும் நம்பிக்கையாளராக இருந்தனர். அவன் தனது அத்துமீறலாலும் நிராகரிப்பினாலும் அவ்விருவருக்கும் சிரமம் கொடுப்பானோ என்று நாம் அஞ்சினோம். ஆகையால் அவர்களின் இறைவன் அச்சிறுவனுக்கு பதிலாக அவனை விடவும் சிறந்த - குடும்ப உறவுகளைப் பேணக்கூடிய பிள்ளைகளை அவர்களுக்கு வழங்கிட வேண்டுமென நாம் விரும்பி னோம் [93]

கீழே விழும் நிலையிலிருந்த அந்தச் சுவரைச் சரிசெய்து நிறுத்தினார் கிள்ர். ஏனெனில், அது நல்ல தாய் தந்தையருக்குப் பிறந்த இரு அநாதைச் சிறுவர்களுக்குச் சொந்தமான சுவர். அதற்குக் கீழே அந்தச் சிறுவர் களுக்குரிய புதையல் ஒன்று புதைக்கப் பட்டிருந்தது. திடீரென அந்தச் சுவர் இடிந்து கீழே விழுந்து விட்டால் அடியில் புதையல் இருப்பதன் இரசியம் அம்பலமாகிவிடும். திருடர்களும் கொள்ளைக்காரர்களும் அதனைச் சூறையாடி விடுவார்கள். பிறகு அந்தச் சிறுவர்கள் இருவரும் ஆதரவற்ற நிலைக்கு ஆளாக நேரிட்டு விடும்!

---

[92] **சூரத்துல் கஹ்ஃப் 74**

[93] **சூரத்துல் கஹ்ஃப் 80 - 81**

இங்கே இன்னோர் உண்மையும் தெளிவாகிறது: நல்லமல் செய்வதென்பது, உலக வாழ்விலும் மரணத்திற்குப் பிறகும் நற்பயன் வழங்க வல்லதாகும். ஒரு நல்ல மனிதனின் பிள்ளைகளையே அல்லாஹ் வீணாக்க மாட்டான் எனும்பொழுது அந்த நல்ல மனிதனை எதற்காக வீணாக்கப் போகிறான்! குர்ஆன் கூறுகிறது:

اِنَّ اللهَ لاَ يُضِيْعُ أَجْرَ الْمُحْسِنِيْنَ

“நல்ல அமல் புரிவோரின் கூலியை திண்ணமாக அல்லாஹ் வீணாக்க மாட்டான்” [94] மற்றோர் இடத்தில்,

فَاسْتَجَابَ لَهُمْ رَبُّهُمْ اَنِّى لاَ اُضِيْعُ عَمَلَ عَامِلٍ مِنْكُمْ مِنْ ذَكَرٍ أَوْ اُنْثى

“அவர்களின் ரப்பு - அதிபதி அவர்களுக்கு பதில் அளித்தான்: உங்களில் நல்ல அமல் செய்வோர் எவரது கூலியையும் - அவர் ஆணாயினும் பெண்ணாயினும் சரி - நான் வீணாக்க மாட்டேன்” [95]

நல்ல விதைகள் நல்ல விளைச்சலையே கொடுக்கும்., எவ்வாறு கெட்ட விதைகள் கெட்ட விளைச்சலைக் கொடுக்கிறதோ அதுபோல! குர்ஆன் கூறுகிறது:

وَأَمَّا الْجِدَارُ فَكَانَ لِغُلاَمَيْنِ يَتِيْمَيْنِ فِى الْمَدِيْنَةِ وَ كَانَ تَحْتَهُ كَنْزٌ لَهُمَا وَكَانَ أَبُوْهُمَا صَالِحًا فَارَادَ رَبُّكَ أَنْ يَبْلُغَا أَشُدَّهُمَا وَ يَسْتَخْرِجَا كَنْزَهُمَا رَحْمَةً مِنْ رَّبِّكَ وَمَا فَعَلْتُهُ عَنْ أَمْرِى ذَلِكَ تَأْوِيْلُ مَا لَمْ تَسْتَطِعْ عَلِيْهِ صَبْرًا

“அந்தச் சுவரின் விஷயம் யாதெனில், அது அந்த ஊரிலிருந்த இரு அநாதைச் சிறுவர்களுக்குரியது. அதன் அடியில் அவர்களுக் குரிய புதயல் ஒன்று இருந்தது. அவ்விருவரின் தந்தை நல்ல மனிதராக இருந்தார். ஆகவே அவ்விருவரும் தம் வாலிபத்தை அடைய வேண்டும் என்றும் தங்களது புதையலை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் உம் இறைவன் நாடினான். இது உம் இறைவன் புரிந்த அருளாகும். இவற்றையெல்லாம் எனது அதிகாரத் தின்படி நான் செய்யவில்லை. (அல்லாஹ்வின் ஆணையின்பேரில் தான் செய்தேன்) உம்மால் பொறுமை கொள்ள முடியாதிருந்த விஷயங்களின் உண்மைநிலை இதுதான்” [96]

## மனித அறிவு முழுமை பெறவில்லை., எல்கையை எட்ட வில்லை!

தத்துவங்கள் வெளிப்படும் பொழுது எத்துணை ஆச்சரியம்! புற வடிவத்திற்கும் யதார்த்த நிலைக்கும் அகத்திற்கும் புறத்திற்கும் எவ்வளவு பெரிய இடைவெளி! இவ்வுலக வாழ்வு ஏன் இவ்வளவு சிக்கல் நிறைந்ததாய் உள்ளது? இப்பேரண்டம் ஏன் இவ்வளவு தெளிவற்றதாய் உள்ளது? வாழ்க்கை ஏன் இவ்வளவு புதிர்கள் நிறைந்துள்ளது?

பின்னர், எனது அறிவு எல்லாப் பொருள்களையும் சூழ்ந்துள்ளது., எல்லாப் பிரச்னைகளின் யதார்த்த நிலையையும் ஆழத்தையும் அடைந்து விட்டது என்று எந்தத் துணிவோடு வாதாடுகிறான் மனிதன்!

தொடக்கத்தில் கிள்ர் உண்மையை விட்டும் வெகுதூரம் விலகிச் சென்றதாகத் தோன்றியதே! அவர்களின் போக்கு நடுநிலை தவறியதாகத் தெரிந்ததே! இறுதியில் அவர்களின் அபிப்பிராயமும் விளக்கமும் முற்றிலும் சரியாக - நீதமாக உள்ளனவே! என்ன ஆச்சரியம்!!

இதிலிருந்து தெரியும் உண்மையாதெனில், இந்த உலக வாழ்க்கை தொடர்ந்து நடைபெறக்கூடியது. ஒவ்வொரு காலத்திலும் காலத்துக்கேற்ப புதிய நிகழ்ச்சிகள் பல நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. நாள் தோறும் தனது ஆச்சரியங்களை அது வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. தன்னுடைய இரகசியங்களை காண்பித்துக் கொண்டிருக்கிறது!

இந்த உண்மையும் நிரூபிக்கப்படுகிறது: மனித அறிவுக்கு முடிவு கிடையாது. அறிவின் இறுதிநிலை நமது சக்தியை விட்டும் வெகு தொலைவில் உள்ளது.

وفَوْقَ كُلِّ ذِى عِلْمٍ عَلِيْمٌ

“அனைத்து அறிஞர்களுக்கும் மேலே ஒரு பேரறிஞன் இருக்கிறான்” [97]

---

[94] **சூரத்து யூசுப் 90**
[95] **சூரத்து ஆலி இம்றான் 90**
[96] **சூரத்துல் தஹ்ஃப் 82**
[97] **சூரத்து யூசுப் 76**

# உலகாயதச் சிந்தனைக்கு விடுக்கப்படும் சவால்!

மூஸா - கிள்ர் சரிதையும் அதன் உயிரோட்டமிக்க கருத்துகளும் தத்துவங்களும் உலகாயதச் சிந்தனைக் குச் சவால் விடுக்கின்றன. இந்த உலகாயதக் கோட்பாடு பிடிவாதமாக வாதிடக்கூடிய கருத்து இதுதானே:

எதை மனிதன் 'வாழ்க்கை' எனப் புரிந்து வைத்துள்ளானோ அதுதான் வாழ்க்கை. இந்தப் பேரண்டத்தைப் பற்றிய அனைத்து விவரங்களும் மனித அறிவுக்கு வந்துவிட்டன. கண்களுக்குத் தெரிவது எதுவோ அதுதான் யதார்த்த நிலை. மனித வாழ்விலும் சரி, பேரண்டம் முழுவதிலும் சரி வெளிரங்கத்தை மட்டும் உரைக் கல்லாகக் கொண்டு தீர்வு காண்பது சரிதான்.

இந்த உலகத்தை நிர்வாகம் செய்யும் பொறுப்பை மனித அறிவிடம் ஒப்படைக்கலாம்., சட்டம் வகுப்பதற் கான தகுதிகள் மனித அறிவுக்கு உண்டு. ஏனெனில் கல்வி, விஷயஞானம், ஆய்வாற்றல் அனைத்திலும் மனி தன் முழுமை பெற்று விட்டான். யதார்த்தநிலையையும் விஷய ஞானத்தின் அடிஆழத்தையும் அவன் அடைந்து விட்டான்., பேரண்டத்தின் உண்மை நிலைமைகளை எட்டிப்பிடித்துவிட்டான் என்று தான் பிடிவாதமாகக் கூறுகிறது இந்த உலகாயதச் சிந்தனை!

இந்தச் சிந்தனைதானே உலகாயதத் தத்துவங்கள் அனைத்திற்கும் அடிப்படை! தற்கால நவீனக் கலாச் சாரமும் இதே சிந்தனை மற்றும் கொள்கை மீதுதானே அமைந்துள்ளது!

இந்தக் குகை அத்தியாயமும் அது வழங்கும் கருத்துகளும் பல்வேறு வசனங்களும் இந்த அடிப்படையைத் தான் தகர்க்கின்றன. குறிப்பாக இந்த மூஸா - கிள்ர் சரிதையும் உலகாயதச் சிந்தனையைத்தான் தகர்க் கிறது. அதன் கட்டிடத்தைத்தான் வீழ்த்துகிறது!

மூஸா நபியை நோக்கி கிள்ர் இவ்வாறு கூறிய கூற்றுடன் இந்தச் சரிதை முடிவடைகிறது:

ذَٰلِكَ تَأْوِيلُ مَا لَمْ تَسْتَطِعْ عَلَيْهِ صَبْرًا

"உம்மால் பொறுமை கொள்ள முடியாதிருந்த விஷயங்களின் தஃவீல் - யதார்த்த நிலை இதுதான்" [98]

குர்ஆனின் வழக்கில் தஃவீல் என்றால் யதார்த்த நிலை விளக்கம் என்று பொருள். [93]

இவ்வாறாக மனிதன் அவசரப்படுகிறான்., மறுக்கிறான்., தவறு கிறான்! இறுதியாக யதார்த்தநிலை அவ னுக்குத் தெளிவாகிறது! விளக்கம் அவனிடம் வருகிறது!

இந்தக் குகைஅத்தியாயத்தின் நான்காவது சரிதை, ஒரு மாமனிதரின் சரிதையாகும். இதுவே இறுதியான சரிதை. அவரிடம் ஈமான் - இறைநம்பிக்கையும் நற்செயல் புரியும் நல்லியல்பும் மிகையான ஆற்றல்களும் இருந் தன. மனிதனின் நல்வாழ்வுக்காகப் உருவாக்கப்பட்டிருந்த அனைத்து ஆற்றல்களையும் சக்திகளையும் அவர்

---

[98] சூரத்துல் கஹ்ஃப் 82

[93] பார்க்க: இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் தஃப்ஸீர் சூரத்தில் இக்லாஸ். -

**(இங்கு தஃப்ஹீமுல் குர்ஆன் தஃப்ஸீரில் இருந்து இந்த விளக்கத்தையும் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். அது வருமாறு:)**

**கிள்ர் செய்த இந்த மூன்று செயல்களும் அல்லாஹ்வுடைய கட்டளையின் பேரில் செய்யப்பட்டவையாகும் என்பது இந்த வரலாற் றிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.**

**அதே நேரத்தில் இதுவும் தெளிவான விஷயம்தான்: அதாவது, அவற்றில் முதல் இரண்டு செயல்களைச் செய்வதற்கு - இறை வனால் மனிதனுக்கு வழங்கப் பட்ட எந்த ஷரீஅத்திலும், எந்த மனிதனுக்கும் எப்பொழுதும் அனுமதி வழங்கப் படவில்லை. எந்த அளவுக்கு எனில், பிறருக்குச் சொந்தமான கப்பலை - இன்னும் சிறிது தூரம் சென்றால் யாரேனும் ஒருவன் அதைப் பறித்துக் கொள்வான் எனும் அடிப்படையில் பழுதுபடுத்திவிடுவதற்கும் - ஒரு சிறுவனை, அவன் பெரியவனாக வளர்ந்து அக்கிரமக்காரனாகவோ - நிராகரிப்பாளனாகவோ ஆகிவிடலாம் எனும் அடிப்படையில் கொலை செய்வதற்கும் இல்ஹாமின் (உள்ளுதிப்பின்) அடிப்படையில்கூட எந்த மனிதனுக்கும் அனுமதி இல்லை. ஆகையால் பின்வரும் விஷயத்தை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை:**

**அதாவது, கிள்ர் அவர்கள் இந்தச் செயல்களை ஷரீஅத் சட்டங்களின் அடிப்படையில் செய்யவில்லை. மாறாக இறைக் கட்டளைப் படியே செய்துள்ளார்கள்.**

**அல்லாஹ், மனிதர்களை விடுத்து வேறொரு வகைப் படைப்புகளின்மூலம் இக்கட்டளைகளை நிறைவேற்றும் வேலையை வாங்கு கிறான். இந்த வரலாற்றின் தன்மையிலிருந்தே பின் வரும் விஷயம் தெளிவாகிறது: அதாவது, அல்லாஹ், மூஸா (அலை) அவர் களைத் தன்னுடைய விஷேச அடியாரிடம் அனுப்பி வைத்த தன் நோக்கம் பின்வரும் விஷயத்தை மூஸா (அலை) அவர்களுக்கு திரை அகற்றிக் காண்பித்துக் கொடுக்க வேண்டும் என்பதுதான்:**

**இறைநாட்டத்தின் அடிப்படையில் இயங்குகிற இந்த உலகில் என்னென்ன நலன்களின் அடிப்படையில் பணிகள் நடைபெறு கின்றனவோ அவற்றைப் புரிந்து கொள்வதற்கு மனிதனால் முடியாது! கிள்ர் அவர்களைக் குறிப்பிடுவதற்கு அடியார் எனும் சொல்லை அல்லாஹ் பயன்படுத்தியிருப்பது மட்டும் அவர் ஒரு மனிதர்தான் என்பதற்குப் போதுமான ஆதாரமாகாது. அத்தியாயம் 21:26 இலும் 43:19 மற்றும் பல இடங்களிலும் வானவர்களைக் குறிப்பதற்கும் இந்தச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. (மொழிபெயர்த்தோன்)**

கைவசப்படுத்தி இருந்தார். மேலும் அவரது காலத்திய எல்லா விதமான வசதி வாய்ப்புகளையும் பயன்படுத்தி வாழும் வசதியைப் பெற்றிருந்தார்.

இவை எல்லாவற்றையும்- குழப்பமும் அழிச்சாட்டியமும் கொடுமையும் இழைக்கும் வெற்றியாளர்களைப் போல் அல்லாமல், மக்கள் நலனிலும் மனித குலத்திற்குச் சேவைக்காகவும் சீரான கலாச்சாரத்தை கட்டியெழுப்ப வுமே பயன்படுத்தினார் அந்த மாமனிதர்!

## துல்கர்னைன் சரிதை

துல்கர்னைன் என்பவர் யார்? என்பது குறித்து கருத்து வேறுபாடு உள்ளது. அவர் சிக்கந்தர் மக்தூனி (அலெக்சாண்டர்) என்று ஒரு பிரபலமான கருத்து ஒன்று உண்டு. இதற்கு இமாம் ஃபக்ருத்தீன் ராஸி (ரஹ்) அவர்கள் ஆதரவு தெரிவித்துள்ளார்கள். பெரும்பாலான இஸ்லாமிய அறிஞர்களும் இவ்வாறே கூறுகிறார்கள். ஆயினும் இது ஆதாரமில்லாத கருத்து ஆகும்.

ஏனெனில் துல்கர்னைன் மன்னரின் நடைமுறைகளைப் பற்றி குர்ஆன் கூறுகிற தன்மைகள் - உதாரணமாக, ஈமான் எனும் இறைநம்பிக்கை, நீதிநெறி, வெற்றிகொண்ட மக்களைக் கருணையுடனும் நீதியுடனும் நடத்தி யது, பெருஞ்சுவர் கட்டியெழுப்பியது போன்ற தன்மைகள் சிக்கந்தர் மக்தூனியிடம் முற்றிலும் காணப்பட வில்லை.

சிக்கந்தர் எனும் அலெக்சாண்டரின் வரலாற்றையும் போர்களில் அவர் கடைப்பிடித்த நடைமுறைகளையும் சரியாக அறியாத காரணத்தால்தான் இந்தக் கருத்து பெரும்பாலும் உருவாகியிருக்க வேண்டும்.

தற்கால அறிஞர்களில் [94] சிலர், சைரஸ் **(Syrus)** என்று கிரேக்கர்களும் கூரஸ் என்று யூதர்களும் கீஃகுஸ்ரூ என்று அரேபிய வரலாற்று ஆசிரியர்களும் அழைக்கிற மனிதர்தான் துல்கர்னைன் என்பதாகக் கூறு கிறார்கள்.

---

[94] **குறிப்பாக இஸ்லாமிய எழுத்தாளரும் இந்திய குடியரசின் முன்னாள் கல்வி அமைச்சருமான மௌலானா அபுல் கலாம் ஆஸாத் அவர்கள் இது குறித்து விரிவாக ஆராய்ந்துள்ளார்கள். வரலாற்று விளக்கங்களையும் யூதர்களின் நூல்களில் இருந்து பல சான்று களையும் கொடுத்துத் தமது கருத்துக்கு வலிமை சேர்த்துள்ளார்கள். தர்ஜுமானுல் குர்ஆன் எனும் நூலின் இரண்டாம் பாகத்தில் குகைஅத்தியாயத்தின் விரிவுரையில் அவர்கள் எழுதியுள்ள கருத்தை இங்கே சுருக்கமாகத் தருகிறோம்:**

**கி.மு. 559 ஆம் ஆண்டில் சைரஸ் என்ற ஒரு மன்னர் அசாதாரணமான சில தன்மைகளுடன் உலகிற்கு அறிமுகமாகிறார். திடீரென அனைத்துலகின் பார்வையும் அவர் பக்கம் திரும்புகிறது.**

**முன்பு ஒரு காலத்தில் இரு நாடுகளாகப் பிரிந்து கிடந்தது பாரசீகம். அதன் தென்பகுதி பாரிஸ் என்றும் வடமேற்குப் பகுதி மீடியா என்றும் வழங்கப்பட்டது. இதனையே மாஹாத் என்று அரபு வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். சைரஸ் மன்னர் இவ்விருபெரும் தேசங்களையும் ஒருங்கிணைத்து மாபெரும் பாரசீக அரசை நிறுவினார். பின்னர் அவருடைய வெற்றிகளும் வீர தீரச் செயல்களும் தொடர்ந்தன. அவை அனைத்தும் - அன்பு, நீதி நேர்மை, அநீதிக்குள்ளானோருக்குத் துணைபுரிதல் போன்ற நற் பண்புகளோடு இணைந்திருந்தன. பன்னிரண்டு ஆண்டுகள்கூடச் செல்லவில்லை. அவருடைய காலடியில் -கருங் கடலுக்கும் பாக்டீரியா நாட்டுக்கும் மத்தியிலிருந்த ஆசியாக் கண்டத்தின் அனைத்து நாடுகளும் அரசுகளும் வீழ்ந்தன!**

**வரலாற்றுக் குறிப்பில் பதிவாகியுள்ளது: அவர் ஒருமுறை மேற்கு நோக்கிப் போர் தொடுத்து Asia minor - சிற்றாசியாவின் மேற்குக் கோடிவரை சென்றார். லீடியா நாட்டு மன்னர் கிரோயிஸஸ் (Croesus) என்பருடன் போர் தொடுத்தார். லீடியா என்பது சிற்றாசியாவின் மேற்கு மற்றும் தெற்குப் பகுதியைக் குறிக்கும். இப்பகுதி கிரேக்கக் கலாச்சாரத்தின் ஆசியப் பகுதிக் கேந்திரமாகத் திகழ்ந்தது. சார்ட்டிஸ் (Sartis) எனும் நகர் அதன் தலைநகர். சைரஸ் மன்னர் ஆட்சியில் அமர்ந்த பின் முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்த போர், லீடியா நாட்டுடன் நடந்த இந்தப் போர்தான். இதில் அவர் வெற்றிவாகை சூடினார்.**

**இதன் பின்னர் சிற்றாசியாவின் மேற்குக் கரையிலிருந்து கருங்கடல் வரை இருந்த அனைத்துப் பகுதிகளும் அவரது ஆதிக்கத்தின் கீழ் வந்துவிட்டன. அவர் தொடர்ந்து முன்னேறிக் கொண்டே சென்றார். மேற்குக் கோடியிலுள்ள கடற்கரை வரை வந்தார். கடலில் பேரலைகள் எழுந்து மோதிக்கொண்டிருந்தன. சூரியன் அவற்றினூடே மறைவதுபோல் அவருக்குத் தென்பட்டது.**

**இயற்கையாகவே அவரது பயணம் இங்கு வந்து தடைபட்டுவிட்டது. ஏனெனில் கடல்அலைகளினூடே எதிர்நீச்சல் போட்டுப் பயணம் மேற்கொள்ளத்தக்க வச திகள் அவரிடம் இருக்கவில்லை.**

**சார்டிஸ் நகரைக் கைப்பற்றிய பிறகும் அவர் முன்னேறிச் சென்றிருக்கலாம். அப்பொழுது சமர்னாவுக்கு அருகில் அமைந்திருக்கும் கடலை (Aegean) அவர் அடைந்திருக்கலாம். அங்கே கடல் ஒரு நதிபோல் காட்சி தருவதையும் அவர் கண்டிருக்கக் கூடும். மாலை நேரத்தில் கதிரவன், அக்கடற்கரையின் படுகையில் நிறைந்திருந்த சேற்றில் மறைவதுபோல் அவருக்குத் தோற்றமளித்திருக்கலாம். இதையே குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது:**

وَجَدَهَا تَغْرُبُ فِى عَيْنٍ حَمِئَةٍ

**“சூரியன் சேறு நிறைந்த கரு நீர் தடாகத்தில் மறைந்திடக் கண்டார்”**

இந்த இடத்தில் பேராசிரியர் செய்யித் குத்ப் (ரஹ்) அவர்களின் கருத்துக்கு நாம் உடன்படுகிறோம். அதனை அப்படியே இங்கே தருவது பொருத்தமாக இருக்கும். **ஃபீ ழிலாலில் குர்ஆன்-திருக் குர்ஆனின் நிழலில்** எனும் திருமறை விரிவுரை நூலில் இவ்வாறு அவர்கள் எழுதுகிறார்கள்:

"துல்கர்னைன் என்பவர் யார்? அவர் வாழ்ந்த காலம் எது? வசித்த இடம் எது? என்பன பற்றி குர்ஆன் எதுவும் குறிப்பிடவில்லை. வரலாறுகள் தொடர்பாக திருக்குர்ஆன் கடைப்பிடிக்கும் பொதுவான பாணியாகும் இது. வரலாற்றைப் பதிவு செய்வது (குர்ஆனின்) குறிக்கோள் அல்ல. வரலாற்றில் இருந்து பயன் பெறும் படிப்பினைதான் இலட்சியம். காலத்தையும் இடத்தையும் வரையறை செய்து கூறாமலேயே பெரும்பாலும் படிப்பினைகள் கிடைக்கப் பெற்றுவிடுகின்றன.

வரலாற்றுத் தொகுப்பு சிக்கந்தர் துல்கர்னைன் என்ற பெயரில் மன்னர் ஒருவரை அறிமுகப்படுத்துகிறது. ஆனால் அவர், திருக் குர்ஆனில் கூறப்பட்டுள்ள துல்கர்னைன் அல்ல என்பது திண்ணம். ஏனெனில் கிரேக்க நாட்டைச் சேர்ந்த சிக்கந்தர் என்பவர் சிலைகளை வழிபடும் மனிதராக இருந்தார். குர்ஆன் குறிப்பிடும் இந்த துல்கர்னைன் ஓரிறை நம்பிக்கையாளர். ஏகத்துவவாதி. மரணத்திற்குப் பின்னர் (மறுவுலகில்) மனிதர்கள் எழுப்பப்படுவதில் உறுதிகொண்டிருந்தவர்!

அபூ ரைஹான் அல்-பைரூனி அவர்கள் الآثار الباقية عن القرون الخالية - முற்காலச் சமூகங்களும் அடையாளச் சின்னங்களும் என்கிற நூலில் குறிப்பிடுவதாவது:

"குர்ஆனில் கூறப்பட்டுள்ள துல்கர்னைன் ஹிம்யர் வம்சத்தைச் சேர்ந்தவர். அதற்கு அவரது பெயரே ஆதாரம். ஹிம்யர் வம்சத்து மன்னர்களைத்தான் தூ என்ற துணைச் சொல்லுடன் குறிப்புப் பெயர் சூட்டி அழைப்பது வழக்கம். தூ நவாஸ், தூ நைரைன் என்பன போன்று! (தூ - அல் கர்னைன் - துல்கர்னை னன்)

துல்கர்னைன் உடைய அசல் பெயர் **அபூ பக்ர் இப்னு அஃப்ரீ கஸ்.** அவர் தன்னுடைய சைனியங்களுடன் மத்திய வெண் கடலின் கரையோரப் பகுதிகள் வரையிலும் சென்றுள்ளார். தூனிஷ், மராக்குஷ் போன்ற நாடுகளையும் கடந்து சென்றுள்ளார். இவர்தான் ஆஃப்ரிக்கா பட்டணத்தை நிறுவினார். அதனால்தான் அவரது பெயரைத் தழுவியே அக்கண்டம் முழுவதும் ஆப்ரிக்கா என்று அழைக்கப்படலாயிற்று! துல்கர்னைன் என்று

---

இரண்டாவதாகக் கிழக்கு நோக்கிப் போர் தொடுத்தார். இந்தப் போரில் மக்ரான், பல்க் ஆகிய நகரங்களுக்குச் சென்றார். மேலும் நாடோடிகளாய் வாழ்ந்த -நகரை விட்டும் தூரமாக இருந்ததால் சூரியனிலிருந்து பாதுகாக்கக்கூடிய எந்த ஒரு தடுப்பையும் பெற்றிராத நாகரிகமில்லாத சில கூட்டத்தினரை வென்ற டக்கினார். இதையே குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது:

وَجَدَ هَا تَطْلُعُ عَلَى قَوْمٍ لَمْ نَجْعَلْ لَهُمْ مِنْ دُوْنِهَا سِتْرًا

"சூரிய வெப்பத்தை விட்டும் தடுக்கக்கூடிய எந்தத் தடுப்பும் கிடைக்கப் பெறாத (நாடோடிகளாய் வாழ்ந்த) சில சமுதாயத்தினர் மீது சூரியன் உதித்து வரக் கண்டார்"

பிறகு பாபிலோன் எனும் வலிமைமிக்க நகர் மீது போர் தொடுத்தார். அங்கே அரசோச்சிக் கொண்டிருந்த பக்த் நஸ்ர் மன்னனின் அநீதியால் கொடுமைக்கும் சிறைப்பிடிப்புக்கும் ஆளாகி இழிவுபடுத்தப்பட்டு வந்த பனூ இஸ்ராயீல் மக்களைக் காப்பாற்றினார். இதனால்தான் சைரஸ் மன்னரை யூதர்களைப் பாதுகாகத்தவர் என்று வரலாறு போற்றுகிறது. யூதர்களும் அவரை நா இனிக்கப் புகழ்கிறார்கள். நெஞ்சார நினைவு கூர்கிறார்கள். தௌராத் வேதத்தில் பனூ இஸ்ராயீல்கள் பற்றி வந்துள்ள முன்னறிவிப்புகளை இதன் மூலம் அவர் மெய்ப்படுத்தினார்.

மூன்றாவதாக வடக்கு நோக்கிப் போர் தொடுத்தார். இப்பொழுது அமைதிப் பெருங்கடலின் இடது பக்கமாக அவரது பயணம் அமைந்திருந்தது. இதில் கஃப்காஸ் (Cauasus) எனும் மலைத்தொடர் வரையில் சென்றடைந்தார். இம்மலை களுக்கிடையே ஒரு கணவாய் இருந்தது. அதன் வழியாக யஃஜூ ஜ் மஃஜூ ஜ் என்ற கூட்டத்தினர் அங்கிருந்த பகுதிகளில் அராஜகம் விளைவித்துக் கொண்டிருந்தார்கள். அந்த இடத்தில்தான் சைரஸ் மன்னர் பெருஞ்சுவர் ஒன்றை எழுப்பினார்.

சைரஸ் மன்னர் கி.மு. 529 ஆம் ஆண்டில் எதிர்பாராத விதமாக மரணம் அடைந்தார். கி.பி. 1838 ஆம் ஆண்டில் இஸ்தகர் (Pasar Gadae) என்ற நகரின் இடிபாடுகளுக்கிடையே ஒரு வெண்கலச் சிலை கண்டெடுக்கப்பட்டது. அதன் தலையில் ஆடுகளுக்கு இருப்பது போன்று இரண்டு கொம்புகள் இருந்தன. மீடியா - பாரீஸ் என்ற இரு நாடுகளையும் அவர் ஒரே போரரசாக இணைத்து ஆட்சி செய்ததை எடுத்துரைக்கும் வகையில் அந்த இரு கொம்புகளும் அமைந்திருந் தன. அதனால்தான் துல் கர்னைன் (கர்ன்: கொம்பு. துல்கர்னைன் என்றால் இரு கொம்புகள் உடையவர்) என்று அவருக்குப் பெயர் வழங்கலாயிற்று.

தற்கால வரலாற்றாசிரியர்கள் சைரஸ் மன்னரின் தர்ம குணத்தையும் திறமை யையும் நீதியும் சிறப்பும்மிக்க அவரது ஆளுமையையும் வெகுவாகப் புகழ்கிறார்கள்.

இது பற்றி மேலும் அறிய விரும்புவோர் பேராசிரியர் (B. Gurundi) என்பாரின் கட்டுரையைப் பார்க்கவும். (Universal History Of World, By J.A. Hammerton) எனும் நூலில் இரண்டாம் பாகத்தில் அந்தக் கட்டுரை இடம் பெற்றுள்ளது.

அவருக்குப் பெயரிட்டதன் காரணம் சூரியனின் கர்னைன் - இரு கொம்புகளையும் அவர் அடைந்தார் என்பதாகும்"

அபூ ரைஹான் கூறுவது சரியான கருத்தாக இருக்கலாம். ஆனால் அது எவ்வளவு தூரம் ஆதாரப் பூர்வமானது என ஆராய்வதற்கான சாதனங்கள் நம்மிடம் இல்லை. அதற்குக் காரணம் இதுதான்: அதாவது, இது வரையில் தொகுக்கப்பட்டுள்ள வரலாற்றுத் தொகுப்புகளில் துல்கர்னைன் பற்றி ஆராய்வதற்குச் சாத்தியப் படுவதில்லை. ஆம், எந்த துல்கர்னைன் உடைய வரலாற்றில் இருந்து ஒருசில குறிப்பை மட்டுமே குர்ஆன் கூறுகிறதோ -அதன் நிலையும்கூட நூஹ் நபி, ஹூத் நபி, ஸாலிஹ் நபி ஆகிய நபிமார்களின் கூட்டத்தினர் வரலாறுகள் உள்ளிட்ட திருக்குர்ஆனில் இடம் பெற்றுள்ள பெரும்பாலான வரலாறுகளைப் போன்றதாகவே - படிப்பினைக்குரிய ஒருசில பகுதிகளை மட்டுமே குறிப்பிடுவதாகவே இருக்கிறதோ அந்த துல்கர்னைன் பற்றி இந்த வரலாற்றுத் தொகுப்புகளில் ஆய்வு செய்வதற்குச் சாத்தியமில்லை.

வரலாற்றை மனித இனத்தின் வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் வரலாற்றுத்துறை மிகவும் புதியதாகும். மிகமிகப் பிந்திய காலத்தில் உருவானதாகும். வரலாறு முறையாகத் தொகுக்கப்படுவதற்கு முன் உலகில் எவ்வளவோ நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. அவை பற்றி எந்தத் தகவலும் 'வரலாற்றில்' இடம்பெற வில்லை. எனவேதான் இவை குறித்து விளக்கம் தரும் தகுதி உடையதாக வரலாற்றுத் தொகுப்பு இல்லை!

தௌராத் வேதம், மாற்றங்களை விட்டும் திரிபுகள் மற்றும் புதிய சேர்க்கைகளை விட்டும் பாதுகாக்கப் பட்டதாக இருந்திருந்தால் இதுபோன்ற வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு நம்பத்தகுந்த சான்றாக அது திகழ்ந் திருக்கும். ஆனால் புராணச்செய்திகள் பல தௌராத் வேதத்தை சூழ்ந்திருக்கின்றன. அவை அனைத்தும் பொய்யானவை என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

மேலும் ஆதாரமற்ற அறிவிப்புகள் பல தௌராத்தில் நிறைக்கப்பட்டுள்ளன. அவை யாவும்- இறையருட்செய்தி எனும் அசல் வஹியிக்கும் கூடுதலாகச் சேர்க்கப்பட்டவை என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இத்தகைய காரணங்களால் தன்னில் இடம் பெற்றுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளுக்கேகூட உறுதியான மூலாதாரமாக தௌராத் வேதம் கருதப்படவில்லை.

இப்பொழுது மாற்றங்கள்,திரிபுகளை விட்டும் பாதுகாக்கப்பட்டதாகத் திகழும் குர்ஆன் மட்டும்தான் தன்னில் (அதாவது குர்ஆனில்) இடம் பெற்றுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளுக்குரிய தனிப் பட்ட ஆதாரமாகத் திகழ்கிறது! திருக்குர்ஆனைக் குறித்து வரலாற்றிடம் விளக்கம் கேட்பது கூடாது என்பது மிகவும் வெளிப்படை யான உண்மையாகும். அதற்கு தெளிவான இரு காரணங்கள் உள்ளன:

1) வரலாற்றுத்துறை புதிதாகத் தோன்றிய ஒன்றாகும். மனித வரலாற்றில் நிகழ்ந்த எத்தனையோ நிகழ்ச்சிகள் வரலாற்றுக்கு எட்டாமல் போய்விட்டன. அவை பற்றி எதுவும் அறியப்படவில்லை. இது ஒருபுறம் இருக்க - இப்படி வரலாற்றில் எந்தத் தகவலும் இல்லாதுபோன நிகழ்ச்சிகள் சிலவற்றை குர்ஆன்தான் எடுத் துரைத்துக் கொண்டிருக்கிறது!

2) வரலாற்றுத் தொகுப்பு இத்தகைய நிகழ்ச்சிகள் சிலவற் றைப் பாதுகாத்துத் தந்திருந்தாலும்கூட அது மனிதனின் குறைபட்ட பணிகளுள் ஒன்றுதான். எனவே மனிதனின் பணிகளில் ஏற்ப டுகின்ற குறைபாடு, தவறு, திரிபு போன்றவை வரலாற்றுத் தொகுப்பிலும் ஏற்படத்தான் செய்யும்.

நமது காலத்தில் நாம் கண்ணெதிரில் பார்க்கத்தான் செய்கிறோம். தகவல் தொடர்பு சாதனங்களும் ஆய்வுக் கருவிகளும் பெருகியுள்ள நிலையில் ஒருசெய்தி - ஒருநிகழ்ச்சி பற்றி எத்தனை எத்தனை விதங்களில் தகவல் கொடுக்கப்படுகிறது! எத்தனை முரண்பட்ட கோணங்களிலிருந்து அது பார்க்கப்படுகிறது! எத்தனை முரணான விளக்கங்கள் அதற்குக் கொடுக்கப்படுகிறது! இவை போன்ற குறைபாடுகளிடையேதான் வரலாறு எழுதப்படுகிறது! அதன் பிறகு ஆய்வு செய்தல்,நுட்பமாக ஆராய்ச்சி செய்தல் எனும் பெயரில் என்னதான் விளக்கம் அளித்தாலும் என்ன பயன் ஏற்பட்டுவிடப் போகிறது!

எனவே குர்ஆன் எடுத்துரைக்கின்ற வரலாற்றுச் சரிதைகள் குறித்து வரலாற்றிடம் விளக்கம் கேட்க வேண்டும் என்பதை - பொதுவாக மக்கள் ஏற்றுக்கொண்டுள்ள கல்வி ரீதியான சட்ட திட்டங்களே நிராகரித்து விடுகின்றன., தீர்க்கமானதொரு முடிவைத் தரக்கூடியது குர்ஆன்தான் என்கிற கொள்கை அதனை நிராகிப்ப தற்கு முன்னர்! எனவே குர்ஆன் மீது நம்பிக்கை கொண்டவனும் அதனை ஏற்றுக்கொள்ளமாட்டான் என்பது போல் கல்வி ஆராய்ச்சித் துறைச் சாதனங்களை நம்பியவனும் ஒப்புக்கொள்ளமாட்டான். அவ்வாறு கூறுவது வீண்வாதம் என்பதைத் தவிர வேறில்லை!

அன்று மாமன்னர் துல்கர்னைன் பற்றி மக்கள் வினவினார்கள். நபி (ஸல்) அவர்களிடம் கேள்வி கேட்டார் கள். எனவே அவரது வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்ட இந்த வசனங்களை அல்லாஹ் தன்னுடைய தூதருக்கு வஹி அனுப்பினான். இந்த வரலாறு தொடர்பாக குர்ஆனைத் தவிர வேறு மூலாதாரம் நம்மிடம்

இல்லை. எனவே எந்த விவரமும் இல்லாமல் இந்த வரலாற்றில் விஷயங்களைச் சுயமாக அதிகப்படுத்திக் கூறும் அதிகாரம் நமக்கு இல்லை. குர்ஆன் விளக்க உரை நூல்களில் ஏராளமான கருத்துகள் இடம் பெற்றுள்ளன. அவற்றின் மீது உறுதியான நம்பிக்கை கொள்ளமுடியாது. எச்சரிக்கையுடன்தான் அவற்றை அணுகிட வேண்டும். ஏனெனில் இஸ்ராயீலிய்யாத் எனும் யூதக் கட்டுக்கதைகளும் புராணங்களும் அவற்றில் நிறைந்துள்ளன " [95]

## சீர்திருத்த நோக்குடன் ஆட்சி செய்த சிறந்த மன்னர்!

துல்கர்னைன் என்பவர் இன்னார்தான் என்று கூறும் அளவுக்கு- திருக் குர்ஆனில் வந்துள்ள விவரங்களை எல்லாம் அவர் மீது பொருத்த முடியும் என்கிற அளவுக்கு வரலாற்றின் ஒளியில் ஒரு குறிப்பிட்ட மனிதர் நமக்குக் கிடைத்தாலும் சரி, கிடைக்கா விட்டாலும் சரியே, குர்ஆனை ஓதுபவருக்கு அதனால் இடையூறோ குறைபாடோ ஏற்படப்போவதில்லை., இந்த வரலாற்றுத் தொகுப்பு குறைந்த அளவில்தானே நமக்குக் கிடைத்துள்ளது. அந்த அளவும்கூட மிகவும் பிற்காலத்தில் தொகுக்கப்பட்டதுதான். அப்படிப்பட்ட வரலாற்றுத் தொகுப்பின் மீது நம்பிக்கை கொள்வதும் கடினம்! அதை வைத்துக்கொண்டு எந்த ஒரு கருத்தையும் உறுதிப்படுத்துவதும் சிரமம்!

ஆனால் துல்கர்னைன் மாமன்னர் பற்றித் தெரிய வேண்டிய அனைத்துத் தன்மைகளும் அவர் பெற்றிருந்த சிறப்புகளும் நம் முன்னே தெளிவாக உள்ளன. அல்லாஹ் அவருக்கு நல்லாற்றலையும் எல்லா விதமான வாழ்க்கைச் சாதனங்களையும் வழங்கியிருந்தான். உயர்ந்த ஊக்கத்தையும் சிறப்புக்குரிய ஆசைகளையும் கொடுத்திருந்தான்.

آتَيْنَاهُ مِنْ كُلِّ شَيْءٍ سَبَبًا فَاَتْبَعَ سَبَبًا

"மேலும் அவருக்கு நாம் எல்லா விதமான சாதனங்களையும் வாய்ப்புகளையும் வழங்கியிருந்தோம். அவர் (ஒரு முக்கியமான காரி யத்திற்காக மேற்கு நோக்கிப்) புறப்பட்டார்" [96]

அவரது வெற்றியின் சுற்றளவு விரிவானதாய் இருந்தது. அது கிழக்கின் கோடியை - உதய கிரியை அடைந்திருந்தது. மேற்கின் கோடியாகிய அஸ்தகிரியையும் தொட்டிருந்தது. அவர் தன்னுடைய வெற்றிகளிலும் வீரதீரச் செயல்கள் அனைத்திலும் உயர்நெறி பரப்பும் உத்தமராகத் திகழ்ந்தார். சத்தியத்திற்குத் துணை நிற்பவராகவும் பலவீனப்பட்ட மக்களுக்கு உதவி புரிபவராகவும் வலிமைமிக்க முரடர்களை அடக்கக்கூடியவராகவும் விளங்கினார். இத்தகைய செயல்பாட்டிற்காக அவர் வகுத்துக்கொண்ட அடிப்படைத்திட்டம் என்ன தெரியுமா? அவர் கூறியதாகக் குர்ஆன் குறிப்பிடுகிறது:

قَالَ أَمَّا مَنْ ظَلَمَ فَسَوْفَ نُعَذِّبُهُ ثُمَّ يُرَدُّ اِلَى رَبِّهِ فَيُعَذِّبُهُ عَذَابًا نُكْرًا وَ مَنْ آمَنَ وَ عَمِلَ صَالِحًا فَلَهُ جَزَاءً الْحُسْنَى وَسَنَقُوْلُ لَهُ مِنْ أَمْرِنَا يُسْرًا

"அவர் கூறினார்: யாரேனும் கொடுமை புரிந்தால் அவரை நாம் நிச்சயம் தண்டிப்போம். பிறகு தன்னுடைய இறைவன் பக்கம் அவர் கொண்டு செல்லப்படுவார். அவனும் இதனினும் கடுமையாக அவரைத் தண்டிப்பான். ஆனால் எவர் நம்பிக்கைகொண்டு நற்செயல் புரிகிராறோ அவருக்கு மிகஅழகிய கூலி உண்டு. மேலும் அவருக்கு நாம் நமது எளிதான கட்டளைகளையே கூறுவோம்" [97]

பாருங்கள்! எத்துணை சிறப்பான திட்டம்! எவ்வளவு நீதமிக்க செயல் வடிவம்! அவரிடம் அமைந்திருந்த குணமும் நடைமுறையும் எத்துணை நேர்மையானவை!

இத்தகைய வெற்றிகளுக்கும் வீரதீரச் செயல்களுக்கு நடுவே அவர் ஒரு சமூகத்தாரைக் கடந்து செல்ல நேரிட்டது. அவர்கள் இரண்டு மலைகளுக்கு மத்தியில் அமைந்திருந்த ஒரு கணவாயில் வாழ்ந்துவந்தார்கள். நிரந்தரமானதோர் ஆபத்தில், நீடித்த மனக் கலக்கத்தில் அவர்கள் சிக்கியிருந்தார்கள். அந்த மலைகளுக்கு

[95] நூல்: ஃபீ ழிளாலில் குர்ஆன் பாகம் 6 பதிப்பு 5 பக்கம் 8 - 10
[96] சூரத்துல் கஹ்ஃப் 84

[97] சூரத்துல் கஹ்ஃப் 87 - 88

அப்பால் வசித்துவந்த காட்டுவாசிகளான ஒரு நாடோடிக் கூட்டத்தாரின் தாக்குதல்களுக்கு இலக்காயிருந் தார்கள்! அந்தக் கூட்டத்தினரையே குர்ஆனும் ஏனைய மறைநூல்களும் யஃஜூஜ் - மஃஜூஜ்[98] கூட்டத்தினர் என்று வர்ணிக்கின்றன. இந்தக் கூட்டத்தார் நீடித்த பூசலுக்கும் நரந்தரமான மோதலுக்கும் ஆளாகியிருந் தார்கள். திருக்குர்ஆன் கூறுகிறது:

وَ تَرَكْنَا بَعْضَهُمْ يَوْمَئِذٍ يَمُوْجُ فِى بَعْضٍ

"அந்நாளில் அவர்களை சிலர் சிலரோடு (கடலலைகள் போல்) மோதிக் கொண்டிருக்கும் நிலையில் நாம் விட்டிருந்தோம்"[99]

இந்தக் காட்டுமிராண்டிகளின் தொல்லைகளுக்கு உள்ளாகி யிருந்த அந்தச் சமூகத்தார், துல்கர்னைன் மன்னரைக் கண்டதும் - இது மிகவும் நல்லதொரு சந்தர்ப்பம்., ஆற்றல் மிக்கதோர் அரசரை அல்லாஹ் நமக்காக ஏற்படுத்தித் தந்துள்ளான் என்று கருதினார்கள்.

உடனே அந்த அரசரிடம் வந்து- அக்கிரமம் செய்கிற, அராஜகம் இழைக்கிற இந்தக் காட்டுமிராண்டிகளிடம் இருந்து தங்களைக் காப்பாற்றுமாறு வேண்டுகோள் வைத்தார்கள். மன்னர் தன்னிடம் இருந்த பெரும்பெரும் சாதனங்களையும் ஏராளமான சைனியங் களையும் பயன்படுத்தித் தடுப்புச் சுவர் ஒன்றை எழுப்பி யஃஜூஜ்- மஃஜூஜ் கூட்டத்தினர் ஊடுறுவும் பாதையை அடைத்துத் தர வேண்டும் என்று கோரிக்கை வைத்தார்கள். அந்தப் பணிக்காகத் தங்களுடைய செல்வங்களையும் மன்னர் முன்னிலையில் சமர்ப்பித்தார்கள் அந்த மக்கள்!

நல்லிதயம் கொண்ட அம்மன்னர் அந்த மக்களின் கோரிக்கையை ஏற்றார். தடுப்புச்சுவர் எழுப்பித்தருவ தாக அவர்களிடம் வாக்குறுதி அளித்தார். அவருக்கு அல்லாஹ் அளித்திருந்த ஏராளமான செல்வங்களைப் போதுமாக்கிக்கொண்டு அந்த மக்கள் கொடுத்த செல்வங்கள் தேவை இல்லை என்றார். பேராசை கொண்ட அரசர்களின் போக்கிற்கு நேர்மாறான போக்காகும் இது.

---

[98] **இந்த இடத்தில் பேராசிரியர் செய்யத் குத்ப் (ரஹ்) அவர்கள் கூறியுள்ள கருத்துக்கு நாம் முற்றிலும் உடன்படுகிறோம். அவர்கள் கூறுகிறார்கள்:**

**"துல்கர்னைன் சென்றடைந்த இரு மலைகளுக்கிடையே எனும் இடத்தைப் பற்றியும் அவ்விரு மலைகள் யாவை என்பது பற்றியும் எந்தப் பதிலையும் உறுதியாக நாம் கூற இயலாது. குர்ஆனில் இருந்து நேரடியாகத் தெரிவது என்ன வெனில், இயற்கையான இரண்டு தடுப்புகளுக்கு மத்தியில் அல்லது செயற்கை யான இரண்டு குன்றுகளுக்கு மத்தியில் அமைந்திருந்த ஒரு விசாலமான இடத் திற்கு அல்லது ஓடைக்கு அவர் சென்றுள்ளார். அங்கு பின்தங்கிய நிலையில் வாழ்ந்த பலவீனமான ஒரு கூட்டத்தினரை அவர் கண்டார். அந்த மக்களைப் பற்றி குர்ஆன் கூறுகிறது:**

لاَ يكادون يفقهون قولا

**"எந்த வார்த்தையையும் புரிந்து கொள்ள அவர்களால் இயலாதிருந்தது" (நூல்: ஃபீ ழிலாலில் குர்ஆன், பாகம் 16 பக்கம் 13)**

**யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டத்தினர் யார்? அவர்களின் இனம், நாடு, தடுப்புச் சுவர் உடைக்கப்படும் நேரம், அவர்கள் வெளியே வரும் காலம் ஆகிய ஒவ்வொன்றையும் வரையறை செய்து கூறுவது தொடர்பான நிலையை என்னவெனில், குர்ஆன் விரிவுரையின் ஒளியில் மற்றும் ஹதீஸ்களில் இறுதி நாளின் அடையாளங்கள், குழப்பங்கள், சண்டைகள் பற்றி இடம்பெற்றுள்ள தகவல்களின் ஒளியில் மிக நீண்ட ஆராய்ச்சி செய்தாக வேண்டும். எது ஒன்றைக் குறித்தும் துல்லியமான முறையில் உறுதியுடன் ஒரு முடிவுக்கு வருவது சிரமமான காரியமாகும். அல்லது குறைந்த பட்சம் முரண்பட்ட பல அறிவிப்புகளில் இருந்து தெரிய வருவது இதுதான் என்று பொதுவான ஒரு கருத்தைச் சொல்வதும் கடின மானதே!**

**ஆகையால் முற்கால, தற்கால அறிஞர்கள் இது குறித்து எழுதியுள்ள விரிவான நூல்களைத்தான் வாசகர்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். அவர்களின் ஒரு சிலரே இவ்விஷயங்கள் குறித்த எழுதியிருந்தாலும் சரியே, அத்தகைய நூல்கள் குறைவாகவே கிடைத் தாலும் சரியே!**

**எவ்வாறாயினும் (நபிமொழி நூல்களில் இடம் பெற்றுள்ள) குழப்பங்கள், சண்டை-சச்சரவுகளின் பாடங்களும் மற்றும் இறுதி நாளின் அடையாளங்கள், நடந்து முடிந்தவை, இறுதி நாள் நெருங்கும்பொழுது நடக்கவிருப்பவை பற்றிய நபிமொழிகளும் ஆராய்ச்சிக்கு உரிய விஷயங்களாகவே நீடித்து வருகின்றன. உயர்ந்த ஊக்கமும் மார்க்கக் கலைகளில் ஆழிய ஞானமும் பெற்ற, குறிப்பாக வரலாற்றுக் கலையில் நல்ல ஈடுபாடு கொண்ட ஆய்வாளர்களின் - சீரான கொள்கையுடனும் சிறந்த குறிக்கோளுடனும் பொறுமை மிகக் கொண்டு தொடர் ஆய்விலும் ஆராய்ச்சியிலும் ஈடுபாடு கொண்டிருக்கும் ஆய்வாளர்களின் எதிர்பார்ப்பில் இவ்விஷயங்கள் இருந்து கொண்டிருக் கின்றன! ஏனெனில் இவ்விஷயங்களில் ஒரு தீர்க்கமான முடிவு காண்பதற்கு நுட்பமான - விரிவான ஆராய்ச்சியும் கவனமிக்க தொடர் முயற்சியும் தேவைப்படுகின்றன! இதன் பின்னர் ஏதாவது ஒரு புதுமையை அல்லாஹ் தோற்றுவிக்கக்கூடும்!**

[99] **சூரத்துல் கஹ்ஃப் 99**

ஆனால் அந்த மக்கள் தங்களுடைய கைகளின் உழைப்பை அளித்து உதவி செய்திட வேண்டும் என்றும் அவர்களின் ஊர் களில் கிடைத்த இரும்பு, ஈயம் போன்ற உலோகங்களைக் கொடுத்தும் உதவி நல்கிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். அதனை குர்ஆன் குறிப்பிடுகிறது:

قَالَ مَا مَكَّنِّى فِيْهِ رَبِّى خَيْرٌ، فَأَعِيْنُوْنِى بِقُوَّةٍ اَجْعَلْ بَيْنَكُمْ وَبَيْنَهُمْ رَدْمًا، آتُوْنِي زُبَرَ الْحَدِيْدِ

" (துல்கர்னைன்) சொன்னார்: என் இறைவன் எனக்கு வழங்கியுள்ளதே (எனக்குச்) சிறந்தது. (உங்கள் பணம் எனக்குத் தேவை இல்லை) ஆயினும் உங்கள் உழைப்பின் மூலம் எனக்கு உதவுங்கள். உங்களுக் கும் அவர்களுக்கும் மத்தியில் ஒரு தடுப்புச் சுவர் எழுப்பித் தருகிறேன். (பிறகு அவர் ஆணையிட்டார்) இரும்புப் பாளங்களை என்னிடம் கொண்டு வாருங்கள்" [100]

பாக்கியமிக்க அந்தச் சுவரைக் கட்டியெழுப்புவதில் எல்லோரும் ஒத்துழைப்பு நல்கினார்கள். மன்னர் தனது அறிவுத் திறனைக் கொண்டும் பணியாட்களை அளித்தும் உதவினார். அந்த மக்களோ தம்முடைய கைகளால் உழைத்தும் இரும்புப் பாளங்களைக் கொண்டு வந்து கொடுத்தும் உதவி செய்தார்கள்.

حَتَّى اِذَا سَاوَى بَيْنَ الصَّدَفَيْنِ قَالَ انْفُخُوْا حَتَّىاِذَا جَعَلَهُ نَارًا قَالَ آتُوْنِى اُفْرِغْ عَلَيْهِ قِطْرًا

"இறுதியில் இரு மலைகளுக்கு இடையிலான பகுதியை நிரப்பிய பொழுது 'நெருப்பிட்டு ஊதுங்கள்' என அவர் ஆணையிட்டார். அவ்வாறு ஊதி அதனை நெருப்பாக்கியபொழுது ஈயத்தை என்னிடம் கொண்டு வாருங் கள்., அதன் மீது ஊற்றுகிறேன் என்றார்" [101]

சுவர் தயாரானது. திட்டம் நிறைவேற்றி முடிக்கப்பட்டது. நெடிதுயர்ந்த இருமலைகளுக்கும் பிரமாண்டமான அந்த மதிலுக்கும் அப்பால் வசித்து வந்த எதிரிகளின் தொல்லைகளில் இருந்து எல்லா மக்களும் பாதுகாப்புப் பெற்றனர்.

فَمَااسْطَاعُوْا أَنْ يَّظْهَرُوْهُ وَمَااسْتَطَاعُوْا لَهُ نَقْبًا

"இந்தக் (யஃஜூஜ் - மஃஜூஜ்) கூட்டத்தினருக்கு அந்தச் சுவர் மீது ஏறிடவும் முடியவில்லை. அதனைத் துளை போடவும் இயல வில்லை" [102]

## அறிவாற்றல் மிக்க நம்பிக்கையாளரின் மார்க்கத் தெளிவு!

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் உலகின் பெரும் வெற்றியாளராகத் திகழ்ந்த - பல்வேறு சமுதாயங்களை அடக்கியாண்ட அந்த மாவீரரின் இதயத்தில் - பொருள்வளம் உள்ளிட்ட எல்லா ஆற்றல்களும் பெற்றிருந்த அந்த மாமன்னரின் உள்ளத்தில் இறைநம்பிக்கை சுடர் விட்டு இலங்கியது. அவர் ஆணவம் கொள்ளவில்லை! அலட்சியத்திற்கும் தற்பெருமைக்கும் ஆட்படவில்லை! என்னிடமுள்ள அறிவாற்றலினால்தான் இவை அனைத்தும் எனக்கு வழங்கப்பட்டுள்ளன என்று அவர் கூறவில்லை. மாறாக அனைத்துச் சிறப்புகளையும் அல்லாஹ்விடமே சேர்த்தார். மேலும் தனது பணி என்றைக்கும் நிலைத்திருக்கும் என்றும் இந்தப் பெருஞ்சுவருக்கு யாதொரு ஊறும் ஏற்படாது என்றும் அவர் கருதவில்லை.

சரியாகச் சொல்வதானால், மறுமையின் மீது நம்பிக்கைகொண்ட, மனிதனின் பலவீனத்தையும் காலத்தின் மாறுதல்களையும் நன்கு அறிந்த அறிவாற்றல் மிக்க நம்பிக்கையாளரின் மார்க்கத் தெளிவுடன் துல்கர்னைன் இவ்வாறு கூறினார்:

قَالَ هَذَا رَحْمَةٌ مِّنْ رَبِّى فَإِذَا جَاءَ وَعْدُ رَبِّى جَعَلَهُ دَكَّاءَ وَ كَانَ وَعْدُ رَبِّى حَقًّا

"(பணி முடிவடைந்தபின்) துல்கர்னைனன் கூறினார்: இது என் இறைவனின் அருளே ஆகும். என் இறை வன் வாக்களித்த நேரம் வந்துவிட்டால் இதனைத் தூள்தூள்ளாக்கி விடுவான். என் இறைவனின் வாக்கு மெய்யானதாகும்" [103]

---

[100] சூரத்துல் கஹ்ஃப் 95 - 96
[101] சூரத்துல் கஹ்ஃப் 96
[102] சூரத்துல் கஹ்ஃப் 97
[103] சூரத்துல் கஹ்ஃப் 98

இதுதான் - அறிவும் வல்லமையும் நிறைந்த, இயற்கை ஆற்றல்களையும் உலகாயத சக்திகளையும் தன் வசப்படுத்திவைத் திருந்த மாமன்னரின் பண்பாடாடு. வாழ்க்கைச் சாதனங்களையும் வசதி வாய்ப்புகளையும் பெரும் அளவு பெற்றிருந்த, விரிவான வெற்றிகள் பல கண்டும் வீரதீரச் செயல்கள் புரிந்தும் வாழ்ந்து வந்த பேரரசரின் நயத்தகு நாகரிகம்!

இத்தகைய எல்லாச் சூழ்நிலைகளிலும், உலகாயத ஆற்றல், அதிகாரம், தலைமைப் பதவி ஆகிய அனைத் தும் உச்சநிலை அடைந்திருந்த எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தன் இறைவனை அவர் மறந்தாரில்லை. அவனையே முழுமையாக நம்பி அவனுக்கே அடி பணிந்து வாழ்ந்து வந்தார். மறுவுலகத்தை நம்பினார். அங்கு வெற்றி பெறுவதற்காக நற்பணிகள் ஆற்றினார். தன் பலவீனத்தை ஒப்புக்கொண்டார். மனித குலத்தின் மீது பரிவும் கருணையும் கொண்டார். பலவீனப்பட்ட மக்கள் மீது இரங்கினார். சத்தியத்தின் பாதுகாவலராகத் திகழ்ந்தார். தன்னுடைய ஆற்றல்கள் முழுவதையும் உழைப்பையும் திறமைகளையும் எல்லா விதமான சாதனங் களையும் வளங்களையும் மக்களுக்குச் சேவை செய்வதற்காகவே பயன்படுத்தினார். தூய்மைமிக்க சமு தாயத்தை உருவாக்குவதற்காகவே ஈடுபடுத்தினார். அல்லாஹ்வின் தீனை மேலோங்கச் செய்வதற்காகவே பாடுபட்டார். மக்களை இருளிலிருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் கொண்டுவருவதற்காகவும் மனிதர்களுக்கு வழிபாடு செலுத்தும் நிலையிலிருந்து - உலகாயத சக்தியை வணங்கும் நிலையிலிருந்து மக்களை விடுவித்து அல்லாஹ் ஒருவனையே வணங்குபவர்களாய் அவர்களை ஆக்குவதற்காகவும் கடுமையாக உழைத்தார்!

இத்தகைய வாழ்க்கை நெறியைத்தான் நபி சுலைமான் பின் தாவூத் (அலை) தமது காலத்தில் மேற் கொண்டார்கள். துல்கர்னைன் மன்னர் அவரது காலத்தில் மேற்கொண்டார். (நபியவர்களின்) கலீஃபாக்கள் - நேர்வழிபெற்ற பிரதிநிதிகள் தத்தமது காலத்தில் மேற்கொண்டார்கள். நேர்வழி பெற்ற இமாம்களும் முன்னோ டிகளும் தத்தமது காலத்தில் - பகுதியில் வாழ்ந்து காட்டினார்கள்!

## மேற்கத்தியக் கலாச்சாரத்தின் முத்திரை

மனித இனத்தைக் கவலையிலும் துக்கத்திலும் ஆழ்த்திய எதிர்பாராத நிகழ்ச்சிகள் பல, திடீரென ஏற்பட்ட சம்பவங்கள் பல உள்ளன! அவற்றுள் மிகவும் வேதனைக்குரிய சூழ்நிலை ஒன்று உண்டெனில், அது இந்த மேற்கத்திய நாகரிகம் தோன்றி வளர்ந்த சூழ்நிலைதான்.

இறைமார்க்கத்தை எதிர்க்கும் போக்கும் ஈமான் பில் ஃகைப் - மறைவான உண்மைகளை நம்புதல் எனும் அதன் அடிப்படைக் கொள்கைகளை நிராகரிக்கும் நிலையும் பரவி இருந்த ஒரு காலத்தில் இந்நாகரிகம் தோன்றி வளர்ந்து விட்டது.

இறைமார்க்கத்திற்குத் தலைமை ஏற்றிருந்தவர்களுக்கு எதிராக, அதனைத் தம்முடைய மனஇச்சைகளுக் காகவும் சுய முன்னேற்றங்களுக்காகவும் பயன்படுத்திக் கொண்டிருந்தவர்களுக்கு எதிராக கிளர்ந்தெழுந்த மக்கள் சமூகத்தில் - அத்தகைய தலைவர்களின் தீய நடத்தையைக் கண்டு, தான்தோன்றித்தனமான போக்கைக் கண்டு, மனித குல முன்னேற்றத்தின் பாதையில் - அறிவு ஆராய்ச்சியின் சுதந்திரத்தில் அந்தத் தலைவர்கள் தடைக்கற்களாய் இருந்ததைக் கண்டு கடும் கோபம் கொண்ட சமுதாயத்தில் இந்த நவீன நாகரிகம் தோன்றி வளர்ந்து விட்டது! [104]

இத்துடன் நாகரிகம், தொழில் வளர்ச்சி மற்றும் வாழ்க்கைப் புனரமைப்புச் சிந்தனை ஆகிய அனைத்தும் வெறும் சடத்துவ வாதத்தின் அடிப்படைகளின் மீது அமைந்தன. படைத்த இறைவனுடன் - பேரண்டம் முழுவதையும் பரிபாலித்து வரும் அதிபதியுடன் - சமூகத்திற்கும் தனி மனிதனுக்கும் இருந்து வந்த தொடர்பு துண்டிக்கப்பட்டது.

இவற்றின் பின்னணியில் தொடர்ச்சியாகப் பல காரணிகள் உள்ளன. இயற்கைச் சூழ்நிலைகளும் அதற்குக் காரணமாய் அமைந்துள்ளன. ஆயினும் குறிப்பாக ஐரோப்பிய பிரத்தியேக வாழ்க்கை அமைப்புதான் அதற்கு முக்கிய காரணமாகும்.

ஒருபுறம், இந்தக் கலாச்சாரத்தின் முன்னேற்றம், அதன் வளர்ச்சி ஆகியன நாத்திகத்துடனும் அராஜகத்து டனும் பின்னிப் பிணைந்ததாய் வளர்ந்து விட்டன.

மறுபுறம் இக்கலாச்சாரம், இயற்கை ஆற்றல்களையும் காரணி களையும் ஆட்கொள்ளும் சக்தியாக மாறியது. முன்னேற்றத்திலும் தொழில் நுட்பத்திலும் இயற்கை இயல்களிலும் உச்ச நிலையை எட்டிப்பிடித்தது. எந்த அளவுக்கெனில், உலகில் தொலைவுகளையும் இடைவெளிகளையும் அடியோடு இல்லாமலாக்கி விட்டது.

---

[104] **மேலும் விபரங்களுக்கு முஸ்லிம்களின் வீழ்ச்சியினால் உலகம் இழந்தது என்ன? என்கிற நமது நூலைப் பார்க்கவும்.**

மனிதன் காற்று மண்டலத்தைக் கடந்தான். இறுதியில் சந்திரனிலேயே கால் பதித்து விட்டான். இது தவிர அறிவியல், வானியல் துறைகளில் இன்னும் பல வெற்றிகளை அடைந்து விட்டான்., அடைந்தும் வருகிறான்.

ஆக, இந்த மேற்கத்திய கலாச்சாரம் திகிலூட்டும் ஆற்றலைக் கொண்டிருப்பதுடன்- வாழக்கைச் சாதனங் களையும் சக்திகளையும் வசப்படுத்தி வைத்திருப்பதுடன் - உலகின் மீது ஆதிக்கம் செலுத்தும் திறமையைப் பெற்றிருப்பதுடன் கூடவே இறைநிராகரிப்பையும் உலகாயதப் போக்கையும் தன்னுள் பெற்றிருக்கிறது. இதுவே இக்கலாச்சாரத்தின் சின்னமும் அடையாளமும் ஆகும்.

இவ்வளவு அதிகமான சக்திகளையும் முன்னேற்றத்தையும் பெற்ற, இயற்கை இரகசியங்களையும் ஆற்றல் களையும் வசப்படுத்திய, மதங்களையும் ஒழுக்க மாண்புகளையும் இவ்வளவு கடுமையாக எதிர்க்கக் கூடிய, இப்பேரண்டத்தைப் படைத்த இறைவனுக்கும் அவனுடைய சட்ட நெறிக்கும் எதிராக இவ்வளவு வன்மையாக கிளர்ச்சி செய்யக்கூடிய, சடத்துவப் பொருளையும் மனதையும் மன இச்சைகளையும் வணங்கி வழிபடுமாறு அழைக்கக்கூடிய, நானே இறைவன் என்று வாதிடக்கூடிய **ஒரு கலாச்சாரம்** உண்டெனில் அது இம்மேற்கத்திய கலாச்சாரத்தைத் தவிர வேறில்லை. அப்படி வேறொரு கலாச்சாரம் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை!

## உலகாயதக் கலாச்சாரத்தின் இறுதிக் கட்டம்!

நாம் மேலே சொன்னது போன்று -உலகின் அதிகாரத்தைக் கைப்பற்றும் அளவுக்கு வளர்ந்துவிட்ட இந்தக் கலாச்சாரம் இறைவனை நிராகரிக்கக்கூடியதாகவும் 'பொருளை' நம்பக்கூடியதாகவும் உள்ளது. இந்தக் கலாச்சாரத்தைச் சேர்ந்தவர்கள் தங்களது ஆற்றலையும் தொழில் நுட்பத்தையும் மட்டுமே நம்பும் இயல்புடன் வளர்ந்துவிட்டனர். எதில் தங்களுக்கு லாபம் உள்ளது., நலன் உள்ளது என்பதை மட்டுமே பார்க்கிறார்கள்.

இந்தக் கலாச்சாரத்தின் மாபெரும் மையக் கேந்திரங்களாகத் திகழும் அமெரிக்கா, ஐரோப்பா, ரஷியா ஆகிய நாடுகள் - ஃகைப் எனும் மறைவான உண்மைகளை நம்பும் கொள்கைக்கும் ஆன்மீகத்துக்கும் நல்லொழுக்கத்திற்கும் இறைவேதங்களுக்கும் எதிரிகளாக ஆகி விட்டன., பகிரங்கமாகவோ மறைமுகமாகவோ!

இந்தக் கலாச்சாரம் உலகயாயதம் மற்றும் தொழில்நுட்ப ரீதியிலான தனது மிக உச்ச நிலையை அடைந் திடும் காலம் நெருங்கி விட்டது. இக்கலாச்சாரத்தின் தலைவன் - நபித்துவ மொழியில் தஜ்ஜால் [105] என்று வர்ணிக்கப்படும் - குறிப்புப் பெயரால் அழைக்கிற அதன் தலைவன் தோன்றும் நேரம் அண்மித்து விட்டது!

அந்த தஜ்ஜால் என்பவன் ஒரு புறம் - உலகாயத முன்னேற் றத்தின், தொழில் வளத்தின் சிகரத்தில் இருப்பான். மறுபுறம் இறை நிராகரிப்பின் உச்ச நிலையை அடைந்திருப்பான். மக்களை உல காயதத்தின் பக்கம் அழைப்பதில்,நாத்திகத்தின் பக்கமும் இயற்கை யையும் இயற்கைச் சக்திகளையும் வணங்குவதற்கும்

---

[105] **தஜ்ஜால் பற்றி கூறப்பட்டுள்ள, அவனுடைய அனேகத் தன்மைகளை எடுத்துக் கூறுகிற நபிமொழிகள் அத்தவாத்துருல் மஃனவீ எனும் தரத்தை அடைந் துள்ளன. அதாவது, கருத்தைப் பொருத்து மிகவும் நம்பகமானவை எனும் அந்தஸ்தை அடைந்துள்ளன. அவை தஜ்ஜால் என்பவன் குறிப்பிட்டதொரு மனிதன் என்றும் குறிப்பிட்ட சில தன்மைகள் உடையவன் என்றும் குறிப்பிட்ட தொரு காலத்தில் (அதற்குச் சுரியான தேதியும் நேரமும் வரையறுக்கப் படவில்லை) தோன்றுவான் என்றும் குறிப்பிட்டதொரு சமுதாயத்தில் தோன்றுவான் என்றும் அது யூத சமுதாயமே என்றும் குறிப்பிட்டுக் கூறுகின்றன. எனவே தஜ்ஜால் தோன்றும் விஷயத்தை மறுப்பதற்கு வழியேதுமில்லை., அதற்கு அவசியமும் இல்லை.**

**அந்த நபிமொழிகள் இதனையும் குறிப்பிட்டுக் கூறுகின்றன: தஜ்ஜால் தோன்றுவது பலஸ்தீனத்தில். அங்குதான் அவனது செல்வாக்கு உச்ச நிலையை அடையும்.**

**ஆம்! உண்மையில் பலஸ்தீனம்தான் உலகளாவிய இறுதி அரங்கமாகும். அதில்தான் இஸ்லாத்திற்கும் உலகாயதத்திற்கும் சத்தியத்திற்கும் அசத்தியத் திற்கும் நடக்கவிருக்கும் போராட்டம் பற்றிய மிகப் பயங்கரமான கதை அரங்கேரக் காத்திருக்கிறது!**

**ஒருபுறத்தில் தார்மீக - சட்ட ரீதியான உரிமைகளுக்காகப் பேராடுபவர்கள் இருப்பார்கள். அவர்கள் சத்தியத்தின் பாதுகாவலர் களாகத் திகழ்வார்கள். அல்லாஹ்வின் பக்கம் அழைக்கும் பணியினை மேற்கொண்டிருப்பார்கள். மனித குல ஈடேற்றத்தின், ஒருமைப்பாட்டின் அழைப்பாளர்களாய் திகழ்ந்து கொண்டி ருப்பார்கள். இத்தகைய உயர் பண்பே அவர்களின் மாபெரும் ஆயுதமாகவும் அவர்களுக்குச் சாதகமான ஆதாரமாகவும் திகழும்.**

**மறுபுறத்தில்-ஒரே இனம், ஒரே இரத்தத் தொடர்புடைய சமுதாயம் மட்டும்தான் புனிதமானது., உயர்வானது என்று வாதிடுவோர் நின்று கொண்டிருப்பார்கள். உலகம் முழுவதையும் மனித குலத்திடமுள்ள அனைத்து சாதனங்களையும் அந்தக் குறிப்பிட்ட ஒரே இனத்தின் அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்திட வேண்டும்., அதன் ஆளுகைக்கு உட்படுத்திட வேண்டும் என்பதற்காகவே அவர்கள் போராடுவார்கள். கல்வி ரீதியான சாதனங்களும் கலைஆற்றல்களும் தொழில் நுட்ப சக்திகளும் அவர்களின் கைகளில் பெரும் அளவில் குவிந்திருக்கும்!**

**மனித இனத்தின் இந்தத் தீர்க்கமான போராட்டத்தின் அறிகுறிகள் அரபு இஸ்லாமியக் கிழக்கின் அடிவானத்தில் இப்பொழுது தோன்றி விட்டிருக்கின்றன. தற்போதைய நிலைமைகளும் நடைபெற்றுக்கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளும் - இந்தப் போராட்டத்தை அதன் உண்மையான கதாநாயகர்களுடன் அரங்கேற்று வதற்குப் பொருத்தமான சூழ்நிலையை உருவாக்கி வருகின்றன!**

யார் யார் அவற்றை வசப்படுத்தி வைத்துக்கொண்டு அவற்றின் மீது முழு ஆதிக்கம் செலுத்துகிறார்களோ அவர் களுக்கு அடிபணிவதற்கும் அழைப்பு விடுப்பதில் முழுமையாக ஈடுபட்டிருப்பான்.

இதுதான் இறுதிக் காலத்தின் பெருங்குழப்பம். இன்றைய உலகத்தைப் பீடித்துள்ள மாபெரும் துன்பம்! பல நூற்றாண்டுகளுக்கு முன் ஐரோப்பாவில் தோன்றிய உலகாயதக் கலாச்சாரத்தின் இறுதிக்கட்டம் இதுதான்!

## தஜ்ஜாலின் தனிப்பட்ட அடையாளம்!

மேலே சொன்ன அனைத்தும் இன்றைய உலகாயத - தொழில் வள, இயந்திரமயக் கலாச்சாரத்தை - எந்தக் கலாச்சாரம் எதிர்காலத்தில் உச்ச நிலையை அடையவிருக்கிறதோ - எதற்கு தஜ்ஜால் தலைமை ஏற்க இருக்கிறானோ அந்த உலகாயதக்கலாச் சாரத்தைப் படம்பிடித்துக் காட்டக்கூடியவை ஆகும்.

ஆயினும் இவை மட்டும் தஜ்ஜால் என அவனை வேறுபடுத்திக் காட்டுவதற்குப் போதுமானவை அல்ல. நபிமொழிகளில் அவனை அதிக அளவு இகழ்ந்திருப்பதில் இருந்தும் அவனது குழப்பம் குறித்து கடுமையாக எச்சரிக்கை செய்திருப்பதில் இருந்தும் நிலைமை இன்னும் மோசமாக இருக்கும் எனத் தெரிகிறது.

இத்தகைய சக்திகளையும் சாதனங்களையும் சுலைமான் நபி (அலை) அவர்களும் துல்கர்னைன் மன்னரும் பெற்றிருந்தார்கள். அவ்விருவரின் ஆற்றல்களையும் வேகத்தையும் அவர்களின் கைவசத்தில் இருந்த ஏராளமான சக்திகளையும் சாதனங்களையும் குர்ஆனே குறிப்பிட்டுக் கூறுகிறது.

எனவே இவ்விருவரை விட்டும் தஜ்ஜாலை வேறுபடுத்திக் காட்டும் புள்ளி என்ன? உத்தம மன்னர் யார்? அறி வாற்றல் மிக்க அதிக பலம் வாய்ந்த மாமனிதர் யார்? அவர் எப்படிப்பட்டவர் எனில், அல்லாஹ் குர்ஆனில் புகழ்ந்து கூறுகிறான்:

نِعْمَ الْعَبْدُ اِنَّهُ أَوَّابٌ

“அவர் (சுலைமான்) எத்துணை சிறந்த அடியார்! அவர் இறைவன் பக்கம் அதிகம் மீளக்கூடியவராகத் திகழ்ந்தார்” [106]

எவனைக் குறித்து நபி (ஸல்) எச்சரிக்கை செய்தார்களோ, எவனைக் குறித்து தம் உம்மத்தினர் மீது அச்சம் கொண்டார்களோ, இவ்வளவு அதிக முக்கியத்துவம் எடுத்துக் கொண்டார் ளோ அத்தகைய பெரும் குழப்பவாதியான தஜ்ஜால் என்பவன் யார்? என்பதை நாம் ஆராய்ந்திட வேண்டும்.

வேறுபடுத்திக் காட்டும் அடையாளமும் வித்தியாசக் கோடும் இதுதான்: சுலைமான் நபியும் துல்கர்னைன் மாமன்னரும் ஆரம்ப நூற்றாண்டுகளில் அவ்விருவரைப்போல் வாழ்ந்து சென்ற முஸ்லிம்களும் ஜமாஅத் - கூட்ட மைப்புகளும், வித்தியாசமான வலிமைகளையும் விரிவான ஆட்சியையும் பிரமிக்கத்தக்க நுண்ணறிவையும் பெற்றி ருந்ததுடன் -இயற்கைச் சக்திகளையும் உலகாயதச் சாதனங்களையும் வசப்படுத்தி வைத்திருந்ததுடன்

ஆழமான இறைநம்பிக்கையும் நல்லமல்களும் சிறப்புமிக்க பண்பாடும் சீரான குறிக்கோள்களும் அவர்களிடம் இருந்தன. அல்லாஹ்வின் பக்கமும் சத்தியத்தின் பக்கமும் அழைக்கும் பணியினையும் அவர்கள் மேற்கொண்டி ருந்தார்கள். அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த அறிவு, கல்வி, ஆற்றல்களையும் எல்லாவிதமான சாதனங் களையும் மானிட சுபிட்சத்திற்காகவும் மனித குலத்திற்குச் சேவை செய்வதற்காகவுமே பயன்படுத்தினார்கள். கருணையும் நீதியும் செழித்தோங்குவதற்காகவே அனைத்தையும் செலவு செய்தார்கள்! அத்தகைய மேன் மக்களின் பண்பு நலன்களை குர்ஆன் இவ்வாறு வர்ணிக்கிறது:

الَّذِيْنَ اِنْ مَّكَّنَّا هُمْ فِى الأَرْضِ أَقَامُوْا الصَّلاَةَ وَ آتَوُا الزَّكَاةَ و أَمَرُوْا بِالْمَعْرُوْفِ وَ نَهَوْا عَنِ الْمُنْكَرِ وَ لِلّهِ عَاقِبَةُ الأُمُوْرِ

“அவர்கள் எத்தகையவர்கள் எனில், இப்பூமியில் அவர்களுக்கு நாம் ஆட்சியதிகாரம் வழங்கினால் அவர்கள் தொழுகையை நிலை நாட்டுவார்கள். ஜகாத் கொடுப்பார்கள். மேலும் நன்மைபுரிமாறு ஏவுவார்கள். தீமையை விட்டும் தடுப்பார்கள். மேலும் எல்லாக் காரியங்களின் முடிவும் அல்லாஹ்விடமே உள்ளது” [107] மற்றோர் இடத்தில்,

تِلْكَ الدَّارُ الآخِرَةُ نَجْعَلُهَا لِلّذِيْنَ لاَ يُرِيْدُوْنَ عُلُوًا فِى الأَرْضِ وَلاَ فَسَادًا، وَالْعَاقِبَةُ لِلْمُتَّقِيْنَ

---

[106] **சூரத்து ஸாத் 30**

[107] **சூரத்துல் ஹஜ் 41**

“அந்த மறுமை வீட்டையோ - எவர்கள் இப்பூமியில் பெருமை யடிக்கவும் அராஜகம் செய்யவும் விரும்ப மாட்டார்களோ அவர்களுக்கே நாம் சொந்தமாக்கிவைப்போம். மேலும் இறையச்சம் உள்ளோருக்கே நல்ல முடிவு உண்டு” [108]

ஆனால் தஜ்ஜால் பற்றி நபி(ஸல்)அவர்கள் தமது சமுதாயத்தினருக்கு அறிவித்துக் கொடுத்த அடையாளம் - முத்திரை என்னவெனில், இறைமறுப்பும் அதன் விரிவான கருத்தின் அடிப்படையிலான அனைத்துத் தீமை களும் ஆகும். ஓர் ஆதாரப்பூர்வமான நபிமொழி கூறுகிறது:

اِنَّهُ مَكْتُوْبٌ بَيْنَ عَيْنَيْهِ ك ف ر، يَقْرَءُهُ كُلُّ مُؤْمِنٍ كَاتِبٌ وَ غَيْرُ كَاتِبٍ – رواه البخارى

“தஜ்ஜாலின் இரு கண்களுக்கு மத்தியில் கா∴ப், ∴பா, றா எனும் எழுத்துகள் எழுதப்பட்டிருக்கும். எழுத்தறிவுள்ள, எழுத்தறிவற்ற ஒவ்வொரு முஸ்லிமும் அவற்றை வாசித்துக் கொள்வார்கள்” [109]

## தஜ்ஜாலினால் சமூக வாழ்வில் ஏற்படும் சீரழிவு!

நபிமொழிகளில் தெரியவருகிறது: தஜ்ஜால் இறைமறுப்பின் பக்கம் தீவிரமாக அழைப்பவனாகவும் சுறுசுறுப்பும் ஈர்ப்பாற்றலும் உள்ளவனாகத் திகழ்வான். மதத்திற்கும் ஒழுக்க நெறிகளுக்கும் எதிராகக் கலகம் புரியும் போக்கிற்குத் தலைவனாக வருவான். மற்றொரு நபிமொழியில் வந்துள்ளது:

فَوَ اللهِ اِنَّ الرَّجُلَ لَيَاتِيْهِ وَهُوَ يَحْسِبُ اَنَّهُ مُؤْمِنٌ فَيَتَّبِعُهُ عَمَّا يَبْعَثُ بِهِ الشُّبْهَاتِ

“அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ஒரு மனிதன் தஜ்ஜாலிடம் வருவான். அவனை இறைநம்பிக்கையாளன் என்பதுபோல் கருதுவான். அந்த மனிதனின் உள்ளத்தில் தஜ்ஜால் கிளறிவிடும் சந்தேகத்தினால் அவன் தஜ்ஜாலைப் பின்பற்றுவான் ” [110]

அவனது செல்வாக்கும் கூப்பாடும் மேலும் தீவிரமடையும். அவ்வாறே நாட்கள் செல்லச்செல்ல குழப்பம் பெரிய பெண்களிடமும் சிறுமிகளிடமும் பரவும். குடும்பங்களிலும் வீடுகளின் உள்ளேயும் அது ஊடுருவும். குடும்பத் தலைவர், தன் வீட்டிலுள்ள பிறர் மீது - தனது மனைவி, தாயார், சகோதரிகள், பெண் பிள்ளைகள், பணிப் பெண்கள் ஆகியோர் மீது தனக்கிருந்த அனைத்து அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் இழந்து விடுவார். வேறொரு நபிமொழியில் வந்துள்ளது:

يَنْزِلُ الدَّجَالُ بِهٰذِهِ السَّبْخَةِ بِمَرَقْنَاةَ فَيَكُوْنَ آخِرُ مَنْ يَخْرُجُ اِلَيْهِ النِّسَاءُ حَتَّى اَنَّ الرَّجُلَ لَيَرْجِعُ اِلَىاُمِّهِ وَابْنَتِهِ وَاُخْتِهِ وَعَمَّتِهِ فَيُوْثِقُهَا رَبَاطًا مَخَافَةَ اَنْ تَخْرُجَ اِلَيْهِ – أخرجه الطبراني

“தஜ்ஜால் என்பவன் தோன்றி இந்தச் சதுப்பு நிலத்தில் மரக்னாத் என்ற இடத்தில் வந்து தங்கியிருப் பான். இறுதியில் பெண்களேகூட வீடுகளை விட்டும் வெளியேறி அவனிடம் செல்வார்கள். எந்த அளவுக்கு எனில் ஒரு மனிதன் தனது தாய், மகள், சகோதரி மற்றும் மாமி ஆகிய அனைவரையும் கயிற்றால் கட்டிப் போடுவான்., அவர்கள் தஜ்ஜாலிடம் சென்று விடுவார்களோ என்று பயந்து!” [111]

இவ்வாறு சமூகச் சீரழிவும் ஒழுக்கச் சிதைவும் எதுவரையில் தொடரும் எனில், ஒரு நபிமொழி கூறுகிறது:

فَيَبْقَى شِرَارُ النَّاسِ فِى خِفَّةِ الطَّيْرِ وَ اَحْلاَمِ السِّبَاعِ لاَ يَعْرِفُوْنَ مَعْرُوْفًا وَلاَ يُنْكِرُوْنَ مُنْكَرًا

“இறுதியில் தீய மனிதர்கள் மட்டுமே எஞ்சியிருப்பார்கள். அவர்கள் பறவைகள் போல் லேசாக இருப்பார்கள். விலங்குகளின் அறிவைப் போன்ற அறிவுதான் அவர்களிடம் இருக்கும். நன்மையை நன்மையெனவும் தீமை யைத் தீமையெனவும் கருதமாட்டார்கள்” [112]

---

[108] சூரத்துல் கஸஸ் 83
[109] நூல்: புகாரி
[110] நூல்: அபூ தாவூத்
[111] நூல்: தபரானி, அறிவிப்பு: இப்னு உமர் (ரலி)
[112] நூல்: ஸஹீஹ் முஸ்லிம் அறிவிப்பு: அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஆஸ் (லைி)

இறைநிராகரிப்பையும் உலகாயதத்தையும் மேற்கொண்டிருக்கும் இன்றைய மேற்கத்திய கலாச்சாரத்தை இதனைவிடவும் தெளிவாக எடுத்துரைக்கும் கருத்துச் செறிவான வாசகம் வேறொன்றும் இருக்க முடியாது. இந்தக் காலாச்சாரத்தின் முன்னேற்றத்தையும் அதன் பிரகாசமான உச்ச நிலையையும் உள்ளது உள்ளபடி படம் பிடித்துக்காட்டும் வேறொரு சித்திரம் இருக்க முடியாது! இக்கலாச்சாரத்தின் பெரும் பெரும் நகரங் களும் அதன் மையக்கேந்திரங்களும்கூட இதில் தெளிவாக அடையாளம் காட்டப்பட்டுள்ளன.

இது, நபி (ஸல்) அவர்களின் நீடித்த நிலையான அற்புதங்களுள் ஓர் அற்புதமாகும். குறைந்த வார்த்தையில் நிறைந்த கருத்துக் களைத் தாங்கிய - புதுமை மங்காத, ஆச்சரியங்கள் முடிவடையாத பொன்மொழிகளுள் ஒன்றாகும்!

இன்றைய உலகாயதக் கலாச்சாரத்திடம் ஒருபுறம்- லேசு எனும் எந்தத் தன்மையைக்கொண்டு பறவைகள் காற்றை வசப்படுத்தி வான் வெளியில் பறந்து கொண்டிருக்கின்றனவோ அந்த லேசு உள்ளது. அதன் மூலம் தான் இன்றைய நவீன மனிதன் பறவையை விட வேகமாக விரைபவனாகவும் லேசானவனாகவும் இருக்கி றான்.

மறுபுறம் இக்கலாச்சாரத்திடம், விலங்குகளைப் போன்ற வன்மைக் குணமும் கொடூரமும் நிறைந்துள்ளது. அதனால்தான் நாடுகளை யும் மக்களையும் அது அழித்துக் கொண்டிருகிறது., பயிர்களையும் சந்ததிகளையும் நாசமாக்கி வருகிறது., வரலாற்றில் நிகரில்லை எனும் வகையில் வன்மையும் கொடூரமும் தாண்டவமாடுகிறது!

இந்தக் கொடுமைகள் அனைத்தும் செழிப்பான வாழ்க்கையுடனும் தாராளமான வாழ்வாதாரத்துடனேயே நடைபெறுகின்றன. வரலாற்றின் வேறெந்தக் காலகட்டத்திலும் காணப்படாத வகையில் -மகிழ்வுக்கும் நிம்மதிக் கும் பொறுப்பேற்கும் அளவுக்கு வசதி வாய்ப்புகள் பெருகி இருப்பதுடன்தான் இவை நடைபெறுகின்றன! மேலே சொன்ன நபிமொழியின் கடைசிப்பகுதி இவ்வாறு கூறுகிறது:

وَهُمْ فِى ذَلِكَ دَارٌ رِزْقُهُمْ ، حَسَنٌ عَيْشُهُمْ

“இத்தனைக்கும் அவர்களின் ரிஜ்க் - வாழ்வாதாரம் (பணமாகச்) சுழன்று கொண்டிருக்கும். வாழ்க்கைச் சாதனங்கள் அனைத்தும் தயார் செய்து வைக்கப்பட்டிருக்கும்” [113]

## நல்லவை செய்வதாகக் கருதுவார்கள்!

இந்தக் கலாச்சாரம் - மேலே சொன்னது போன்று - இந்தச் சடத்துவ உலகிற்கும் உலக வாழ்க்கைக்கும் அப்பால் உள்ள அனைத்தையும் நிராகரித்துவிடுகிறது. இந்தக் கலாச்சாரத்தை வழி நடத்துவோரும் ஆதரிப் போரும் -வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் அதனைச் செழிப்பாக அமைப்பதற்காகவும்தான் தங்க ளுடைய முயற்சிகள், ஆற்றல்கள் அனைத்தையும் செலவு செய்கிறார்கள்.

இதனால்தான் இந்த அத்தியாயத்தின் கடைசி வசனங்களில் தெளிவாகவும் வெளிப்படையாகவும் அல்லாஹ் கூறுகிறான். அது, இந்த உலகாயதக் கலாச்சார வாதிகளையும் அதன் தலைவர்களையும் நோக்கி உரையாடு வதுபோல் உள்ளது. குறிப்பாக இஸ்லாமிய உலகில் அந்த உலகாயதத் தலைவர்களைப் பின்பற்றிச் செல்லும் வாய்மையும் திறமையும் மிக்க சீடர்களை முன்னிறுத்திப் பேசுவது போல் உள்ளது. அந்த உலகாயத வாதி களின் இலட்சணங்களும் முகப்பாவனைகளும்கூட தெளிவாகத்தெரியும் வகையில் நுட்பமாகப் படம்பிடித்துக் காட்டுகின்றன அந்த வசனங்கள்! அவை வருமாறு:

قُلْ هَلْ نُنَبِّئُكُمْ بِالأَخْسَرِيْنَ أَعْمَالاً الَّذِيْنَ ضَلَّ سَعْيُهُمْ فِى الْحَيَاةِ الدُّنْيَا وَهُمْ يَحْسَبُوْنَ أَنَّهُمْ يُحْسِنُوْنَ صُنْعًا أُولَئِكَ الَّذِيْنَ كَفَـرُوْا بِآيَاتِ رَبِّهِمْ وَ لِقَائِهِ فَحَبِطَتْ أَعْمَالُهُمْ فَلاَ نُقِيْمُ لَهُمْ يَوْمَ الْقِيَامَةِ وَزْنًا

“ (நபியே) நீர் கூறும்: தம்முடைய செயல்களில் பெரும் இழப்புக்கு உரியவர்கள் யார் என்பதை நாம் உங்களுக்கு அறிவிக் கட்டுமா? அவர்கள் யாரெனில், உலக வாழ்க்கையில் அவர்களின் முயற்சிகள் அனைத் தும் வழிபிறழ்ந்து விட்டன. ஆனால் அவர்களோ தாம் அனைத்தையும் மிக அழகாகவே செய்து கொண்டி ருப்பதாகக் கருதிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள்தாம் தம் இறைவனின் சான்றுகளை ஏற்க மறுத்து விட்ட வர்கள்., (மறுமையில்) அவனது சந்திப்பு குறித்து நம்பிக்கை கொள்ளாதவர்கள். ஆகவே அவர்களின்

---

[113] நூல்: முஸ்லிம் அறிவிப்பு: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

செயல்கள் எல்லாம் வீணாகிவிட்டன. மறுமை நாளில் அவர்களுக்கு எவ்வித மதிப்பையும் நாம் அளிக்க மாட் டோம்" [114]

இந்த வசனங்களில் - நாத்திகப் போக்கை மேற்கொண்ட உலகாயத வாதிகளின் முகமூடியும் அதன் தஜ்ஜாலியத் தலைவர்களின் முகத்திரையும் கிழித்தெறியப்பட்டுள்ளன. மேலும் பூமியில் குழப்பம் செய்யாதீர்கள் என்று அவர்களிடம் சொல்லப்பட்டால் நாங்கள் சீர்திருத்த வாதிகளே என்று பதில் கூறுவார்களே அத்தகைய பொய்யர்களின் தீய செயல்கள் தெளிவாகப்பட்டுள்ளன!

ஆயினும் எல்லோரையும் விட யூதர்களுக்கே இந்த வசனங்கள் மிகவும் பொருந்தி வருகின்றன. எனெனில் யூதர்கள்தான் மறுமையை முற்றிலுமாகப் புறக்கணித்துவிட்டார்கள். எச்சரிக்கைகளும் படிப்பினைகளும் நிறைந்த நீண்ட வரலாறு அவர்களிடம் இருந்தும்கூட மறுமையை முற்றாக மறந்துவிட்டனர்.

யூதர்களிடம் காணப்படும் மறுமை பற்றிய இத்தகைய அலட்சியப் போக்கு - அறிவியல், தத்துவம், தொழில் நுட்பம், அரசியல் போன்ற துறைகளில் தீர்க்கமான பங்காற்றிய அவர்களின் உலகளாவிய பணிகளில் பாதிப்பை ஏற்படுத்தி விட்டன. மேலும் அரசாங்கங்கள் மற்றும் சட்ட அமைப்புகளின் திடீர் மாற்றங்களிலும் புரட்சிகள் உருவானதிலும் பாதிப்பை ஏற்படுத்தி விட்டன. தங்கள் நிபுணத்துவங்களையும் செயலாற்றல்களையும் தகுதி களையும் புத்திக் கூர்மையையும் அழிவுகரமான எதிர்மறை நடவடிக்கைகளில் அவர்கள் பயன்படுத்தியதற்குக் காரணமும் இதேபோல மக்களிடையே பீதியையும் ஒழுங்கின்மையையும் பரப்பியதற்குக் காரணமும் மறுமை பற்றிய அவர்களின் அலட்சிய போக்குதான்!

மேலும் ஒரே இனத்திடம் மட்டுமே -அதுதான் பரிசுத்த இஸ்ராயீல் (யூத) இனம்- ஒரே மக்களிடம் மட்டுமே - அவர்கள்தான் அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் (யூதர்கள் எனக் கருதிக்கொண்டு) அவர் களிடம் மட்டுமே தலைமைத்துவமும் எல்லா சக்திகளும் இருக்க வேண்டும் எனும் சுய நலனுக்காகக் கடும் முயற்சி மேற்கொண்டதற்குக் காரணமும் மறுமை பற்றிய அவர்களின் அலட்சிப் போக்குதான்.

## மனிதனின் குறுகிய அறிவும்
## இறைவனின் பெரிய ஞானமும்

பின்னர் உலகத்தைப் பற்றிய இந்தக் குறுகிய சிந்தனையையும் குறைபட்ட அறிவையும் குர்ஆன் மீண்டும் ஒருமுறை சாடுகிறது. பரந்து விரிந்த இந்தப் பேரண்டத்தை முழுமையாகதான் அறிந்து விட்டதாக மனிதனை வாதாடச் செய்வது இந்தக் குறைபட்ட அறிவுதான். பூமியையும் வானங்களையும் அவற்றிலுள்ள எல்லாப் படைப்புகளையும் குறிப்பாக விண்மீன்கள், கோள்கள், காற்று மண்டலம், சூனியப்பகுதி ஆகிய அனைத்தையும் தான் அறிந்து விட்டதாக அவனைக் கருதச்செய்கிறது! அது மட்டுமல்ல இறை வனின் அறிவும் ஆற்றலும் எவற்றையெல்லாம் சூழ்ந்திருக்கிறதோ அவை எல்லாவற்றையும் தனது அறிவின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்து விட்டதாக மனிதனை அவனது குறுகிய அறிவுதான் நம்பச் செய்கிறது!

இத்தகைய அறிவைப் பெற்றிருப்பவர்கள் தமது அறிவு குறித்து பெருமிதப்பட்டுக்கொள்கிறார்கள்., பெருமை அடிக்கிறார்கள்! இந்தப் பேரண்டத்தைப் பற்றிய தமது ஆய்வைப் பெரிதும் பறைசாற்றிக் கொள்கிறார்கள்.

ஆனால் உண்மை என்னவெனில், இவர்கள் அறிந்து வைத்திருக் கும் அனைத்தும் கடலின் ஒருதுளிகூட இருக்காது. பரந்த பாலைவெளியின் ஓர் அணுவைக்கூட அவர்கள் எட்டிப் பிடித்திருக்க முடியாது!

இத்தகைய தற்பெருமை, இறுமாப்பு, தாங்கள் கற்றுள்ள விஷயங்கள் மீதும் ஆய்வுகள் மீதும் பெருமிதப்படு வது, ஒரு குறிப் பிட்ட காலகட்டத்தில் மனித அறிவு கண்டுபிடிக்கும் அறிவியல் கருவூலம் மீது அதிகப்படியாக நம்பிக்கைவைப்பது, அதற்கு அப்பாலுள்ள அனைத்தையும் மறுப்பது மற்றும் இத்தகைய குறுகிய சிந்தனை, குறுகியபார்வை ஆகியவைதான் இந்த உலகாயதக் கொள்கையை -அதனுடைய அனைத்துக் கருத்துகளுடனும் உருவாக்கித் தந்த நச்சுக் கிருமியாகும். வேறு வார்த்தையில் சொல்வதானால் உலகாயதக் கொள்கையை அதன் அனைத்து விதமான தீமைகளுடனும் குழப்பங்களுடனும் உலகில் தோற்றுவித்த மூல நுண்ணுயிரி இதுவே ஆகும்!

இதுவே மனிதனின் வழிதவறிய சிந்தனைப் போக்காகும். இதுவே அவனைச் சிலபொழுது அக்கிரமம் செய்வதற்கும் அழிச்சாட்டியம் புரிவதற்கும் தூண்டுகிறது. சிலபொழுது தனக்கும் தெய்வீகத் தன்மை உண்டென வாதிடும் நிலைக்கு அவனைக் கொண்டு செல்கிறது. மேலும் யாருக்கு உண்மையான அறிவு ஞானத்தையும்

[114] சூரத்துல் கஹ்ஃப் 103 - 105

விரிவான -ஆழமான சிந்தனையையும் அல்லாஹ் வழங்கியுள்ளானோ அவர்கள் மீது கொடுமை செய்யத் தூண்டு வதும் இந்த மனப்போக்குதான்! இதனையே குகைத்தோழர்களின் சரிதையில் நாம் பார்த்தோம்!

இத்தகைய வழிதவறிய சிந்தனைப்போக்கு, சில நேரம், கண் முன்னே உள்ள பொருள்களை- தற்காலிகச் சாதனங்களை மட்டும் நம்புமாறு தூண்டுகிறது. கானல்நீரை ஒத்த இந்த உலக வாழ்வை நேசிக்கும்படி அழைக்கிறது. உலகிலேயே நிலையாக வாழ்ந்து கொண்டிருக்கலாம் என்றும் இன்ப நுகர்வுச் சாதனங்கள் அனைத்தும் நீடித்து நிற்கும் என்றும் மனிதனை உறுதியாக நம்பச் செய்கிறது. இதனால் இத்தகைய வாழ்க்கைச் சாதங்களைக் குறைவாகப் பெற்றிருக்கும் மக்களை இழிவாகக் கருதும்படியும் தூண்டு கிறது. இதனையே இருதோட்டங்கள் உடைய செல்வந்தனின் சரிதையில் நாம் பார்த்தோம்!

இதேபோல முதல் பார்வையில் ஒருபொருள் தவறு எனபட்டால்- அறிவின் தேட்டத்திற்கும் வெளிப்படை யான உணர்வுக்கும் முரணாகத் தென்பட்டால் உடனே அது குறித்து ஒருவிதமான வியப்பையும் திகிலையும் ஏற்படுத்துவதும் இந்த குறைபட்ட மனித அறிவுதான்! இதனையே மூஸா - கிள்ர் சரிதையில் நாம் கண்டோம்!

இவ்வாறே குறுகிய பார்வைத்திறன்கொண்ட மனிதனின் விழிகள் தொலைவில் உள்ளதை அருகில் இருப்ப தாகவும் போலியை உண்மையாகவும் தவறாகக் காண்பித்துக் கொடுக்கிறது. இவ்விதம்தான் சூரியன் சேறு நிறைந்த கரு நிற நீரூற்றில் மறைவதுபோல் துல்கர்னைன் மன்னருக்குத் தென்பட்டது!

حَتَّى اِذَا بَلَغَ مَغْرِبَ الشَّمْسِ وَجَدَهَا تَغْرُبُ فِى عَيْنٍ حَمِئَةٍ

"(அவர் மேற்கு நோக்கிப்புறப்பட்டார்) எதுவரையெனில் (நடந்து நடந்து)சூரியன் அஸ்தமிக்கும எல்லையை அவர் அடைந்தபொழுது அங்கே சூரியன் கருநிறச் சேறுநிறைந்த நதியில் மறைந்து கொண்டிருப்பதாகக் கண்டார்" [115]

இவ்விதமே சபா நாட்டு அரசி கண்ணாடி மாளிகையினுள் நுழைந்த பொழுது அங்கே தண்ணீர் ஓடிக் கொண்ருக்கிறது எனக் கருதி ஏமாந்தார். தண்ணீர் மீதுதான் நடக்கப் போகிறோம் என நினைத்து (தன் காற்சட்டையை)க் கரண்டைக் கால்களுக்கு மேல் உயர்த்தினார்.

قِيْلَ لَهَا ادْخُلِ الصَّرْحَ فَلَمَّا رَأَتْهُ حَسِبَتْهُ لُجَّةً وَ كَشَفَتْ عَنْ سَاقَيْهَا قَالَ اِنَّهُ صَرْحٌ مُمَرَّدٌ مِنْ قَوَارِيْرَ

"இம்மாளிகையினுள் நுழைவீராக என்று அவருக்கு (அரசிக்கு) கூறப்பட்டது. அவர் அதனைப் பார்த்தபோது அது தண்ணீர் தடாகம்தான் எனக் கருதினார். அதனால் தன் காற்சட்டையை உயர்த்தினார். அவர் (சுலை மான்) கூறினார்: இது கண்ணாடி பதிக்கப்பட்ட மாளிகையாகும்" [116]

இந்த அத்தியாயத்தின் இறுதிப் பகுதி அதன் தொடக்கத்துடன் மிகவும் பொருத்தமானதாய் அமைந்து பின் வரும் விஷயங்களுக்கு ஆதாரமாகத் திகழ்கிறது:

அல்லாஹ்வின் ஞானம்தான் மனிதனின் அறிவை விடவும் மிக உயர்ந்தது. மகத்துவம் பொருந்தியது. இவ்வுலகம், மனிதன் அறிந்து வைத்திருப்பதை விடவும் மிக விரிவானது. விரிவான கருத்துகளை உள்ளடக் கிய அல்லாஹ்வின் கலிமாக்கள் [117] குறித்து மனிதனின் அறிவினால் முழுமையாக அறிந்திட முடியாது, இந்தப் பூமியிலுள்ள மரங்கள் அனைத்தும் எழுது கோல்களானாலும் கடல்கள் யாவும் மையானாலும் [118] அவை அனைத்தும் அல்லாஹ் வின் கலிமாக்களை எழுதி முடித்திடப் போதுமாகாது!

---

[115] **சூரத்துல் கஹ்ஃப் 86**

[116] **இந்த வரலாறு முழுவதும் சூரத்துந் நம்லில் இடம் பெற்றுள்ளது.**

[117] **ரூஹு ல் மஆனியில் அல்லாமா ஆலூசி அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ் வின் கலிமாக்கள் எனும் சொல் அவனது அறிவு மற்றும் ஞானங்களைக் குறிக் கும். இவ்வாறும் கூறப்பட்டள்ளது: அல்லாஹ்வின் கலிமாக்கள் என்பது அல்லாஹ் வின் அற்றல்கள், அதிகாரங்கள், இரகசியங்கள் ஆகியவற்றைக் குறிக்கும். அவற்றில் எதையேனும் வெளிப்படுத்த அல்லாஹ் நாடினால் ஆகுக என்றுதான் அதற்கு ஆணையிடுவான்., அது ஆகிவிடும்.**

[118] **இன்றைய அறிவியல், முற்காலத்தில் மனிதனின் உள்ளத்தில் உதிக்காத எத்தனையோ விஷயங்களைக் கண்டுபிடித்துவிட்டது. எடுத்துக்காட்டாக, இந்தப் பேரண்டத்தின் எல்லையில்லா நிலை, நட்சத்திரங்களுக்கும் கோள்களுக்கும் உள்ள பிரமிப்பூட்டும் தூரம், கோள்களுக்கும் பூமிக்கும் உள்ள திகைப்பூட்டும் தொலைவு, ஒளியின் பயண வேகம், ஒவ்வொரு பால்வெளியிலும் கோடான கோடிக் கணக்கில் இருப்பதாகக் கணிக்கப்படும் விண் மீன்களின் எண்ணிக்கை, நீண்ட நெடுந்தொலைவிலுள்ள ஏரானமான விண் மீன் குழாம் உலகங்கள், அங்கெல்லாம் உள்ள விண்மீன் கூட்டங்களின் எண்ணிக்கை, ஒன்றுக்கும் அதிகமான சூரிய குடும்பங்கள், நட்சத் திரங்கள் மற்றும் சூரியனின் பரப்பளவு, அவற்றின் எடை, இந்தப் பிரமாண்டமான கோளங்களை ஒழுங்கமைத்து வரக்கூடிய, வான வெளியில் அவற்றிற்கிடையே உள்ள விகிதாச்சாரத்தையும் சமநிலையையும் கட்டுப்படுத்திவைக்கக்கூடிய அந்தரங்க ஆற்றல்கள் மற்றும் வியத்தகு நியதிகள், பூமியில் உயிர் வாழ்வதற்குப் பாதுகாப்பு அளிக்கக்கூடிய நுட்பமான இரகசியங்கள், தரைக்கும் கடலுக்கும்**

قُلْ لَوْ كَانَ الْبَحْرُ مِدَادًا لِكَلِمَاتِ رَبِّى لَنَفِدَ الْبَحْرُ قِبْلَ أَنْ تَنْفَدَ كَلِمَاتُ رَبِّى وَ لَوْ جِئْنَا بِمِثْلِهِ مَدَدًا

"(நபியே!) கூறுவீராக: என் இறைவனின் வார்த்தைகளை எழுதுவதற்காக (உலகின்) கடல்கள் அனைத்தும் மையானாலும் கடல் நீர் தீர்ந்து போய்விடுமேதவிர என் இறைவனின் வார்த்தைகள் முடிவடைந்துவிடாது! இந்தக் கடல்களுக்குத் துணையாக இவைபோன்ற வேறு கடல்களை நாம் கொண்டுவந்தாலும் சரியே! (அவையும் போதமாட்டா)" [119] - லுக்மான் அத்தியாயத்தில்.

وَلَوْ أَنَّ مَا فِى الأَرْضِ مِنْ شَجَرَةٍ أَقْلاَمٌ وَ الْبَحْرُ يَمُدُّهُ مِنْ بَعْدِهِ سَبْعَةُ أَبْحُرٍ مَا نَفِدَتْ كَلِمَاتُ اللهِ ، اِنَّ اللهَ عَزِيْزٌ حَكِيْمٌ

"பூமியிலுள்ள அனைத்து மரங்களும் எழுதுகோல்களானாலும் ஒருகடல் (மைகொண்டு எழுதி) முடிந்த பின்னர் மேலும் ஏழு கடல்கள் அதற்குத்துணையாக வந்தாலும் அல்லாஹ்வின் வார்த்தைகளை எழுதி முடித்திட முடியாது. அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவன். நுண்ணறிவாளன்" [110]

## நபித்துவத்தின் தேவையும் நபியின் தனிச் சிறப்பும்

இங்கே ஒரு கேள்வி எழுகிறது: இந்தப் பேரண்டம் இத்துணை விரிவாகவும் எண்ணற்றப் படைப்பினங்களை உள்ளடக்கியதாகவும் இருக்கும்பொழுது, அனைத்து மரங்களும் எழுது கோல்களானாலும் ஏழுகடல்களும் மையானாலும் இறைவனின் வார்த்தைகளை எழுதிட அவை போதுமாகாது எனும்பொழுது - இவை அனைத்துமே மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டது எனும் பொழுது - மனிதனின் அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்டது எனும் பொழுது, மனிதன் தன் இறைவனை அறிந்து கொள்வது எப்படி? அவனுடைய தன்மைகளையும் சான்றுகளையும் அறிவதற்கு என்ன வழி? வாழ்க்கையின் புதிருக்கு விடை காண்பதெப்படி? நற்பேறுகளையும் வெற்றியையும் மனிதனால் எங்ஙனம் அடைய முடியும்? நபிக்கு, மற்றவர் மீது என்ன சிறப்பு? அவர்தான் மனிதர் ஆயிற்றே! மனித அறிவு குறைபட்டது., மனிதனது செயல் ஒரு வரையறைக்கு உட்பட்டது என்பது முன்னரே ஒப்புக்கொள்ளப்பட்டதாயிற்றே!

இத்தகைய அனைத்துக் கேள்விகளுக்கும் இந்தத் திருவசனம் பதில் தருகிறது. நபி (ஸல்) அவர்களின் நாவின் மூலமே அது அறிவிக்கிறது இவ்வாறு:

قُلْ اِنَّمَا اَنَا بَشَرٌ مِثْلُكُمْ يُوْحَى اِلَيَّ اَنَّمَا اِلٰهُكُمْ اِلٰهٌ وَاحِدٌ

"(நபியே!) கூறுவீராக: நான் உங்களைப் போன்ற ஒரு மனிதனே! திண்ணமாக உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் (அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை)என்று எனக்கு வஹி அறிவிக்கப்படுகிறது" [111]

ஆம்! எந்த அறிவுஞானம் இன்றி மனிதனால் எவ்வித நற்பேற்றை யும் அடைய முடியாதோ அந்த அறிவு ஞானத்தின் மூல ஊற்று இந்த வஹியே ஆகும். அதுவே ஒரு நபிக்குரிய தனிச் சிறப்பின் ரகசியம்! - நான் உங்களைப் போன்ற மனிதனாகவே இருக்கிறேன். ஆனால் அல்லாஹ் எனக்கு 'வஹி ' அனுப்புகிறான்"

## இறுதியில் மறுமை!

அல்லாஹ் இந்த அத்தியாயத்தை - மறுவுலகம் பற்றி எடுத் துரைத்தல், அதனைக் கௌரவித்தல், உலக வாழ்க்கைக்கும் அதன் ஒவ்வொரு பணிக்கும் மறுவுலகம் ஒன்றையே அடிப்படையாக அமைத்திட அழைப்புவிடுத்

---

**இடையே உள்ள விகிதாச்சார இரகசியம் மற்றும் நுட்பமான அமைப்பு - இவை தவிர நவீன கோளியல் கொண்டுள்ள அறிவுகள், தத்துவங்கள் போன்ற பல உண்மைகளை இன்றைய அறிவியல்துறை உலகிற்கு வழங்கியுள்ளது.**

**இவை மட்டுமல்ல, உயிரியல் மற்றும் சாவுக்குப்பின்னாய்வுக்கலை (Postma rtem) தாவர இயல், விலங்கியல் ஆகியவற்றைத் தவிர இன்னும் பல நுட்பமான, அதிக அளவு விரிவான அறிவியல் துறைகள் உள்ளன. இவை அனைத்தும் முற்கால மனிதனின் கற்பனையிலும் கனவிலும்கூட தோன்றியிருக்கவில்லை. ஆனால் இன்றோ இத்தகைய கல்விகளின் ஒவ்வொரு பிரிவுக்கும் பெரியபெரிய நூல் நிலையங்கள் உருவாகிவிட்டன. அவற்றிற்கேன எண்ணற்ற ஆராய்ச்சிக் கூடங்களும் நிறுவப்பட்டுவட்டன!**

**இந்த அறிவுகள் அனைத்திற்கும் அப்பால் மனிதனால் அறியப்படாத விஷயங்கள் பெரும் அளவில் உள்ளன. அவை, அவனால் அறியப்படாதவற்றோடு எவ் வகையிலும் ஒப்பிட முடியாத அளவுக்கு அவை மிகமிக அதிகம்! (நபியே!) கூறுவீராக: என் இறைவனின் ஞானங்களை (கலிமாக்களை) எழுதுவதற்காகக் கடல் அனைத்தும் மையானாலும் . . . . . (18 : 109)**

[119] **சூரத்துல் கஹ்ஃப் 109**

[110] **சூரத்து லுக்மான் 27**

[111] **சூரத்துல் கஹ்ஃப் 110**

தல் ஆகியவற்றைக்கொண்டு முடித்து வைக்கிறான். (இம்மை, மறுமை) ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அமல் உண்டு!

இந்த அத்தியாயத்தின் இறுதியை, அதன் தொடக்கத்துடன் இணைத்து வைத்தான்., அத்தியாயம் முழுவதிலும் ஊடுருவி நிற்கும் உயிரோட்டத்தோடு இயைந்ததாய் அமைத்து வைத்தான். இறுதியாக அல்லாஹ் கூறுகிறான்:

فَمَنْ كَانَ يَرْجُوْ لِقَاءَ رَبِّهِ فَلْيَعْمَلْ عَمَلاً صَالِحًا وَ لاَ يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِ أَحَدًا

"எனவே யார் தன் இறைவனைச் சந்திக்க விரும்புகிறாரோ அவர் நற்பணி புரியட்டும். மேலும் வழிபாட்டில் தன் இறைவனோடு யாரையும் - எதனையும் இணையாக்காமல் இருக்கட்டும்" [112]

[112] **சூரத்துல் கஹ்ஃப் 110**